# ஆரோக்கியத்தை விரும்புவோர் எப்பொழுதும்

# லைப்பாய் சோப் உபயோகித்தே நீராடுவார்

குழந்தைகள் அழுக்காவது இயற்கையே; ஆனால் அழுக்குடனேயே இருப்பது கெடுதல். காரணம், ஆரோக்கியத்திற்கு தீவிரமாக ஆபத்து விளைவிக்கும் நோய்க் கிருமிகள் அழுக்கில் இருக்கின்றன.

அழுக்குடன் கிருமிகளையும் கழுவிக் களைந்து, உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பது லைப்பாய் சோப். அன்றாடம் லைப்பாய் சோப் தேய்த்துக் குளியுங்கள்.




L. 267-40 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


குழந்தைகளுக்கு கவர்ச்சி அளிக்க
பின்னியின் காட்ஸ்வால்
எல்லா நிறங்களிலும் கிடைக்குமிடம்
வெங்கடேஷ் வஸ்திராலயா
ரீடெய்ல் ஷோ ரூம்கள்
ஹைகோர்ட் எதிரில் & 2. தம்புசெட்டி தெரு. மதராஸ்–1.
ஷோரூம் நெ. 1
இங்கு நாங்கள் பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.
ஷோரூம் நெ. 2
இங்கு நாங்கள் பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.
ஷோரூம் நெ. 3
இங்கு நாங்கள் பின்னி மில்லில் உற்பத்தியான துணிகளையும் மற்றும் இதர உயர்ந்த ரக துணிகளையும் விற்கிறோம்.



மலர் 17 | இதழ் 19

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ஹேவிளம்பி | கார்த்திகை 23

# யுக புருஷர்

ராஜாஜியின் வாழ்க்கையை உற்று நோக்கும் போது கீதையில் கண்ணன் கூறிய வாக்குத்தான் நினைவுக்கு வருகிறது. பாரத நாட்டு அரசியல் வாழ்வில் சிக்கல்கள் ஏற்பட்டபோதெல்லாம் அங்கு ராஜாஜி தோன்றிச் சிக்கல்களைத் தீர்த்திருக்கிறார்.

1922-23ம் ஆண்டில் காந்தி மகான் சிறையிலடைபட்டு, சட்டசபைப் பிரவேசம் கூடாது என்ற வைதீக காந்தியக் கொள்கையைப் பெரும் தலைவர்கள் எதிர்த்த காலத்தில் ராஜாஜி காந்தீயத்தை நிலைநாட்டி வெற்றி வாகை சூடினார். மோதிலால் நேரு, சித்தரஞ்சன்தாஸ் போன்ற மாபெரும் தலைவர்களை எதிர்த்து கயா காங்கிரஸில் ராஜாஜி வெற்றி கண்டதை அந்நாட்களின் சரித்திரத்தை அறிந்தவர்கள் இன்றும் மிக உற்சாகமாகப் பேசுவதைக் காணலாம்.

அதற்குப் பின்னால் பதினைந்தாண்டுகளுக்குப் பிறகு 'சட்டசபைப் பிரவேசம் செய்ய வேண்டும்' என்ற நிலைமை ஏற்பட்ட போதும் எங்கோ கிராமத்தில் அடக்கமாக நிர்மாண வேலைகளில் ஈடுபட்டிருந்த ராஜாஜிதான் வரவேண்டியிருந்தது. சென்னையில் மந்திரி சபை அமைக்க ராஜாஜி முன்வந்தார். "ராஜாஜி மந்திரி சபை போல் உண்டா?" என்று உலகம் புகழும்படி ஆட்சி செலுத்தினார்.

"காங்கிரஸும், முஸ்லிம் லீகும் ஒத்துப்போனாலொழிய இந்த நாட்டுக்கு விமோசனமில்லை. ஆகவே, முஸ்லிம் லீக் ஒத்துவராவிட்டால், அது கேட்கும் எதையும் கொடுத்து, பாரத நாட்டின் விடுதலையைப் பெற்று ஆக வேண்டும். இதைத் தவிர வேறு வழியில்லை!" என்றார். காங்கிரஸ் பெரும் தலைவர்கள் கருத்துக்கு எதிரிடையாக இப்படிச் சொன்னார். இது தேசமெங்கும் பெரும் எதிர்ப்பைக் கிளப்பியது. ஆனால் எதிர்ப்பைக் கண்டு கலங்காமல் உண்மையில் உறுதியாக நின்றார்.

ராஜாஜி கண்ட உண்மையைப் பின்னால் தலைவர்கள் ஒத்துக் கொண்டார்கள். ஆனால் ராஜாஜி சொன்னபோதே இதை அங்கீகரித்திருந்தால் நாட்டில் இவ்வளவு ரத்தக் களரியும் உற்பாதங்களும் ஏற்பட்டிருக்காது என்று எல்லாத் தலைவர்களும் ஒருமுகமாகச் சொல்லி வருந்தினார்கள்.

மேற்கு வங்கத்தில் ஹிந்து முஸ்லிம் கலவரம் உச்ச நிலை யடைந்திருந்தது. கல்கத்தாவில் ரத்த ஆறு ஓடிக்கொண்டிருந்தது. யாரும் போகப் பயப்பட்ட அந்தப் பகுதிக்கு ராஜாஜி கவர்னராகச் சென்றார். வங்க மக்கள் அவரை உற்சாகமாக வரவேற்பார்களா என்ற சந்தேகங்கூட நாட்டில் பலரிடை யிருந்தது.

ஆனால் ராஜாஜி வங்கத்தில் அடி எடுத்து வைத்ததுமே கலவரம் நின்றது. ரத்த ஆறு நின்று, இந்துக்களும் முஸ்லிம்களும் சகோதரர்கள் என்பதை உணர்ந்தனர். இரு சமூகத்தினரும் கட்டித் தழுவிக்கொண்டு 1947 ஆகஸ்டு 15உ சுதந்திர தினத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினர்.

வங்கத்தை விட்டு ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவி ஏற்றுக் கொள்ளத் தில்லிக்குச் சென்ற போது கண்களில் நீர்மல்க வங்க மக்கள் வழியனுப்பினர்.

புது தில்லியில் ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவி ஏற்ற பிறகு ராஜாஜியின் சேவை வேறுவிதமாக உருப்பெற்றது. புது தில்லிக்குப் பல தேசத் தூதர்கள் வந்து கவர்னர் ஜெனரல் ராஜாஜியைப் பேட்டி கண்டனர். ராஜாஜியைப் பேட்டி கண்ட ஒவ்வொருவரும் ராஜாஜியின் அறிவு ஒளியில் மயங்கிப் போயினர். காந்திமகான் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவர் ராஜதந்திரக் கலையிலும் அரசியலிலும் மேனாட்டு வல்லரசுத் தலைவர்களுக்கும் அறிவூட்டும் நிலையிலிருப்பதைக் கண்டனர். பாரதத்தின் பெருமை மேல் நாடுகளில் இமயம் போல் உயர்ந்தது!

இன்று உலகில் பாரதத்தின் பெருமை, நேருஜியின் புகழ் மிக உன்னத நிலையிலிருக்கிறது என்றால் அது அன்று ராஜாஜி விதைத்த விதைதான் முளைவிட்டு வளர்ந்து மரமாகிப் பலனளிக்கிறது என்பதே பொருள்.

கவர்னர் ஜெனரல் பதவியை விட்டுச் சென்னைக்கு வந்த பிறகும், இருமுறை நேருஜி, படேல் முதலியவர்களின் அழைப்பின் பேரில் புதுதில்லிக்குச் சென்று வந்ததும், சென்னை ராஜ்யத்தில் காங்கிரஸ் மந்திரி சபை, அமைக்க முடியாமல் தமிழ் நாட்டுத் தலைவர்கள் தவித்து, ராஜாஜியை மன்றாடிக் கேட்டுக் கொண்டதன் பேரில் பதவி ஏற்று சென்னை ராஜ்யத்தையும் தமிழ் நாட்டின் தலைநகரான சென்னையையும் காப்பாற்றிக் கொடுத்த விஷயங்களும் நாடறிந்த கதை.

* * *

ராஜாஜியின் வாழ்க்கையைக் கவனிக்கும் போது ரோமாபுரி மன்னன் சின்சினேடிஸ் நினைவுதான் வருகிறது என்று சில ஆண்டுகளுக்கு முன் தாம்பரம் கிறிஸ்துவக் கலாசாலைத் தலைவராக இருந்த திரு பாயிட் கூறினார்!

கிறிஸ்து சகாப்தத்துக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் ரோமாபுரியில் சின்சினேடிஸ் என்ற தளபதியிருந்தார். அவர் வாழ்க்கைக்கு ஆதாரமாக விவசாயத் தொழிலைக் கொண்டிருந்தார். கி. மு. 458-ல் ரோமாபுரியைப் பகைவர்கள் தாக்கி ரோம் படை சின்னாபின்னமாக்கப்பட்டு வந்தது. அந்தச் சமயத்தில் ரோமாபுரி மக்கள் என்ன செய்வதென்று தெரியாமல் வயலில் உழுது கொண்டிருந்த சின்சினேடிஸைப் படைக்குத் தலைமை தாங்கி நாட்டைக் காப்பாற்றிக் கொடுக்குமாறு வேண்டிக் கொண்டார்கள். அப்படியே சின்சினேடிஸ் வயலை விட்டு, படைக்குத் தலைமைதாங்கிப் பகைவர்களை விரட்டி ரோமாபுரியைக் காப்பாற்றினார். ரோம் மக்கள் அவரைத் தங்கள் நாட்டுக்குத் தலைவராக்கினர். ஆனால் அவர் பதவிக்கு வந்த பதினாறாவது நாள், அந்தப் பதவியை ராஜினாமாச் செய்து விட்டு விவசாயத்தில் ஈடுபடலானார்.

பிறகு அவர் எண்பதாவது வயதை அடைந்தபோது, ரோம் நாட்டுக்கு மீண்டும் முன் போன்ற ஆபத்து ஏற்பட்டது. மீண்டும் மக்கள் அவரையே நாட்டைக் காப்பாற்றித் தரும்படி கேட்டுக் கொண்டனர். சின்சினேடிஸ் இந்தத் தடவையும் ரோம் நாட்டைக் காப்பாற்றினார். இந்தத் தடவையும் இருபத்தொரு நாட்களே அந்தப் பதவியிலிருந்து விட்டு பின்னர் ராஜினாமாச் செய்து விவசாயம் செய்ய வந்து விட்டார்!

திரு பாயிட் ராஜாஜி அவர்களை சின்சினேடிஸுடன் ஒப்பிட்டுச் சொன்னது எவ்வளவு உண்மை என்று எண்ணி வியக்காமலிருக்க முடியவில்லை.

* * *

ராஜாஜி ஒரு தீர்க்கதரிசி.

அவர் எதிர்காலத்தை மிகத் தெளிவாகப் பார்க்கிறார். அவர் அப்படிப் பார்ப்பதோடு அல்லாமல், எதிர்காலத்தில் நேரக்கூடிய விளைவுகளையும் உற்பாதங்களையும் உணர்ந்து அதற்கு இன்றே பரிகாரமும் சொல்லுகிறார். இந்த ஒரு தன்மையின் காரணமாகவே இன்றும் ராஜாஜி ஒரு எச்சரிக்கை செய்து வருகிறார். மத்திய ஆட்சி மொழி இந்தியாக்கப் பட்டால் நாட்டின் ஒற்றுமை குலைந்து விடக் கூடும் என்று ராஜாஜி எச்சரிக்கை செய்கிறார். இந்தி ஆட்சி மொழியானால் எத்தகைய மன வேற்றுமைகள் ஏற்றத் தாழ்வுகள் எல்லாம் உண்டாகும் என்பதை உணர்ந்து அதற்கு மாற்று மருந்தாக, பரிகாரமாக ஆங்கிலமே மத்திய ஆட்சி மொழியாக இருக்கட்டும் என்கிறார்.

அணுகுண்டு, ஜலஜகுண்டு விஷயத்திலும் பிறகு விளையக்கூடியதை இன்றே கண்டு சொல்கிறார். "அடுத்தாற்போல் யுத்தம் மூண்டால் அது மூன்றாவது உலக யுத்தமாக இருக்காது! அது உலகத்தையே அழித்துவிடக் கூடிய சர்வ நாச யுத்தமாகத்தான் இருக்கும்" என்று ராஜாஜி சென்ற வாரம் காந்தி மண்டபத்தில் மிக வன்மையாகச் சொன்னார். இதற்குப் பரிகாரமும் சொல்லி வருகிறார்.

அமெரிக்காவோ, ருஷ்யாவோ "இனி எக்காரணம் கொண்டும் இக் குண்டுகளை உற்பத்தி செய்ய மாட்டோம், உபயோகிக்க மாட்டோம். கைவசம் இருப்பவைகளையும் தூர எறிந்து விட்டோம்!" என்றுசொல்லிச் செயலிலும் காட்டிவிட வேண்டும்! இந்த ஒரு வழியைத் தவிர வேறு இல்லை என்கிறார் ராஜாஜி.

இவ்வளவு கஷ்ட வழியைக் கடைப் பிடிக்க உள்ளத்தில் அளவு கடந்த தார்மிகப் பண்பு வேண்டும்! அந்தத் தார்மிகப் பண்பை வல்லரசுகளிடம் வளர்ப்பதே ராஜாஜியின் இன்றைய முக்கிய பணியாக இருந்து வருகிறது!

ராஜாஜியின் முயற்சிகள் பிரிட்டனில் ஒரு பெரும் பகுதியினரிடம் நல்ல பயனை விளைவித்திருக்கிறது என்பது உலகறிந்த உண்மை.

இப்படி அல்லும் பகலும் உலக மக்கள் நலனையே சிந்தித்து சிந்தித்துத் தொண்டாற்றி வரும் ராஜாஜிக்கு மக்கள் நன்றியைத் தெரிவிக்கத் துடிக்கின்றனர்! ஆனால் ராஜாஜியோ கண்ணன் காட்டிய வழியில் பணி செய்து வருகிறார். மக்கள் தங்கள் நன்றியையும் உற்சாகத்தையும் காட்டச் சந்தர்ப்பமே அளிக்காமல் தம் பணியைச் செய்து வருகிறார். ராஜாஜி பிறந்த நாளையாவது கொண்டாடலாம் என்றால், "என் பிறந்த நாள் எனக்கே தெரியாது" என்று சொல்லி, அவருடைய ஜெயந்தி விழாக் கொண்டாட வருபவர்களையெல்லாம் தடுத்து விடுகிறார்.

இருப்பினும் நமக்கு ராஜாஜி ஜெயந்தி கொண்டாட வேண்டும் என்று பல கடிதங்கள் நேயர்களிடமிருந்து வந்த வண்ணம் இருக்கின்றன. ராஜாஜி 1879ம் ஆண்டு டிசம்பர் 8ம் தேதி பிறந்திருப்பதாக எழுதி வைத்திருக்கிறார்கள். இந்தத் தேதியைக்கூட ராஜாஜி அவர்கள் சரியில்லை என்று சொல்லலாம்; ஆனாலும் அவர் ஏதோ ஒரு தேதியில் பிறந்து தானே இருக்க வேண்டும். அந்தத் தேதி இதுவாகத்தான் இருக்கட்டும் என்று டிசம்பர் 8ம் தேதி கல்கி இதழை ராஜாஜிக்குத் தெரியாமல் 'ராஜாஜி ஜெயந்தி இதழாகவே' கொண்டு வந்து விட்டோம்!

கோடிக்கணக்கான தமிழ் மக்களுடனும் பாரத மக்களுடனும் சேர்ந்து, யுகபுருஷராக விளங்கும் ராஜாஜிக்குத் தேக ஆரோக்கியத்தையும் நீண்ட ஆயுளையும் அருளுமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.



வாழ்க, ராஜாஜி!
வாழ்க, பல்லாண்டு!

# நேருஜியின் வருத்தம்

**ப**ண்டித ஜவாஹர்லால் நேரு அவர்கள் மிகவும் மனம் நொந்து பேசியிருக்கிறார்.

அரசியல் நிர்ணயச் சட்டத்தை அவமதிப்பது குற்றமாகும் என்று சென்னை சர்க்கார் செய்துள்ள சட்டத்தை எதிர்த்து சுமார் இரண்டாயிரம் பேர் வரை சிறை சென்றிருக்கிறார்கள்!

அவர்களில் சிலர் திருச்சியில் அருவருக்கத் தக்க சிறுபிள்ளைத்தனமான விஷமங்களும் செய்து விட்டுப் போயிருக்கின்றனர்.

இவற்றை யெல்லாம் பார்த்து நேருஜி 'காட்டு மிராண்டித்தனமாக இருக்கிறதே' என்று வருத்தப்பட்டிருக்கிறார். கல்தோன்றி மண் தோன்றாக் காலத்துக்கு முற்பட்ட காலத்திலிருந்து நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறந்து விளங்கும் இத்தமிழினத்துக்கு இவ்வளவு பெரிய இழுக்கு ஏற்பட்டது பெருத்த அவமானமாகும்.

இவர்கள் செய்கையைவிட நேருஜி அவர்களுக்கு மிகவும் மன வருத்தத்தை உண்டாக்கியிருப்பது, இந்தப் பைத்தியக்காரச் செயல்களைக் கண்டித்து ஒருவரும் ஒரு கிளர்ச்சியும் செய்யாமல் வாய்மூடி மௌனிகளாக இருந்ததுதான். இதைப் பார்த்துத்தான் வருத்தமுற்றிருக்கிறார்.

"விஷயம் தெரிந்த வேறு சிலர்கூடப் பேசாம விருப்பதன் மூலம் அதை ஆதரிப்பதைக் கண்டு அவர் வருந்தினார்."

(தினமணி 29—11—57)

அநியாயத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யாமலிருந்த தமிழ் மக்கள் மீதுதான் ரொம்பவும் வருத்தப்பட்டிருக்கிறார் நேருஜி.

தமிழ் நாட்டில் செல்வாக்குள்ள மற்றத் தலைவர்கள் இதைப் பார்த்துக் கொண்டிருப்பது நேர்மையாகாது!

பாரத நாட்டுச் சுதந்திரத்தில் தமிழ் மக்களுக்கும் பங்குண்டு. பாரத நாட்டுச் சுதந்திரப் போரில் வீரத்தோடு ஈடுபட்டு, மகத்தான தியாகம் புரிந்தவர்கள் இந்த எரிப்புக் கொள்கைகளைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கக் கூடாது.

தமிழ் மக்கள் அன்றாட வாழ்க்கையில் அமைதி யிழந்து கலவரம் நிறைந்த வாழ்க்கையாகச் செய்து விட்டால், பின்னும் சீர்ப்படுத்துவது பெருந் தொல்லையாகி விடும்!

ஜனநாயகம் என்பது சிறுபான்மையாகவுள்ள மக்களின் நலன்களை பாதுகாக்கத்தான் முக்கியமாக ஏற்பட்டது. சிறுபான்மையான மக்களின் வாழ்வு வாழத் தகுதி யற்றதாகி விட்டால் உலகம், தமிழ் மக்கள் ஜனநாயக வாழ்வுக்குத் தகுதியற்றவர்கள் ,, என்று தீர்ப்புக் கொடுத்ததாகி விடும்,,

தமிழ் நாட்டில் இந்த அக்கிரமத்தை எதிர்க்க ஒரு நக்கீரர் இருக்கிறார் என்று சென்ற வாரம் எழுதியிருந்தோம். வீரம் செறிந்த தமிழ் நாட்டில் ஒரு நக்கீரர் போதாது. இன்னும் பலர் ஏற்பட வேணும் என்பதே நேருஜியின் கருத்து!



# கர்ம யோகி ராஜாஜி

பம்பாய் கவர்னர் ஸ்ரீ பிரகாசா

**ப**ல்குன் நதிக்கரை ஓரம்; புத்த பகவான் நிர்வாணம் அடைந்த போதி மரத்தருகில்; பக்தி வாய்ந்த இந்துக்கள் எண்ணற்ற நூற்றாண்டுகளாகத் தங்களது மூதாதையரின் ஆத்மாக்கள் சாந்தியடைவதற்காகச் சிராத்தச் சடங்குகள் செய்துவரும் கயா நகரம்.

1922-ம் ஆண்டு டிசம்பர் மாதம் குளிர் காலம். ஏராளமான மக்கள் காங்கிரஸ் மகா சபையின் வருஷாந்தரக் கூட்டத்துக்காகக் கூடியுள்ளனர். எங்கே பார்த்தாலும் ஒரே வெள்ளைக் கூடார மயமான காட்சி கண்ணைக் கவர்ந்தது. நாட்டின் பல பாகங்களிலிருந்து கூடிய மக்கள் தங்குவதற்காக இந்தக் கூடாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மகாத்மா காந்தி இன்னும் சிறையில் இருந்தார்; லாலா லஜபதிராய் இன்னும் விடுதலை செய்யப்படவில்லை. சித்தரஞ்சனதாஸரும், மோதிலால் நேருவும் சிறைக்கூடங்களிலிருந்து வெளியே வந்து சும்மா இருக்கவில்லை. காங்கிரஸின் அச்சமய திட்டங்களையும் லட்சியங்களையும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர்;

1921-ம் ஆண்டு கிளர்ச்சி முடிவடைந்து விட்டது. சிலர் கூறிய மாதிரி பிசுபிசுத்து விட்டது. சட்டமறுப்பு விசாரணைக் கமிட்டி தனது யாதாஸ்தை வெளியிட்டு விட்டது. ஸ்ரீ வித்தல்பாய் படேல், ஹகீம் அஜ்மல்கான், பண்டித மோதிலால் நேரு மூவரும் சட்டசபைகளில் பிரவேசிக்கவும், தேசிய இயக்கத்தின் தடத்தை மாற்றவும் சாதகமாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர். இந்த யோசனைகளைப் பல காங்கிரஸ்காரர்கள் எதிர்த்தனர். மகாத்மா காந்தி சிறையில் இருக்கையில் அவர் திட்டத்தை மாற்றுவது 'துரோகம்' என்றும் கூறினர். 1922-ம் ஆண்டு கூடிய காங்கிரஸை இம்மாதிரி பிரச்னைகள் எதிர்நோக்கி நின்றன.

**ஆ**வேசமும், ஆத்திரமும் உச்ச நிலையடைந்திருந்தன; பரந்த மணல் பரப்பில் இரவு பகலாகப் பல சிறிய கூட்டங்களும் பெரும் கூட்டங்களும் நடந்தவண்ணம் இருந்தன. பண்டித சுந்தரலால், ஸர்தார் வல்லபாய் படேல், சேத் ஜம்னலால் பஜாஜ் முதலியோர் அடிக்கடி இந்தக் கூட்டங்களில் பேசினர். சட்டமறுப்பை எதிர்த்தவர்களை அவர்கள் சவிரக்கமின்றித் தாக்கி வந்தனர். தனது தமையனார் வித்தல்பாயை வல்லபாய் இலேசில் விடுவதாயில்லை. எல்லோரும் காந்திஜியிடம் நம்பிக்கை கொள்ளுமாறு சுந்தரலால் கூவி அழைத்தார்; அவர் பேசுகையில் உணர்ச்சி மேலிட்டால் அவர் தேகம் இப்படியும் அப்படியுமாய் அசைந்தாடியது. தமது மாகாணத்தின் காங்கிரஸ் கூடுமாறு அழைத்த ராஜன்பாபு நோய்வாய்ப்பட்டுத் தமது முகாமில் படுத்திருந்தார். மாறுதலை எதிர்ப்பவர்களிடம் அவர் அனுதாபம் கொண்டிருந்தார் என்று கூறத் தேவையில்லை. தேசபந்துதாஸ்தான் அந்த ஆண்டு காங்கிரஸ் தலைவர்; முகாமில் ஏராளமான பிரதிநிதிகள் முன் பேசி, காங்கிரஸின் அடிப்படைத் தத்துவங்களுக்கு எதிராகத் தலைவர் சதி செய்வது பற்றி ராஜன்பாபு சந்தோஷமடையவில்லை.

**இ**ங்குதான் முதன் முதலாக ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரைச் சந்தித்தேன். புனித காந்தீயத்தை ஆதரித்தவர்களிடம்தான் நான் அனுதாபம் கொண்டிருந்தேன். ஆனால் தேசபந்துவும், பண்டித மோதிலாலும் காங்கிரஸை விட்டு வெளியேறும் நிலை ஏற்படுவதை நான் விரும்பவில்லை. எனது நண்பர் சிவபிரசாத் குப்தா பரிபூரண காந்தீயவாதி. அவர் எப்போதும் கொள்கைகளை மதிப்பவர். என்ன விளைவுகள் ஏற்பட்டாலும் எப்போதும் கொள்கைகளைப் பிரகடனம் செய்வதொன்றே அவர் நோக்கம்.

ஒரு நாள் மாலை நானும் இம்மாதிரி கூட்டம் ஒன்றில் கலந்து கொண்டேன். அந்தக் கூட்டத்தில் — மக்கள் அன்புடன் செல்லப் பெயர் அளித்த — ராஜாஜி பல நண்பர்களுடன் கலந்து ஆலோசித்தார். கூட்டம் நடந்த கூடாரத்தில் மக்கள் நெருக்கமாகக் கூடியிருந்தனர். போலி மதிப்பைக் கைவிட்டுப் பண்டித மோதிலாலும் தமது கருத்தைத் தெரிவிப்பதற்காக அங்கு வந்திருந்தார். ராஜாஜி எப்போதுமே மெலிந்த உடற்கட்டுள்ளவர். அவருக்கே உரித்தான பதட்டமற்ற நற்பண்புடன் சிறிய கூட்டங்களிலும் பெரிய கூட்டங்களிலும் பேசும் சிறப்புடையவர். கயா காங்கிரஸில் தலைவரையும் அவரது கட்சியையும் எதிர்த்தவர்களில் சிறந்தவர் ராஜாஜி. அச்சமயம் அவருக்கு வயது நாற்பதுதான். அவரைச் சந்தித்தவர்கள் யாவரும் அவரது புத்தி நுட்பத்தைக் கண்டு மயங்கி விடுகின்றனர். பிரபல தலைவர்களெல்லாம் அவரை எதிர்த்ததில் பெருமை கொண்டனர். அவரை எல்லோரும் 'சின்ன மகாத்மா' என்று அப்பொழுதே அழைக்கத் தொடங்கினர்.

பல்வேறு கட்சியினரும் கயா காங்கிரஸில் ஏராளமாகக் கூடியிருந்தனர். காங்கிரஸ் வழக்கத்துக்கு மேற்பட்ட நாட்கள் கூடியது கயாவில்தான் எனக் கூறலாம். ஒவ்வொரு நாளும் நீண்டநேரம் சிலசமயம் இரவு முழுதும் விஷயாலோசனைக் கமிட்டி (அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி) கூட்டங்கள் நடைபெறும். விஷயாலோசனைக் கமிட்டி தனது தீர்மானங்களைத் திட்டம் செய்வதற்காகக் காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் ஒவ்வொரு நாளும் ஒத்தி வைக்கப்படும். ஒன்றும் முடிவடையாமல் போகிறதே என்று தேசபந்து துடி துடிப்பார்; ஆனால் விவாதம் என்னவோ முடிவடையாது. ராஜாஜி அநேகமாக மேடையில் நின்று கொண்டிருப்பதைக் காணலாம். அப்பாஸ் டயாப்ஜி தான் அவரை இடைவிடாது ஆதரித்து வருபவர்.

ஒரு சமயம் இரவு ஒரு மணி இருக்கும். ஒரு பிரதிநிதி பேசுவதற்கு எழுந்தார். மிகுந்த மனவேதனையுடன் அவரை நோக்கித் தேசபந்து "தாராளமாகப் பேசுங்கள். இப்



ராஜாஜியுடன் ராஜேந்திரப் பிரசாதும், ஸ்ரீபிரகாசாவும்

போது முன்னிரவு தானே?" என்று கூறினார். மற்றோர் சமயம் ராஜாஜி பேசிக்கொண்டிருக்கையில் ஒரு மூலையிலிருந்து ஒரு அங்கத்தினர், "தயவுசெய்து முன்னே வாருங்கள்; நீங்கள் பேசுவது கேட்கவில்லை" என்றார்.

"மதிப்புமிக்க தலைவருக்கு என் முதுகைக் காட்டிக் கொண்டு எப்படி நான் பேசமுடியும்?" என்று ராஜாஜி பதிலளித்தார். அவருடைய பிரசங்கத்தில் தலைவரை வன்மையாகக் கண்டித்தே பேசினார். ஆனால் தலைவருக்கு முதுகைக் காட்டிக்கொண்டு அவரால் பேச முடியாது. ஏனெனில் அது நற்பண்புக்கு மாறானது. கடைசியில் ராஜாஜியே வெற்றி பெற்றார். அவர் வெற்றி பெறுவார் என்பது முன்கூட்டியே தெரிந்த விஷயம் தான். காங்கிரஸ் சபை இறுதிக் கூட்டத்தில் அங்கு கூடியிருந்த ஏராளமான பிரதிநிதிகளைப் பார்த்துத் தேசபந்து, "நீங்கள் நிறைவேற்றிய தீர்மானங்களுக்காக உங்களை நான் பாராட்ட முடியாது" எனக் கூறினார். அவர் தமது தலைமைப் பதவியையும் ராஜிநாமாச் செய்தார்.

எடுத்த காரியத்தை முடிக்கும் இணையற்ற ஆற்றல் படைத்த கர்மயோகி ராஜாஜி.

## சிநேக தர்மம்

ரசிகமணி டி. கே. சி. அவர்கள் எப்போதும் காங்கிரஸ்வாதியாயிருந்ததில்லை. சிலகாலம் ஜஸ்டிஸ் கட்சியில் இருந்ததுண்டு; உத்தியோகமும் பார்த்ததுண்டு. ஆயினும் சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு ரசிகமணியும ராஜாஜியும் சந்தித்து ஒரு நாள் இலக்கியம் - கவிதை சம்பந்தமாகப் பேசியவுடனே நெடுங்காலத்து நண்பர்களைப்போல் நெருக்கமாகி விட்டார்கள்.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்"

என்னும் வள்ளுவர் பெருமான் வாக்குக்கு ரசிகமணி—ராஜாஜியின் நட்பு ஒரு சிறந்த உதாரணம் ன்றுு சொல்லலாம்.

மகாத்மா காந்தி சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது, ரஸிகமணியை மகாத்மாவுக்கு ராஜாஜி அறிமுகம் செய்து வைத்தார். அப்போது, "அறுபது பிராயத்துக்குப் பிறகு இவரோடு நான் சிநேகமானேன். எனினும் இவர்தான் இன்றைக்கு என் சிநேகிதர்கள் எல்லாரிலும் அத்தியந்த சிநேகிதர்" என்றார். இந்த உதாரணங்களிலிருந்து நட்பு விஷயத்தில் ராஜாஜியின் இதயப் பண்பு எத்தகையது என்பது ஒருவாறு வெளியாகிறதல்லவா?

— கல்கி

பற்கள் சொத்தையையும் வாய்
நாற்றத்தையும் அகற்றுங்கள் !






ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை
'கோலினுஸ்' டூத்பேஸ்ட் உபயோகிக்க ஆரம்பியுங்கள்

பச்சை 'கோலினுஸ்' டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். அதில் இயற்கை
யின் அற்புதமான ஆக்டிவ் க்ளோரோபில் சேர்க்குள்ளது!
ஆகவே அது சொத்தையை அதி தீவிரமாக அகற்றவும், பற்களை
ஆரோக்கியத்துடனும், வலுவுடனும் வைக்கவும் செய்கிறது!
வாய் நாற்றத்தை அகற்றி, வாய்க்கு விறுவிறுப்பூட்டவும்,
உங்கள் நகைக்கு சோபையூட்டவும், ஆக்டிவ்
க்ளோரோபில் சேர்த்த பச்சை 'கோலினுஸ்' டூத்பேஸ்ட்
உபயோகியுங்கள் ...அதன் பிரத்தியேக க்ளோரோபில்
நுரையே அதன் சிறப்பிற்கு காரணம்!

பச்சை 'கோலினுஸ்'
...க்ளோரோபில் சேர்த்த
டூத்பேஸ்டுகளில் முதன்மை
யானது, மேன்மையானது!

ஜெப்ச் மானேர்ஸ் அண்ட் கோ.,
பிரைவேட் லிமிடெட்
'கோலினுஸ்' டிரேட் மார்க்
உபயோகிப்பதற்கு
அதிகாரம் பெற்றவர்கள்



# அருள்வாக்கு

வேதத்தில் சொல்லும் பரம புருஷன்தான் ராமனாக அவதரித்தான். வேதம் தர்மத்தைச் சொல்லுகிறது. பரம புருஷன் ராமனாக அவதரித்த போது வேதம் ராமாயணமாக அவதரித்தது. எவை உயர்ந்த நூல்களெனக் கருதுகிறோமோ அவையெல்லாம் வேதத்தைத் தான் உயர்ந்தது எனக் கூறுகின்றன. வேதம் தான் ராமாயணம், பாரதம் ஐந்தாவது வேதம். ''வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்'' என்று திவ்ய பிரபந்தங்களுக்கு ஏற்றமும் வேதத்தைக் கொண்டு சொல்லப் படுகிறது.

ராமன் தர்மஸ்வரூபி என்பது பல இடங்களில் எடுத்துக் காட்டப் படுகிறது. ராமன் காட்டுக்குப் போகிறான். தாய் கௌசல்யை அவனுக்கு அப்போது என்ன கொடுத்தனுப்பினாள்? பதினான்கு வருஷங்களுக்கு வேண்டிய அரிசி மூட்டைகளைத் தலையில் கட்டி அனுப்ப முடியுமா? மனமார ஆசி கூறி அதையே ரக்ஷையாகக் கூட அனுப்புகிறாள். உறுதியுடன் நியமத்துடன் எந்த தர்மத்தை ராகவன் பாதுகாத்து வருகிறானோ அந்த தர்மமே அவனை ரக்ஷிக்க வேண்டுமென்று சொல்லி அனுப்புகிறாள். பெரிய ஆபத்துகள்நேரிடப் போகின்றன. தனி மனிதனாகக் கானகம் செல்லும் ராகவனை தர்மம் தான் காப்பாற்ற வேண்டு மென்று தாய் நினைக்கிறாள். 'தர்மம் தலைகாக்கும்' என்று சொல்வதுண்டு. நாம் தர்மத்தைப் பரிபாலனம் செய்தால் தான் தர்மம் நம்மைப் பாதுகாக்கும் என்பதைக் காட்டுகிறான். ராமன் தர்மத்தையே கடைசி வரையில் பின்பற்றுகிறான். இதற்காக லக்ஷ்மணன் கூட ராமனைக் கோபித்துக் கொள்ளுகிறான். ''தர்மத்தினால் தான் நீ கெடுகிறாய்'' என்று கண்டிக்கிறான். ஆனாலும் ராகவன் தர்மத்தை விடவில்லை.

பரமபுருஷனுடைய தத்துவத்தை அறிய வேண்டும். பெரிய ஆபத்துக்களையும் பொறுமையினால் கடந்து பெரியோர்கள் நமக்கு வழி காட்டியிருக்கிறார்கள். ராமனை திருஷ்டாந்தத்தில் வைத்து அதன் மூலம் தியானம் செய்து க்ஷேமம் அடைய வேண்டும். நமக்குச் சகல சக்திகளும் வர வேண்டும். சக்திகளைத் தப்பு வழியில் உபயோகிக்கக் கூடாது. மகாதீர லக்ஷணம் எல்லாம் ஆஞ்சனேயரிடம் இருக்கிறது. ராம நாமம் இருக்குமிடமெல்லாம் ஆஞ்சனேயர் இருக்கிறார். ராமனும் ஆஞ்சனேயரும் நமக்கு உத்தம திருஷ்டாந்தமாக இருந்து அவர்களைப் பற்றிய தியானத்தினால் நமக்கு எல்லாவித க்ஷேமமும் ஏற்பட வேண்டும்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்.

# இந்திய வர்த்தகர்கள் படும் துயரம்

கொழும்பு, நவம்பர் 28டை

இவ்வாரம் இலங்கைக்கு விஜயம் செய்த கடம்பூர் தொகுதி எம். எல். ஏ. திரு சுப்புராம ரெட்டியாருக்குப் பிரபல இந்திய வர்த்தகரான ஸ்ரீ ஏ. எஸ். எஸ். சங்கரலிங்கம் பிள்ளை ஒரு விருந்துபசாரம் நடத்திய பொழுது இலங்கையிலுள்ள இந்திய வர்த்தகர்களின் கஷ்ட நிலைமையையும், அவர்களுக்கு இந்திய அரசாங்கம் எவ்விதம் உதவி செய்ய முடியுமென்பதையும் விரிவாகக் குறிப்பிட்டார். இந்திய வர்த்தகர்களுக்கு வாச கால விஸா வழங்குவதில் அரசாங்கம் அனுஷ்டிக்கும் கொள்கை தெளிவாகத் தெரியவில்லை யென்றும் மூன்று அல்லது ஆறு மாதத் தவணைகளில் இந்திய வியாபாரிகள் திடீர் திடீரென்று இலங்கையை விட்டு வெளியேறுமாறு கோரப்படுவதினால் நிலுவைகளை வசூலிக்க முடியாமல் போட்டதைப் போட்டபடி விட்டு அவர்கள் இலங்கையை விட்டு வெளியேற வேண்டியுள்ளதென்றும் இதனால் அவர்களுக்குப் பெருத்த நஷ்டமும் கஷ்டமும் ஏற்படுவதாயும் திரு சங்கரலிங்கம் பிள்ளை கூறினார். இவ்விஷயத்தில் இந்திய அரசாங்கம் இலங்கையுடன் பேசி ஒரு திட்ட வட்டமான கொள்கையை நிர்ணயிக்கச் சொல்ல வேண்டுமென்று கடம்பூர் எம். எல். ஏ.யை அவர் வற்புறுத்தினார்.

கொழும்பில் சென்ற இரண்டு வாரங்களாக அடுத்தடுத்துப் பல வேலை நிறுத்தங்கள் நடைபெற்றுக் கவலைக்கிடமான நிலைமையை உருவாக்கி வருகின்றன. பொழுது விடிந்தால் புதிய புதிய வேலைநிறுத்தங்களைப் பற்றியே எங்கும் எப்பொழுதும் பேச்சாயிருக்கிறது. ரயில்வே வேலைநிறுத்தம், மின்சாரத் தொழிலாளர் வேலைநிறுத்தம், தபால் தந்தி இலாகா வேலை நிறுத்தம், இப்படியாகப் பல கேந்திர ஸ்தானங்களில் அடுத்தடுத்து வேலை நிறுத்தங்கள் நடைபெற்று மக்களின் சகஜ வாழ்வு மிகக் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கிறது.

அரசாங்க இலாகாக்களையும் மற்றும் பல தனிப்பட்ட ஸ்தாபனங்களையும் சேர்ந்த ஊழியர்களின் யூனியன்கள் டிஸம்பரில் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக அறிவிப்பு கொடுத்திருக்கின்றன. இந்த வேலைநிறுத்தங்களெல்லாம் தொழிலாளரின் உண்மையான குறைபாடுகளை அறிவுறுத்துகின்றனவே தவிர அரசாங்கத்துக்குத் தொல்லை உண்டு பண்ண வேண்டுமென்பது அவற்றின் நோக்கமல்ல வென்று பிரதம மந்திரி சமாதானம் கூறுகிறார்: ஸ்ரீ பண்டாரநாயகா அரசாங்கம் இலங்கையில் ஏற்பட்ட நாள் முதல் தொழிலாளர் இயக்கங்கள் வலுவடைந்து விட்டதுடன் வேலைநிறுத்தங்களும் சர்வ சகஜமாகி விட்டன. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் எவ்வளவு நெருக்கடியான, கவலைக்கிடமான நிலைமை ஏற்பட்டபோதிலும் அதைப் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா வெற்றிகரமாகச் சமாளித்து விடுவதுதான்!

* * *

சர்வ தேசப் பத்திரிகைக்காரர்களின் இரண்டாவது ஆசியா மகாநாடு இவ்வாரம் கண்டியில் நடைபெற்றபொழுது வெளி நாட்டுப் பத்திரிகை நிருபர்கள் இலங்கைக்கு வந்து போகக் கட்டுப்பாடுகள் இருப்பது விரும்பத்தக்கதல்ல வென்றும், அருவருக்கத் தகுந்த இன ஒதுக்கல் கொள்கையைக் கடைப் பிடிக்கும் தென்னாப்பிரிக்கா ஒன்றைத் தவிர வேறு எந்த காமன்வெல்த் நாட்டிலும் பத்திரிகைக்காரர்களின் பிரயாண சுதந்திரத்துக்குக் கட்டுப்பாடு இடையாதென்றும் 'மான்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையின் ஆசிரியர் குறிப்பிட்டார். சிறுபான்மையோர் விஷயத்தில் இலங்கையும் கிட்டத்தட்ட தென்னாப்பிரிக்க இனபேதக் கொள்கையைக் கடைப்பிடிப்பதினால் தென்னாப்பிரிக்காவைப் பற்றி மதிப்பு குறைவாக ஒரு பிரிட்டிஷ் பத்திரிகை ஆசிரியர் குறிப்பிட்டது பிரதம மந்திரி ஸ்ரீ பண்டார நாயகாவுக்குப் பிடிக்கவில்லை. தென்னாப்பிரிக்காவின் உதாரணத்தைப் பின்பற்றி அந்நாட்டின் மதிப்பை உயர்த்த நாங்கள் விரும்புகிறோம் என்று ஸ்ரீ பண்டார நாயகா சற்றுக் கோபத்துடன் பதில் அளித்திருக்கிறார். அவருடைய இந்தப் பதில் தென்னாப்பிரிக்காவுக்கு வேண்டுமானால் சந்தோஷத்தைக் கொடுக்கலாமே தவிர சுதந்திரப் பத்திரிகை உலகத்துக்கு திருப்தியைக் கொடுப்பதற்கில்லையென்று 'வீரகேசரி' பத்திரிகை ஒரு தலையங்கக் குறிப்பில் கண்டித்திருந்தது. —ரஜனி

# உலகுக்கு ஒரு மேதை

ம.பொ. சிவஞானம்

ராஜாஜி அவர்கள் எனது தலைவர்; தமிழகத்தின் காவலர். பாரத அன்னையின் மணிமுடி. உலக மேதைகளின் மத்தியிலே மகாமேதை.

இத்தகைய ஒரு பெரியாரின் பிறந்த நாள் உலகமனைத்திலும் கொண்டாடுவதற்கான சிறந்த பெருநாளாகும். ஆனால் தமிழகத்தில் தமிழராகப் பிறந்த தன் விளைவாக அறிஞர் ராஜாஜியின் பிறந்தநாளை அவர்பால் அன்புள்ளங் கொண்ட மக்கள்மட்டுமே அடக்கமாகக் கொண்டாடி மகிழ்ந்து வருகின்றனர்.

தங்கக் கட்டியின் மதிப்பைப் பிறர் அறியாமல் இருக்கலாம். அதனாலேயே அந்தத் தங்கம் பித்தளையாகி விடுவதில்லை. யார் எந்தக் கண் கொண்டு பார்த்தாலும், எப்படிக் கருதினாலும் தங்கம் தங்கம்தானே!

ராஜாஜி அவர்களை 'அறிவு' என்ற சொல்லைக் கொண்டு அளப்பதற்கு முயலக் கூடாது. 'ஞானம்' என்ற சொல் தான் அவருடைய பெருமையை அளப்பதற்கான ஒரே கருவியாகும்.

அறிஞர்கள் கணக்கற்றுத் தோன்றலாம். ஆனால், ஞானிகள் எப்போதாவது ஒருமுறை தான் எங்கோ ஓரிடத்தில் தோன்றுகின்றனர். அத்தகைய ஞானிகளை வாழையடி வாழையாகத் தோற்றுவித்தது தமிழகத்தின் வரலாறு. அவர்களில் இன்றைய தலைமுறைக்கு நம்முடைய கண்ணெதிரே காட்சி அளிக்கும் உத்தம ஞானிதான் ராஜாஜி.



ராஜாஜியின் தந்தை
ஸ்ரீ சக்கரவர்த்தி ஐயங்கார்

ஞானிகளுக்கு இலக்கணம் கூறுகின்றது. பத்துப் பாட்டில் ஒன்றான திருமுருகாற்றுப் படை. அதில் 'யாவதும் கற்றோர் அறியா அறிவினர்' என்றும், 'கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்' என்றும் தெளிவாகக் குறிப்புக்கள் தரப்படுகின்றன.

அதன் பொருள் 'எல்லாம் கற்றுவிட்டோம்' என்று இறுமாந்திருப்பவர்களுக்கும் மேம்பட்ட அறிவினர்,, கற்றோர்கள் எல்லாம் 'இன்னார் சொல்லியபடி' என்று தம்மைச் சான்று காட்டும் ஆற்றல் படைத்த மதியினர் என்பதாகும்.

திருமுருகாற்றுப் படையில் கூறப்படும் இலக்கணங்களுக்கு இலக்கியமாக நம்மிடையே இன்று வாழ்ந்து வருகின்றார் நமது ஒப்பற்ற தலைவர் ராஜாஜி.

ராஜாஜி அவர்களை நான் நேரில் பார்ப்பதற்கு முன்பு அவருடைய இரண்டு நூல்களைப் படித்து அவர்மீது பக்தி செலுத்தினேன். அவை 'சோக்ரதர்', 'மார்க் அரேலியரின் ஆத்ம சிந்தனை' என்ற நூல்களாகும்.

பேரறிஞரும், விளங்கிக் கொள்வதற்கு அரிதான ஞானநெறி போதனைகளை இனிய தமிழில் எளிய நடையில் எனது 'ஏழை' மதியும் விளங்கிக் கொள்ளக் கூடியவகையில் அந்நூல்களை எழுதியிருந்தார் ராஜாஜி. வாழ்க்கையில் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்ற விருப்பத்தை என் மனதில் தோற்றுவித்த பெருமை அந்த நூல்களுக்கு உண்டு. ஆம்; அந்த நாளில் தமிழ் இலக்கியங்களில் ஆரம்ப அறிவுகூடப் பெறாதவனாக நான் இருந்தேன். நான் ராஜாஜியின் மனத்தோடு அதிகம் பழகினேன் இல்லை. அவருடைய அறிவோடு தான் அதிகம் தொடர்பு கொண்டேன். அதனால்தானோ என்னவோ அவரிடம் எனக்குள்ள பற்றும், பக்தியும் பலவித பயங்கரமான சோதனைகளுக்குப் பிறகும் நிலைத்திருக்கின்றன. அவரிடம் எதையும் எப்பொழுதும் எதிர் பார்த்து நான் ஏமாந்ததுமில்லை. அவர் என்



விடம் எரிச்சல் கொள்ளும்படியாக என்றைக்கும் நான் நடந்து கொண்டதுமில்லை. காந்தியடிகளுக்குப் பிறகு, நான் தலைவணங்கக் கூடிய ஒரே ஒரு தலைப்பெரும் தலைவர் ராஜாஜி அவர்கள்தான்.

தலைவர் ராஜாஜி அரசியல் தலைவர் மட்டுமல்லர். அரை நூற்றாண்டுக் காலம் இந்தியாவின் சரித்திரத்தை உருவாக்கிய இரண்டொரு மகாபுருஷர்களில் ஒருவர். 1920-ம் ஆண்டுக்குப் பிறகு உள்ள இந்திய சரித்திரப் பகுதியை யாரேனும் எழுத முனைந்தால் அதில் ராஜாஜி அவர்களின் சாதனைகளைப்பற்றி எழுதாமல் இருக்க முடியாது. சுதந்திர யாத்திரை என்ற திரைப் படத்தைத் தயாரித்த ஓரவஞ்சனையாளர் மட்டும் இதற்கு விதிவிலக்காவர். ராஜாஜியின் வாழ்க்கையே இந்தியசரித்திரமாகும்.

ஒத்துழையாமை இயக்க காலத்தில் மாணிக்க மணி போன்ற தலைவர்களைப் பெற்றெடுத்தது பாரத நாடு. போர்க்களத்தில் தோன்றிய அந்த மாபெரும் தலைவர்களில் ராஜாஜி ஒருவர்தான் இன்று நம்மிடையே வாழ்ந்து வருகிறார். அவர் வாழும் காலத்தில் வாழக் கொடுத்து வைத்த நாம் எல்லாரும் பாக்கியசாலிகள். காந்தி மகானுக்கு அடுத்தபடியாக ஒத்துழையாமை இயக்கத்தின் கர்த்தாவாக விளங்கிய பெருமை ராஜாஜி ஒருவருக்கே உரிமை. இதை 'சத்திய சோதனை' என்ற தமது நூலில் காந்தி மகாத்மாவே கூறியிருக்கின்றார்.

இந்தியா விடுதலை பெற்ற துவக்கத்தில் எத்தனையோ பயங்கரமான பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அந்தச் சங்கடமான சமயத்தில், இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவியை ஏற்றவர் தலைவர் ராஜாஜி என்பது உலகறிந்த உண்மை. அந்த நாளில் சங்கடங்களையெல்லாம் சமாளித்து, 1950 ஜனவரி 26ல் இந்தியா குடியரசு நாடாகப் பிரகடனப்படுத்தும் சிறப்பு ராஜாஜியின் மூலம் தமிழ் இனத்தவருக்கு வாய்த்தது.

1937ல் சென்னை ராஜ்யத்தின் முதல் அமைச்சர் பதவி ஏற்றபோது ராஜாஜி நிகழ்த்திய அற்புதங்களும் மீண்டும் அதே பதவியை 1952ல் ஏற்றபோது அவர் நிகழ்த்திய சாதனைகளும் நன்றியுள்ள தமிழர் ஒவ்வொருவரும் போற்றக் கூடியனவாகும். தமிழகத்தின் தலைநகரைக் காத்துக் கொடுத்த ஒரு காரியத்துக்காகவேனும் தமிழகம் ராஜாஜிக்கு காருள்ளளவும் நீருள்ளளவும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறது. 'செயற்கரிய செய்வர் பெரியர்' என்றார் வள்ளுவர். அந்த வாக்குக்கு ராஜாஜியின் வாழ்க்கை சரியான சான்றாகும்.

ராஜாஜி அவர்களின் ஒழுக்க வாழ்வை, பெரிய குணங்களை, அரிய சாதனைகளை இலக்கியக் கண்கொண்டு நான் காண்கின்றேன். நான் படித்த அத்தனை இலக்கியங்களுக்கும் உரை நூல் போன்று விளங்குகிறார் முனிவர் ராஜாஜி.

தமிழகத்தைத் தெய்வத் திருக்கோயிலாகக் கொண்டால், அதன் மூல விக்கிரகமாக விளங்குகின்றார் ராஜாஜி. அந்த மூல விக்கிரகத்தின் பிரதிநிதியாகப் பவனி வருவதில்தான் உற்சவ விக்கிரகங்களுக்கு மதிப்பு இருக்கிறது. ராஜாஜி என்பது வயதை அனுபவி விட்டார். என்றாலும், இந்த முதுமைப் பருவத்திலும், நினைவுச் சக்தியையோ, தமக்கே உரிய ராஜதந்திர நெறியையோ, அநீதியை எதிர்த்துக் குரல் கொடுக்கும் ஆற்றலையோ அவர் இழந்து விடவில்லை. இது தமிழ்ப் பெரு மக்களின் நல்வாய்ப்பாகும். ஏன்? உலகின் பாக்கியம் என்றே கூறலாம்.

ஞானிகளின் அறிவாற்றலை அளந்து காட்டுவது என் போன்றவர்களுக்கு எளிதன்று. ராஜாஜிக்கும் இந்த உண்மை பொருந்தும். ஆயினும், அப்பெரியாரின் பிறந்த நாளில், பல்லாண்டுகள் அவரோடு பழகும் பேறு பெற்றவன், அவரைப் பின்பற்றும் பெருமை அடைந்தவன் என்ற முறையில் ஒருசில கருத்துக்களைக் காணிக்கை யாக்கினேன். அவரினும் பெரியார் ஒருவரே அவரைப் பற்றிக் கூறத் தகுதி பெற்றவராவர்.

ராஜாஜி அவர்கள் பல்லாண்டுகள் உடல் நலத்துடன் வாழ்ந்து இந்த உலகுக்கு வழிகாட்டிக் கொண்டிருக்க இறைவனைப் பிரார்த்திப்போமாக.

# ஞான முனிவர்

நீலாவதி ராமசுப்பிரமண்யம்

சேலம் தந்த தீங்கனி நம் ராஜாஜி! தீர்க்க தரிசி! அறிவின் ஆழ்கடல், கற்பனைக் களஞ்சியம், இலக்கிய ஊற்று! உவமைக்கு ஒரு ராஜாஜிதான் உண்டு.

படித்தறியாப் பாமரரும் புரிந்து கொள்ளக் கூடிய எழுத்து. பேச்சும் அப்படியே!

பரபரப்பான பேச்சையோ, திகைக்க வைக்கும் அடுக்குச் சொற்களையோ அவரிடத்திலே காண முடியாது. ஆனால், சிரிக்க வைத்துச் சிந்தையில் பதிய வைக்கும் சிறிய பேச்சுக்கு [illegible] கதையும், உதாரணமும் கருத்திலே பதிவது போல் மற்றது பதியாதல்லவா? நாட்டுப் பிரச்னை முழுதும் வீட்டு பாஷையில் தான் விவரிப்பார்.

சின்னஞ்சிறு பாலர்களுக்கு ராஜாஜி தாத்தாவின் சிநேகம் ரொம்ப உண்டு. கதைக்குக் கட்டுப்பட்டவர்கள் குழந்தைகள் தானே! உண்மைதான். கதை என்னவோ, நமக்கும் சேர்த்துத்தான் வருகிறது. கல்விக்கு வயதில்லை என்பதுபோல், ராஜாஜியின் போதனைகளை நாம் எந்த வயதிலும் கேட்கத் தயார்.

இலக்கியத் தந்தை டி. கே. சி.; அறிவுத் தந்தை ராஜாஜி.

ரசிகமணி டி. கே. சி. அவர்களுக்கும் ராஜாஜி அவர்களுக்கும் இருந்த அன்பும், நட்பும், இலக்கிய அன்பர்கள் அறிந்ததே! ஒரு முறை டி. கே. சி. அவர்களோடு, பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். தாய் மொழி அன்பு, கவி இதயம் இவைகளை உணராத பட்டதாரிகளை டி. கே. சி.க்குப் பிடிக்காது. அச்சமயம் டி.கே.சி. ''ராஜாஜியைப் பட்டதாரி என்று நீங்கள் அல்லவா நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவர் அதை மறந்து விட்டார். அவர் யூனிவர்ஸிடி எழுத்துப் பட்டதாரி அல்ல. அறிவுப் பட்டதாரி. அநுபவப் பட்டதாரி'' என்றார். டி. கே. சி.யின் மொழிகள் எவ்வளவு உண்மை!

குற்றால முனியின் வற்றாத அன்புத் தடாகத்திலே வளம் பெற்ற மலர் ராஜாஜி!

குற்றாலம் சென்றவர்கள் பார்த்திருப்பார்கள், ஆங்காங்கே ஓடும் சிறு சிறு ஓடைகளை. அந்த நீரின் தெளிவிலே நம் நெஞ்சைப் பறி கொடுப்போம்.

ஆர்ப்பாட்டமின்றி, அதிக சலசலப்பின்றி, தெளிந்து நிதானமாக ஓடும் அந்த நீரோடையின் அழகே அழகு. ராஜாஜி அவர்களின் பேச்சை இந்த நீரோடைக்கு ஒப்பிடலாம்; அவருடைய கற்பனைக் காட்டிலே கணக்கற்ற அறிவுக் கனிகள் ஞான மலர்கள் நிறைந்து, மணம் வீசி நிற்கும்.

எல்லா நோய்களுக்கும் மருந்து ''பக்தி'' என்று பக்தி ஞானத்தைப் பரப்பும் தொண்டைப் பக்குவமாய்ச் செய்து வருகிறார்.

மக்கள் வாழ்வு மணம்பெற மொழியாலும், இலக்கியக் கலையாலும், அறநெறியாலும் வழி காட்டும் ஞானமுனிவர் ராஜாஜி. அவர்கள் நீடூழி வாழ வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

# பொருளாதாரமும்

கெ. சந்தானம்

## 1. பாரதியாரின் கனவு

தமிழ் நாட்டின் வரகவி சுப்பிரமணிய பாரதியாரின் உணர்ச்சி ததும்பும் தேசிய கீதங்களில், பாரத சமுதாயத்தைப் பற்றிய பாட்டு மிகவும் சிறந்தது. தேசியப் போர் மும்முரமாக நடைபெறும் நாட்களில், ஊர்வலங்களிலும், சிறைச்சாலைகளிலும் தொண்டர்கள் இப்பாட்டை ஓயாமல் பாடுவார்கள். ஏனெனில், அதில் பாரத நாட்டின் லட்சியங்கள் மிகவும் சுருக்கமாக, சக்திவாய்ந்த மொழிகளில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

பாரதத்தின் உத்தம லட்சியத்தைக் கடைசிப் பாட்டில் கூறியுள்ளார்.

'எல்லாரும் ஓர்குலம், எல்லாரும் ஓரினம்,
எல்லாரும் இந்திய மக்கள்,
எல்லாரும் ஓர்நிறை, எல்லாரும் ஓர்விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்.'

இந்த லட்சியத்தை அடைய மூன்று படிகளை முன்பாட்டுகளில் வரைந்திருக்கிறார்.

முதன் முதலாக அன்னிய ஆட்சியும், ஏதேச்சாதிகாரமும் ஒழிய வேண்டும். இல்லையேல், அப்பொழுதிருந்த 'மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கம்' ஒழியாது. 'மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை' மாறாது.

ஆட்சி சீராக அமைக்கப்பட்டால் மட்டும் போதாது. கௌரவமான மனித வாழ்க்கைக்கு வேண்டிய சாதனங்கள் வேண்டும். 'தனி யொருவனுக்கு உணவில்லையெனில், ஜகத்தினை அழித்திடுவோம்' என்று கர்ஜித்தார். உணவு என்ற பதத்தால் வெறும் பசி தீர்க்கும் தானியத்தை மட்டும் குறிக்கவில்லை. உடை, வீடு, கல்வி, சுகாதாரம் முதலிய எல்லாவித அவசியமான வசதிகளையும் மனத்திற் கொண்டு கூறியதாகவே கொள்ள வேண்டும். வேண்டிய செல்வம் கொடுப்பதற்குப் பாரதத்தாய் என்றும் தயாராகவே இருக்கிறாள்.

'இனியபொழில்கள், நெடிய வயல்கள்,
எண்ணரும் பெருநாடு;
கனியும் கிழங்கும் தானியங்களும்
கணக்கின்றித் தரும் நாடு.'

இவ்விதம் வாழ்க்கைச் சாதனங்களைப் பூர்த்தி செய்து அதன்மூலம் பாரத மக்கள் தங்கள் ஆத்மசக்தியை வளர்த்து உலகத்தில் அறத்தை வளர்க்க முயற்சி செய்வார்கள். 'எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற் களிக்கும்.'

இம்மூன்று லட்சியங்களில் எதனையும் தனியாகப் பூர்ணமாகப் பெறமுடியாது. ஆனால் அவைகளை அடைய முயற்சி செய்வதில் வரிசைக் கிரமமுண்டு. அரசியல் சுதந்திரமின்றி வேறு துறைகளில் முன்னேறுவது சாத்தியமில்லை. அச்சுதந்திரத்தோடு திருப்தியடைந்து விட்டால், வறுமையிலும், நோயிலும் தவிக்கும் மக்கள் புரட்சி செய்து, சுதந்திரமும் பறி போய் விடும். ஆதலால், அரசியல் சுதந்திரத்தைக் கொண்டு மக்களின் வறுமையைப் போக்கி, குடும்ப வாழ்க்கையைக் கௌரவமாக்கி, பொது வாழ்க்கையின் தன்மையை உயர்த்தினால் சுதந்திரமும் நிலைக்கும்; வாழ்வில் சுகமும் நிலவும்.

இவ்விரண்டோடு திருப்தியடையும் சமூகங்கள் வெகுகாலம் நிலைத்திரா. விஞ்ஞானத்தையும், கலைகளையும், அறநெறியையும் வளர்த்து, மனித சமூகம் ஓர் மிருகக் கூட்டமல்ல, அதில் தெய்வத்தன்மை யிருக்கிறது, அதனை வெளிப்படுத்திப் பிரகாசிக்கச் செய்வதே மானிட வாழ்க்கையின் உத்தம லட்சியம் என்று அறிந்து, அதன்படி நடக்கும் சமூகங்களே புகழ் பெற்று நிலைத்திருப்பன.

அந்நிலையை அடையும்பொழுது எல்லா மனிதரும் ஓர் குடும்பத்தினராகக் கருதப்படுவர். அப்பொழுதே சுதந்திரமும், சுக வாழ்க்கையும் மனித வர்க்கத்தின் பிறப்புரிமைகளாகும்.

1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி பாரதத்தை



# பொது மக்களும்

விட்டு ஆங்கில அரசாங்கத்தார் வெளியேறி னர். அதன் ஓர் பாகம் பிரிக்கப்பட்டுப் பாகிஸ்தானுகி விட்டது. சுதேச மன்னர்களும் சமாதானமாகத் தம் அதிகாரங்களைத் துறந்து தமது சமஸ்தானங்களை மற்றமாகாணங்களைப் போல் பாரத சமஷ்டியின் பாகங்க ளாக்கப் படுவதற்கு ஒப்புக் கொண்டனர். எல்லாப் பாகங்களிலிருந்தும் பிரதிநிதிகள் கூடி இரண் டரை வருஷங்கள் ஆலோசனை செய்து, பாரத ஆட்சிக்கு ஓர் ஜனநாயகத் திட்டம் வகுத்து, அதனை 1950 ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ம் தேதி அமுல் செய்தனர். அதன் மூலம் பாரதத்திலுள்ள 18 வயதுக்கு மேற்பட் டுள்ள ஆண்பெண் அனைவரும் வாக்குப்பெற்று இந்நாட்டு மன்னர்களாயினர். 1952-ம் வரு ஷமும், 1957-ம் வருஷமும் பொதுத் தேர் தல்கள் நடைபெற்று, பாரத மக்களின் அரசு நிரந்தரமாக நிலைபெற்று விட்டது.

அரசியல் திட்டத்தின்படி பாரத மக்கள் மன்னர்களாகி விட்டாலும், வாழ்க்கை வசதிகளைப் பொறுத்த வரையில் ஆண்டிக ளாகவே இருக்கின்றனர். ஒரு இந்தியனின் சராசரி வருஷ வருமானம் ஆங்கிலேயனின் வருமானத்தில் பத்தில் ஒரு பங்குக்கும், அமெரிக்கனின் வருமானத்தில் இருபதில் ஒரு பங்குக்கும் குறைவாக இருக்கிறது. போதிய உணவு கிடையாது; நூறு பாரதக் குழந்தை களில் ஐம்பது குழந்தைகள்தான் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் படிக்கிறார்கள். சுகாதார வசதிக் குறைவினால், லட்சக்கணக்கான இந்தி யர்கள் ஆண்டுதோறும் அகால மரணத்துக்கு ஆளாகி வருகின்றனர்.

இந்த நிலையில் அரசியல் சுதந்திரத்தின் முதல் பிரயோசனம் பொருளாதார முன் னேற்றமேயாகும். இதனை நன்கறிந்த இந்தி யத் தலைவர்கள், மத்திய, பிரதேச அரசாங் கங்களின் எல்லாச் சக்திகளையும், முயற்சிகளை யும் இத்துறையிலேயே பிரயோகிக்க முயன்று வருகின்றனர். ஒரு யோச னைக் கமிஷன் ஏற்படுத்தி அதன் மூலம் 2000 கோடி செலவுள்ள ஐந்தாண்டுத் திட்டம் தயார் செய்யப் பட்டு 1951-52 லிருந்து 1955-56 முடிய அமுல் செய்யப்பட்டது. அதை விட ஏறக் குறைய இரண்டரை மடங்கு செல வாகும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 1956-ம் வருஷம் ஏப்ரல் முதல் தேதியன்று ஆரம்பமாயிற்று.

பொருளாதார முன்னேற்றத்தில் மத்திய ராஜ்ய அரசாங்கங்களுக்கு அதிகப் பொறுப்பு இருப்பது உண்மையே. ஆனால், ஜனநாயக ஆட்சியில் எப்பெரும் காரியமும் பொது மக்களின் ஆதரவின்றிச் சாதிக்க இயலாது. அரசாங்கங்களின் செயல்களைச் சந்தேகக் கண்களுடன் கவனிப்பது சுதந்திரப் பிரஜை களின் இயல்பு. இது நியாயமே. அல்லா வின்றி, அதிகாரிகளுக்கு எல்லா விதத்திலும் கீழ்ப்படிந்து, அவர்கள் செய்யும் தவறுகளைக் கண்டிக்காமல், மந்திரிகளை முகஸ்துதி செய் வது சம்பிரதாயமானால் ஜனநாயகம் விரை வில் மறைந்து எதேச்சாதிகாரமாக மாறி விடும். பொதுக் காரியங்களின் பெயரால் ஜனங்கள் பாடுபட்டுச் சேர்க்கும் செல்வம் வீணில் விரயமாகி விடும். ஆனால், எவ்வுரிமைக்கும் காலதேச வர்த்தமானங்களை யொத்து வரம்பு கள் உண்டு. பாரத மக்களின் அள வற்ற வறுமையைப் போக்குவதில் அளவற்ற தைரியம் வேண்டும். புதிய முறைகளைக் கையாளுவதில் அச்சம் கொள்ளலாகாது. சில வேலைகளில் தவறுகளும், நஷ்டங்களும் தவிர்க்க முடியா. அவைகளைப் பரிசீலனை செய்வ தற்கும், குற்றங்களைக் கண்டிப்பதற்கும், சாமர்த்திய மில்லாத ஒழுக்கம் குறைந்த உத்தியோகஸ்தர்களையும், மந்திரிகளையும் விலக்கும்படி கிளர்ச்சி செய்வதற்குமுள்ள உரிமைகளைச் சிறிதும் தளரவிடக்கூடாது. ஆயினும், நாடு முன்னேற்ற மடையக் கூடிய திட்டங் களுக்கு மக்கள் உற்சாகத்





பாரத ரத்தினங்கள்

துடன் ஆதரவளித்து, ஒத்துழைப்பது அத்தியாவசியமாகும். அப்படிச் செய்யாமல், வெறும் கண்டனத்தோடு திருப்தியடைந்தால் நமது வறுமை தீராது. அதிருப்தி பெருகிக் குழப்பமுண்டாகும். முடிவில் ஜனநாயகத்துக்கே அபாயம் ஏற்படும்.

எவ்வித முன்னேற்றத்துக்கும் அறிவு, ஆற்றல், உற்சாகம் மூன்றும் தேவை. அவற்றில் அறிவே ஆதாரமானது. அறிவில்லாமல் ஆற்றலும், உற்சாகமும் இருப்பின் அவைகளால் அனர்த்தம் விளையக்கூடும். பாரதத்தின் பொருளாதார நிலையைப் பற்றியும், அதன் முன்னேற்றத்துக்கு அவசியமான முறைகள் சாதனங்களைப் பற்றியும், தடையாகவுள்ள சிக்கல்கள், கஷ்டங்களைப் பற்றியும், இந்திய மக்கள் அறிவது இன்றியமையாதது. ரசாயனம், வான சாஸ்திரம் போல் பொருளாதாரம், விஞ்ஞான சாஸ்திரமல்ல. அதில் சில பாகங்கள் மிகவும் சிக்கலாகவும் பல வருஷங்கள் கற்றுத் தேர்ச்சியடைந்த நிபுணர்களால் தான் உணரக் கூடியவையாக இருந்தாலும், பல பாகங்கள் சாதாரண ஜனங்கள் அறியக் கூடியதாகவும், அவர்களுடைய தினசரி வாழ்க்கையைப் பாதிக்கக் கூடியதாகவும் இருக்கின்றன. இப்பாகங்களைப் பற்றித் தமிழ் மக்களுக்கு எளிய நடையில் எடுத்துரைத்து, அவர்களை நாட்டின் முன்னேற்றத்தில் திறமையுடன் மனப் பூர்வமாகப் பங்கெடுத்துக் கொள்ளச் செய்ய வேண்டுமென்பதுதான் இந்தக் கட்டுரைகளின் உத்தேசம்.

இவற்றை எழுதுவதில் எனக்கு எவ்விதப் பிரசார நோக்கமும் கிடையாது. எல்லாப் பிரசாரங்களிலும் ஓரளவு உண்மையைத் திரித்தோ, மறைத்தோ மக்களின் மனத்தைக் குறிப்பிட்ட கொள்கைகளுக்கோ, திட்டங்களுக்கோ இருப்ப வேண்டு மென்ற ஆவல் இருக்கும். சில சந்தர்ப்பங்களில் அது அவசியமாகும். ஆனால், பொதுமக்களின் அறிவை வளர்ப்பதற்கோ, புதிய நெருக்கடிகளில் சுய புத்தியுடன் காரியம் செய்வதற்கு அவர்களுக்கு ஆற்றல் அளிப்பதற்கோ பயன்படாது. ஆகலால், இந்தியாவின் பொருளாதாரத்தின் அடிப்படையான புள்ளி விவரங்களிலிருந்து எழும்பும் தவிர்க்க முடியாத உண்மைகள் என்ன; விவாதத்துக்கு இடமான கொள்கைகளும், முறைகளும் யாவை; அவைகளைப் பற்றிப் பொருளாதார நிபுணர்களின் அபிப்பிராயங்கள் என்ன; இவைகளை விளக்கிப் பொருளாதாரப் பிரச்னைகளில் பொதுமக்கள் நிதானத்துடன் சிந்திக்கும் சக்தியை அதிகரிக்க வேண்டுமென்பதே இந்தக் கட்டுரைகளின் நோக்கம்.

(தொடரும்)

## கதை, கட்டுரை, கவிதை அனுப்புவோருக்கு

1. நமது பத்திரிகைக்கு அனுப்பப்படும் கதைகள் எழுதியவரின் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்.

2. நல்ல காகிதத்தில் இடைவீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறுபக்கத்தில் எழுதக் கூடாது.

3. தேர்ந்தெடுக்கப்படாத கதை, கட்டுரை, கவிதைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

4. கதை, கட்டுரை, கவிதை சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

ஆசிரியர், கல்கி.

# நீரிழிவு

## குணமாகும்

" சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறி. உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாயிருந்தாலும், உடல் உருக்கிக்கொண்டு வந்தாலும் அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக்கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் செல்லும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இன்செக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. இன்செக்ஷன்கள் நீரில் சர்க்கரையைக் குறைக்கின்றன — அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட வேண்டியதுதான். இதனால் அதிகச் செலவு ஏற்படுவதோடு கஷ்டமும் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள் புண்களினாலும், கண் நோய், பல் நோய் வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது.

நீரிழிவு வியாதியை, வீனஸ்சார்ம் மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும் நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் வீனஸ் சார்ம் மாத்திரைகள் நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்செக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கியிருக்கிறது. இதை உபயோகித்துப் பல ஆயிரக் கணக்கானவர்கள், இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பியிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவக்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

50 மாத்திரைகள் கொண்ட
புட்டி ஒன்றின் விலை 6-12-0
(பாக்கிங் தபால் செலவு இனாம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K. M.)**
தபால் பெட்டி நெ 587 கல்கத்தா

---

# அவரைப் பாருங்கள்!

- அவருக்குச் சளி மூண்டிருக்கிறது அல்லது தொண்டையில் கபம்.
- அவர் படுக்கையில் உட்காருகிறார் அல்லது ஜன்னலை நோக்கி ஓடுகிறார்.
- அவருக்கு மூச்சை யடைப்பதுபோல இருக்கிறது; மூச்சுவிட அவஸ்தைப் படுகிறார்.
- அவர் உள் மூச்சு குறுகியும் விரைவாயும் இருக்கிறது.
- அவர் வெளி மூச்சு கடினமாகவும் நீண்டும் இருக்கிறது.
- இருமும்போது அவருக்கு வேர்க்கிறது
- அவர் உதடுகள் வெளுத்திருக்கின்றன
- அவர் முகம் ஒரு கதையைக் கூறுகிறது

# அதுதான் ஆஸ்த்மா

கவலையும் பச்சாத்தாபமும் தோய்ந்த கண்ணீருக்கும் அப்பாற்பட்ட உருவமாக அவர் காட்சியளிக்கிறார்

# நவரத்ன கல்பம்

உபயோகியுங்கள்

ஆனந்தமும் உற்சாகமும் உள்ளவராக அவரை அப்படியே மாற்றிவிடும்

○●○

வைரம், கெம்பு, நீலம், மரகதம், புஷ்பராகம், பவழம், முத்து, கோமேதகம் வைடூரியம் ஆகிய ஒன்பது உயர்ந்த கற்களின் கலவையே நவரத்ன கல்பம்

கவிராஜ்
பண்டிட்
துர்க்காதத்த சர்மா
வைத்ய வாசஸ்பதி
அவர்களால்
கண்டுபிடிக்கப்பட்டது



○●○

இதர விவரங்களுக்கு எழுதவும்

**NAVRATNA KALPA PHARMACY**
**JULLUNDUR CITY (India)**

# வானவில்

டாக்டர் மோனிகா பெல்டன்

**ஸ்ரீமதி மோனிகா பெல்டன் இங்கிலாந்து தேசத்தைச் சேர்ந்தவர். மிகச் சிறந்த எழுத்தாளர். பிரிட்டிஷ்தொழிற் கட்சிப் பிரமுகர்களில் ஒருவர். தொழிற்கட்சி அங்கத்தினராகப் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பணியாற்றி யிருக்கிறார். தொழிற்கட்சி மந்திரி சபையிலும் இருந்திருக்கிறார். அவர் சென்ற சில ஆண்டுகளாக ஜெர்மனி, ருஷ்யா, ஜப்பான், சீனா முதலிய பல நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து பல தேசத் தலைவர்களைப் பேட்டி கண்டு வருகிறார். உலகில் சாந்தியையும் சமாதானத்தையும் நிலைநாட்டப் பாடுபட்டு வருகிறார். ஒரு வருஷத்துக்கு முன் இந்தியாவுக்கு வந்தார். இந்தியத் தலைவர்களைப் பேட்டி கண்டார். நமது தலைவர் ராஜாஜியையும் பேட்டி கண்டார். அதன் பயனாக இப்பொழுது தமிழ்நாட்டிலேயே தங்கி இருக்கிறார். தலைவர் ராஜாஜி அவர்களைச் சந்தித்ததையும் அவரைப்பற்றி ஒரு இளம் கம்யூனிஸ்ட் கூறியதையும் இலக்கிய மணம் கமழ அவர் கூறுவதைக் கேளுங்கள். "— ஆசிரியர்.**

இந்தச் சம்பவம் நிகழ்ந்த தேதி எனக்குச் சரியாக ஞாபகமில்லை. சென்ற வருஷம் டிசம்பர் மாதத்தின் முதல் வாரத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

இந்தியாவில் பெங்களூரில் நடைபெற இருந்த, அகில இந்திய சமாதான மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக நான் ஒரு மாதத்துக்கு முந்தியே இந்தியாவுக்கு வந்து விட்டேன். இந்த ஒரு மாத காலமும் தென்னிந்தியாவில் பல இடங்களுக்குச் சென்று ஆங்காங்கே குடும்பத்தைப் பற்றியும், 'அனுகுண்டு சோதனைகளை நிறுத்த வேண்டும்' என்பது பற்றியும் பிரசங்கங்கள் செய்து கொண்டிருந்தேன். எனது வேலைத்திட்டம் சற்றும் ஓய்வில்லாதபடி சரியாக இருந்தது. கடைசியாக நான் மதுரைக்கு வந்திருந்தேன். அங்கிருந்து மாலை ரயிலில் திருச்சிக்குப் போய், இரவைத் திருச்சியில் கழித்துவிட்டு மறுநாள் காலை பெங்களூருக்கு விமானத்தில் பறந்து போக வேண்டும் என்று திட்டம் வகுத்துக் கொண்டிருந்தேன்.

மதுரையில் நான் திருச்சிக்கு ரயில் ஏறிய போது, அந்தப் பெட்டியில் என்னைத் தவிர வேறு யாருமே இருக்கவில்லை. இனி நான் யாருடனும் மறுநாள் சாயங்காலம் வரை பேசவேண்டிய நிர்ப்பந்தம் இல்லை என்பதை அறிந்தேன். அப்போது எனக்கு ஏற்பட்ட ஆறுதல் கொஞ்ச நஞ்சமல்ல!

ரயில் புறப்பட்டது. நான் ஜன்னல் வழியாக வெளியே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் உண்மையில் வெளியில் ஒன்றையும் பார்க்கவில்லை. என் மனக் கண்ணின் முன் தோன்றிய மதுரைக் கோயிலின் கோபுரங்களையே பார்த்து ரஸித்துக் கொண்டிருந்தேன். கோயில் சிற்பங்களின் அற்புத அழகு என் சிந்தனையைக் கவர்ந்து விட்டது. அதைவிட மற்றொரு விஷயம்தான் என் உள்ளத்தை ரொம்பவும் ஆட்கொண்டது. ஒரு காலத்தில் பிரசித்தி பெற்று விளங்கிய மாதா கோவில்களை ஐரோப்பிய மக்களின் வாழ்வுக்கு மையமாக விளங்கினவாம்! அதைப் போல் அல்லவா விளங்குகிறது இந்த மதுரைக் கோவில். இந்த மதுரைக் கோவிலின் பிரும்மாண்டமான பிராகாரங்களில் மக்கள் பக்தி சிரத்தையோடு ஆண்டவனை வணங்கச் செல்லும் காட்சியைப் பார்க்கும்போது 'இவர்கள் வாழ்க்கையிலும் ஆண்டவன் எவ்வளவு முக்கியமான இடத்தைப் பற்றிக் கொண்டிருக்கிறான்!' என்று நினைத்துக்கொண்டே வந்தேன். இப்படி நினைத்துக் கொண்டே வந்தவள் மீண்டும் ராஜாஜியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்பதை உணர்ந்தேன்.

சில நாட்களுக்கு முன்தான் நான் ராஜாஜியைச் சந்தித்தேன். அவரைச் சந்தித்த நாளிலிருந்து அவரோடு நிகழ்த்திய சம்பாஷணையைப் பற்றி, நினைத்துக் கொண்டே வந்திருக்கிறேன். அதைப்பற்றி இப்பொழுதும் நினைக்க ஆரம்பித்து விட்டேன் என்பதை உணர்ந்தேன்!

அதுதான் நான் முதல் தடவையாக ராஜாஜியைச் சந்தித்தது. அவர் பேச்சைக் கேட்ட பிறகு, இதுவே முதல் தடவையாகவும் கடைசித் தடவையாகவும் இருந்துவிடக் கூடாது என்று தீர்மானித்து விட்டேன்.

நான் அவரை முதல்தடவை சந்தித்தபோது அவர் உலக அரசியலைப் பற்றிப் பேசுவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அதற்குப் பதிலாக அவர் என்னைப் பற்றியே கேள்விகள் கேட்க ஆரம்பித்தார். பிறகு கடவுளைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்! நான் அவர் கருத்துக்களை ஒத்துக் கொள்ளவில்லை. என் மாறுபட்ட அபிப்பிராயங்களைச் சொல்லிவந்தேன். எனினும் இடையிடையே நாங்கள் இரண்டு பேருமே வாய்விட்டுச் சிரித்தோம்.

நான் அவர் பேச்சைக் கேட்டு மயங்கிப் போனேன். சிந்தனைக்குப் பெரும் விருந்தாக இருந்தது. மொத்தத்தில் நான் வாய்விட்டு ஒப்புக்கொள்ளும் அளவை விட அதிகமாகவே என் உள்ளம் பெரிதும் நெகிழ்ந்திருந்தது.

இந்தச் சம்பாஷணை மறக்க முடியாததோர் சம்பாஷணையாக இருப்பதற்குக் காரணம் என்ன என்று பின்னால் யோசித்தேன்! அவருடைய நகைச்சுவையா? அல்லது கருத்து

ஆழமாக இருக்குமா? என்றெல்லாம் யோசித்தேன். இவையெல்லாம் அல்லவே அல்ல! பின் என்ன? அது எனக்கே இன்னும் தெரியவில்லை!

இப்படி நான் யோசித்துக் கொண்டே ரயில் பெட்டியின் ஜன்னல் வழியாக வெளியே பார்த்து வந்த போது, திடீர் என்று எழும்பிய புயலின் காரணமாக வானம் இருண்டது; சமவெளிப் பிரதேசம் மாறி மலைப்பிரதேசமாகக் காணப்பட்டது. பச்சைப் பசேல் என்று விளைந்துள்ள வயல்களுக்கு இடம் வைத்தாற்போல் அந்த மங்கிய வெளிச்சத்தில் மலைகள் காட்சியளித்தன. மலையுச்சியின் பாறைகள் பல வர்ணக் கற்கள் பதித்தாற்போல், சிவப்பு, பச்சை நீலம், என்று பல வர்ணங்களில் பிரகாசித்தன. இந்த மாதிரி காட்சியை இதற்கு முன்பு நான் எப்பொழுதும் பார்த்ததில்லை. கற்பனை செய்ததும் கிடையாது. நான் வியப்புக் கடலில் ஆழ்ந்து அப்படியே பார்த்துக் கொண்டிருந்தேன். ரயில் ஓடிக் கொண்டிருந்தது. பிறகுதான், இந்த மாய ஜால வித்தைகள் செய்தது ஒரு வானவில் என்பதை உணர்ந்தேன். கவிஞன் வோட்ஸ்வர்த் வான வில்லைப் பற்றிப் பாடிய பின்வரும் வரிகள் என் நினைவுக்கு வந்தன.



டாக்டர் மோனிகா பெல்டன்

உள்ளம் துள்ளிக் குதிக்குதடா - உவகை
ஊற்றும் பெருகி ஓடுதடா
மென்ன வானவெளி தனிலே - வண்ண
வில்லை இந்திரன் வளைத்ததுமே!

நான் கண்களை மூடினேன். திருச்சி ஜங்ஷனுக்குள் வண்டி நுழைந்தபோதுதான் விழித்துக் கொண்டேன்.

அங்கு நான் சற்றும் எதிர்பாராததொன்று நிகழ்ந்தது. உள்ளூர் சமாதானக் குழு அங்கத்தினர்கள் என்னை வரவேற்கப் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தனர். ஆம், திருச்சியில் என்னை வரவேற்க யாராவது வருவார்கள் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

அவர்கள் அன்புடன் உபசரித்தார்கள். சுமார் ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்தோம். இரவு ரொம்ப நேரம் ஆகிவிட்டதால், நான் படுக்கச் சென்றேன். அவர்களும் அவரவர்கள் இல்லங்களுக்குச் சென்றனர்.

மறு நாள் காலை நான் திருச்சி விமான நிலையத்துக்குப் புறப்பட்டுச் சென்றேன். அங்கு முதல் நாளிரவு சந்தித்துப் பேசிக்கொண்டிருந்த ஒரு இளைஞர் என்னை வழியனுப்ப வந்திருந்தார். நாங்கள் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தோம். அவர் திடீரென்று என்னைப் பின்வருமாறு கேட்டார்:

''நீங்கள் சென்னையிலிருந்த போது ராஜாஜியைப் பார்த்தீர்களா?'' என்று கேட்டார்.

''பார்த்தேன்.''

இந்தப் பதிலைக் கேட்டதும் அவர் முகத்தில் ஒரு புது ஒளி வீசியது. அவர் கேட்டார்: ''அவருக்குச் சமமாக மதிக்கக் கூடிய ஒரு மனிதரை நீங்கள் உலகில் வேறு எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா?''

மிகவும் ஜாக்கிரதையாக ஏதோ பதில் சொல்ல ஆரம்பித்தேன். ஆனால் அந்த வாக்கியத்தை முடிக்கவில்லை; அதற்குப் பதிலாக, ''ராஜாஜியைப் பற்றி நீங்கள் ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''நான் ஒரு கம்யூனிஸ்ட் என்று நேற்றிரவு உங்களிடம் சொன்னேனோ என்னவோ எனக்கு ஞாபகமில்லை; நான் கல்லூரியில் சேர்ந்து படிக்கத் தொடங்கிய முதலாண்டிலேயே நான் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து விட்டேன். இரண்டாவது வருஷ ஆரம்பத்தில் கல்லூரியை விட்டு, கட்சியின் முழு நேர அரசியல் பிரசாரகனாக வேலை செய்யும்படி உத்தரவு வந்தது. இதையறிந்த என் அப்பாவுக்கு என்மேல் அளவு கடந்த கோபம்; அவர் ராஜாஜியிடம் போனார். ராஜாஜி எங்கள் குடும்பத்தின் நீண்ட நாளைய நண்பர். அவரைக்கொண்டு என் மனத்தை மாற்ற விரும்பினார். ஆமாம், கம்யூனிஸத்தைப் பற்றி ராஜாஜியின் கருத்துக்கள் உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன்'' என்று சொன்னார்.

''தெரியும்'' என்று தலையை அசைத்தேன்.

''ராஜாஜி எனக்குச் சொல்லி யனுப்பினார். நான் அவர் வீட்டுக்குச் சென்றேன். அவர் உட்கார்ந்திருக்கும் அறைக்குள் நுழைந்தேன். என்னைப் பார்த்ததும் அவருடைய வழக்கமான புன்சிரிப்பை என்மேல் வீசி 'நீ உன் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளத் தீர்மானித்து விட்டாய், இல்லையா?' என்றார்.

''எனக்கு அவரை என் சிறு வயது முதலே தெரியும். அவரிடம் நான் எப்பொழுதும் உண்மையையே சொல்லி யிருக்கிறேன். அதனால் நான் அவரிடம் 'என் உள்ளத்தில் எது சரி என்று உணர்கிறேனோ அதைச் செய்யாவிட்டால் என் வாழ்க்கை நிச்சயம் பாழாய்ப் போகுமே!' என்று சொன்னேன்.

''என்னுடைய மொழிகளில் என் உள்ளத்துத் தீவிர உணர்ச்சியை ராஜாஜி உணர்ந்தார். ''நீ செய்யும் காரியம் சரியானது என்று உன் உள்ளத்தில் நிச்சயம் ஏற்பட்டு விட்டால், நீ அந்தக் காரியத்தைச் செய்தே யாகவேண்டும்!' என்றார். அவ்வளவுதான். அன்று நான் அடைந்த ஆச்சரியத்தைப்போல்

நான் என்றுமே அடைந்ததில்லை. ராஜாஜி என் தகப்பனாரைக் கூப்பிட்டுச் சொன்னார். அதற்கு மேல் சர்ச்சைகள் நடைபெறவில்லை; ராஜாஜி அங்கீகரித்தாலும் அங்கீகரிக்கா விட்டாலும் நான் தீர்மானித்தபடி கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்துதான் இருப்பேன். ஆனால் ராஜாஜியின் தலையீட்டினால் எங்கள் குடும்பத்தில் பிளவு ஏற்படவில்லை........" என்று கூறி நிறுத்தினார்.

ஒலிபெருக்கியில் ஒரு குரல் கேட்டது. பிரயாணிகள் விமானத்தில் ஏறிக் கொள்ளும்படி அக்குரல் உத்தரவிட்டது. அந்த நண்பர், "நீங்கள் போகப் போக ராஜாஜி எவ்வளவு பெரிய மனிதர் என்பதைப் பற்றி நிறையக் கேள்விப்படுவீர்கள். அவர் மிகப் பெரிய தலைவர் என்பதில் சந்தேகமில்லை. அவருடைய கருத்துக்களோடு ஒத்துப் போகாத நாங்கள் கூட அவர் பெரிய ஆட்சியாளர் என்பதை ஒப்புக் கொள்ளுகிறோம். ஆனால் அவருடைய உண்மையான பெருமை அவர் மக்களைப் புரிந்து கொண்டிருப்பதிலும் அவர்களிடம் அவர் கொண்டுள்ள அன்பிலும்தான் இருக்கிறது. அறிவு கலந்த அன்புடன் மக்களை நேசிக்கும் இந்த அரிய பண்பு உலகில் மிக அபூர்வமாகவே காணப் படுகிறது இல்லையா! இந்தப் பண்புக்காகத்தானே உலகம் இன்று ஏங்குகிறது?" என்று சொல்லி முடித்தார்.

ராஜாஜியைப் பற்றி நான் கேள்விப்பட்ட பல கதைகளில் இதுதான் முதல் கதை.

சில வாரங்கள் கழித்துத் தில்லிக்குச் சென்றேன். இதற்குள் ராஜாஜியைப்பற்றி ஒரு புத்தகம் வெளிவர வேண்டும் என்று எண்ணினேன்; பிறகு அந்தப் பணியில் நானே ஈடுபட்டால் என்ன என்று நினைத்தேன். அப்போது ராஜாஜி தில்லியில் இருந்தார். இதற்கு அனுமதி தருமாறு அவரைக் கேட்பதற்குத் தில்லியில் அவர் தங்கியிருந்த இடத்துக்குப் போனேன். அவர் மறுத்தார். நான் பிடிவாதமாக இருந்தேன். அவர் தொடர்ந்து மறுத்துக் கொண்டுதான் வருகிறார். இருந்தாலும் முயன்று பார்த்து விடுவது என்று தில்லியிலிருந்து சென்னைக்கு வந்து விட்டேன். இப்பொழுது சென்னையில் தங்கி வருகிறேன்.

இந்த முயற்சியில் நான் வெற்றி பெறுமற் போகலாம். ஆனால் எனக்கு ஒரு லாபம். நான் உலகில் எத்தனையோ பெரியார்களோடு பேசியிருக்கிறேன். ஆனாலும் நான் உலகில் வேறு எவரிடமும் கற்றுக் கொள்ள முடியாத பல அரிய விஷயங்களைச் சென்ற ஒரு ஆண்டில், ராஜாஜி அவர்களிடமிருந்து தெரிந்து கொண்டிருக்கிறேன்.

திருச்சியில் சந்தித்த நண்பரின் பெயரை மறந்து விட்டேன். இப்போது பார்த்தால் அவரை அடையாளம் கண்டு கொள்வேனோ என்பதுகூடச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. ஆனால் அவர் சொன்ன வரலாறு, அன்று மலை உச்சியின்மீது விழுந்த வான வில்லைப்போல், ராஜாஜியை முதன் முதலில் சந்தித்து நான் அறிந்து கொண்ட பண்புகளை இன்னும் பல வண்ணங்களில் சுடர் விட்டுப் பிரகாசிக்கச் செய்தது. அதற்கு நான் அந்த இளைஞருக்குக் கடமைப்பட்டுள்ளேன்.






2



3

உலக புலால் மறுத்தல் மகாநாட்டின் 15-வது மகாநாடு சென்னையில் சென்ற வாரம் 27, 28, 29 ஆகிய தேதிகளில் வெகு சிறப்பாக நடைபெற்றது. வெள்ளிக்கிழமை 29-ந் தேதி யன்று மகாநாட்டுக்கு வந்திருந்த அங்கத்தினர்கள் காந்தி மண்டபத்துக்கு விஜயம் செய்து தங்கள் வாழ்க்கையைப் பண்படுத்திய மகானுக்கு அஞ்சலி செலுத்தினர்.

1. புலால் மறுத்தல் மகாநாட்டில் ராஜாஜி கலந்து கொண்டு பேசுகிறார். 2. புலால் மறுத்தல் மகாநாட்டை யொட்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பொருட்காட்சியை மைசூர் கவர்னர் ஸ்ரீ ஜயசாம ராஜ உடையார் திறந்து வைத்தார். 3. ஸ்ரீமதி ருக்மிணி தேவியும், ஸ்ரீமதி சரோஜினி வரதப்பனும், 4. மகாநாட்டுக்கு வந்திருந்த அன்னிய நாட்டு அங்கத்தினர்கள்.



4

# கருணையும் பக்தியும்

எல். என். கோபாலசாமி

ராஜாஜி அவர்களின் நுண்ணிய அறிவையும், விசால நோக்கத்தையும் தூரதிருஷ்டியையும் விவரிக்க வேண்டிய சக்தி அடியேனுக்கு இல்லையாயினும், அவருடைய கருணையையும் தெய்வ பக்தியையும் சில சமயங்களில் காணும் சந்தர்ப்பம் அடியேனுக்குக் கிடைத்ததுண்டு.

1947-ம் ஆண்டில் மலைசாதியினர் க்ஷேம நலக் கமிட்டியில் அடியேனும் ஒரு அங்கத்தினராக இருந்த காரணத்தால், தென் கன்னட ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்ய நேர்ந்தது. ஒருநாள் எங்கள் கமிட்டியினர் ஓய்வு பெற்ற ஒரு மிருக வைத்தியரின் வீட்டில் தங்க வசதி செய்யப்பட்டிருந்தது.

அன்றுமாலை நாங்கள் அங்கு செல்லும்போது அந்த டாக்டர் குடும்பத்தினர் வீட்டின் பட்டகசாலையில் ஒரு படத்தின் முன் நின்று அஞ்சலி செய்த வண்ணம் நின்று கொண்டிருந்தனர். படத்துக்கு மாலை போடப்பட்டிருந்தது. யாருடைய படம் என்று பார்த்த பொழுது ராஜாஜி அவர்களுடைய படமாகவே இருந்தது. இதைப் பார்த்த எனக்கு ஆச்சர்யம் ஏற்பட்டது. அதுவும், தமிழ் நாட்டினரல்லாத ஒருவர், ராஜாஜியின் படத்தை வைத்துத் தினமும் பூஜை செய்வதென்பது நம் பக்திக்கு ஒரு மட்டம் தட்டுவது போலிருந்தது. 'யார் அவர்? காரணம் என்ன?' என்று விசாரிக்க ஆவலேற்பட்டது. நான் விசாரித்துத் தெரிந்து கொண்டதை, அந்த டாக்டர் பெயரை மட்டும் குறிப்பிடாமல் விளக்கலாம் என்று நினைக்கிறேன்.

இத்தீவிர பக்தர் ராஜாஜி முதன் முறை சென்னையின் முதன் மந்திரியாக இருந்த காலத்தில், நாகப்பட்டினத்தில் சர்க்கார் மிருக வைத்தியராக வேலை பார்த்து வந்தார். புது காங்கிரஸ் சர்க்காரின் லஞ்ச ஒழிப்பு வேலையில் மும்முரமாக இருந்த காரணத்தால் அவர் மீது வந்த ஒரு புகார் விசாரணை செய்யப்பட்டு வேலையிலிருந்து நீக்கப்பட்டார். டாக்டர் நாகப்பட்டினத்தில் உத்தியோகத்திலிருந்தபோது, வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் ஆடுமாடுகளுக்குச் சர்டிபிகேட் கொடுப்பதற்காக இனம் ஒன்றுக்குக் கணக்குப் போட்டு லஞ்சம் வாங்கிக் கொண்டதாகவும் இந்த வகையில், சுமார் ரூ. 12000 வரை அவர் பெற்றுக் கொண்டதாகவும் குற்றம் சாட்டப்பட்டு, சுகாதார மந்திரி டாக்டர் ராஜன் அவர்களால் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். டாக்டர் ராஜனின் உத்தரவின்பேரில் அப்பீல் பிரதம மந்திரிக்குச் சமர்ப்பிக்கப்பட்டபோதுதான் ராஜாஜியின் காருண்யம் வெளிப்பட்டது. டாக்டர் ராஜனை அழைத்து அவருடன் விவாதித்து, டாக்டர் ராஜன் அவர்களைக்கொண்டே அவர் தம் உத்தரவை மாற்றுமாறு செய்வித்தார்.

மிருக வைத்தியர் வாங்கிய பணம் லஞ்சம் என்று சொல்லுவதற்கில்லை. அது ஒரு மாமூலாக நெடுங்காலமாக வழங்கப்பட்டு வருவது ஆனாலும் மிருக வைத்தியர் சர்க்கார் சம்பளத்துக்கு மேல் சம்பாதித்த அதிகப் பணம் அவருக்குச் சொந்தமானதல்ல. அதை அவர் சர்க்காருக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டும்; அதற்குமேல் அவருக்கு வேறு ஒரு தண்டனையும் வேண்டாம் என்று ராஜாஜி தீர்ப்புக் கூறினார். குற்றவாளி குற்றத்துக்கேற்ற தண்டனைக்கும் ஆளாக்கப்பட்டார். அதோடு அவருடைய பிற்கால வாழ்க்கையும் பாழாக்கப்படாமல் காப்பாற்றப் பட்டார். இல்லாமற் போனால் ஏழு குழந்தைகளும் டாக்டர் தம்பதிகளும் இன்றையதினம் என்ன கதியில் இருப்பார்களோ?

இக் காலத்தில் ராஜாஜியையும் அவர் புத்தகங்கள் சொற்பொழிவுகளையும் தெரிந்தவர்கள் அவருடைய தெய்வ பக்தியை நன்கு அறிந்து போற்றுகிறார்கள். ஆனால் 1939ம் ஆண்டிலே ராஜாஜியின் தெய்வ பக்தியை அப்போது யாரும் அறிந்ததில்லை.

ராஜாஜி சென்னையில் முதன்முறை மந்திரியாக இருந்தபோது தென் பழனியாண்டவர் கோவில் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டது எல்லோரும் அறிந்ததே. ஆனால் ஹரிஜன ஆலயப் பிரவேசமான சில நாட்களிலே ராஜீயப் போராட்டம் காரணமாக காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜிநாமா செய்ய வேண்டியிருந்தது. அந்தச் சமயம் அடியேன் ராஜாஜியையும், திரு வி. ஐ. முனிசாமி பிள்ளையையும் பழனி ஆண்டவன் கோவிலுக்குத் தரிசனம் செய்ய அழைத்துச் சென்றேன். ராஜாஜி அவர்கள் முனிசாமி பிள்ளையுடன் கூட ஆண்டவனை வழிபட்டு நன்கு தரிசனம் செய்த பின்னர் வழியனுப்ப வேண்டி ஆலயக் குருக்கள்மார் ஆண்டவன் முன்னிலையில் அவருக்குச் சந்தனம் அளித்து, பரிவட்டம் கட்டிப் பிரசாதம் அளித்து உபசரித்தனர். அப்போது தான் கண்டேன் ராஜாஜியின் தெய்வ பக்தியை. அப்படியே, மெய்மறந்து போனார் ராஜாஜி. தம்மையும் அறியாமல் நின்றார் சில நிமிடங்கள். சட்டென்று நினைவுற்றார். தம் சட்டைப் பையிலிருந்து மணிபர்ஸை எடுத்தார். பொத்தானைத் திறந்தார். இரண்டு பக்கங்களிலும் கையை அழுத்தி, பையை அப்படியே தலை கீழாகக் கொட்டினார். அதிலிருந்த பணம் முழுவதையும் காணிக்கையாகத் தட்டில் செலுத்தினார். இரவு திரும்பிப்போக ரயில் செலவுக்குக் கடன் வாங்கிக் கொண்டு புறப்பட்டார். அப்படிப் போகும்போது என்ன சொன்னார் தெரியுமா?

''நானும் வி. ஐ. முனிசாமி பிள்ளையும் ஒன்றாக நின்று ஆண்டவனைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. இது ஒன்றே போதும் எனக்கு'' என்று சொன்னார் ராஜாஜி.



கேவாபான் 33ல், டி.டி. லைபத் எடுத்த புகைப்படம்




# கவலையற்ற பிரயாணி

நெடிதுயர்ந்த இமாலயச் சிகரத்தினூடே இந்தப் பிரயாணி தன் குதூகலப் பிரயாணத்திலும் லாபமடையலாம் என்ற நம்பிக்கையோடு முன்னேறுகிறான். அவனது மலர்ந்த முகமே அவனது கவலையற்ற வாழ்வைக் கூறும் கதையாக அமைந்திருக்கிறது. கேவர்ட் பிலிமில் எடுக்கப்பட்ட படங்களைக் கண்டு நீங்கள் எவ்வளவு தூரம் ஆனந்த மடைவீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். அவை உங்களுக்கு இனிமையான சம்பவங்களையும் வியக்கத்தக்க நினைவு அலைகளையும் உங்கள் மனத்தில் கொண்டு வந்து நிறுத்தும். வீட்டினுள்ளும் வெளிப்புறத்திலும் படங்கள் எடுக்க **கேவாபான் 33** அல்லது **கேவாபான் 36** உகந்தவை. கேவாபான் 36ல் "மந்தமான வெளிச்சத்திலும் பிரகாசமான படங்களை" எடுக்கலாம். அற்புதமான வர்ணப் படங்களுக்கும், பெரிய படங்களுக்கும் கேவாகலர் நெகடிவ் பிலிம் (N5) உபயோகியுங்கள். மேலும் உங்களுக்குத் திருப்தியளிக்க உங்கள் பிரின்டுகளும், என்லார்ஜ்மென்டுகளும் — சாதாவோ — கலரோ எதுவாயினும் கேவர்ட் பேப்பரில் செய்யப்பட்டுள்ளனவா என்று பாருங்கள்.

**GEVAERT**

**ALLIED PHOTOGRAPHICS PRIVATE LIMITED**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் பிரைவேட் லிமிடெட்
கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

# பாவை விளக்கு



## அத்தியாயம் 33

## பழைய நினைவு

"அட, நீங்களா! யாரது, உங்கள்?" என்று தடுமாறினாள் செங்கமலம்.

"ஆமாம், கௌரி; என் மனைவி; இப்போது தான் எங்களுக்குக் கல்யாணம் நடந்தது" என்றான் தணிகாசலம்.

அருவிக்கரையில் இப்படி ஒரு எதிர்பாராத சந்திப்பு நடந்தவுடன் எதிர்பாராத வகையில் சமாளித்துக் கொண்டார்கள் இருவரும். தணிகாசலத்தின் முகத்தில் பரவிய கலவரத்தைச் செங்கமலம் கண்டு கொண்டாள். அவளுடைய கலவரத்தை அவன் கண்டுகொண்டான். மற்ற இருவரும் அதைக் கண்டு கொள்ளவில்லை. இருள் பரவிய நேரமாதலால் எப்படியோ இருவரும் தங்கள் திகைப்பை மறைப்பதில் வெற்றி பெற்றார்கள்.



அறிமுகம் செய்து வைத்தாள் செங்கமலம். அந்த இளைஞர் அவள் கணவன்; பெயர் குமாரசாமி; மாயவரத்துக்கு அடுத்தாற் போல் உள்ள ஒரு கிராமத்தில் மிராசுதார். நாகரிகமான மிராசுதாருக்குரிய உடையலங்காரத்துடன் காணப்பட்டார் அவர். நீண்ட அங்கவஸ்திரம்; காலில் 'ஸ்லிப்பர்'; நெளி நெளியான கிராப்புத் தலை; அழகான நறுக்கு மீசை. தணிகாசலத்தை விட மூன்று நான்கு வயது அவருக்கு அதிகம் இருக்கலாம். நாணம் கலந்த புன்சிரிப்புடன் அவனிடம் பேசினார்.

"நீங்களும் எங்களைப் போல் சாரல் காலம் போன பிறகு வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறது."

தணிகாசலம் தான் அங்கு வந்த காரணத்தைக் கூறினான். "எங்களுக்கு எப்போதுமே சாரல் காலம்தான்."

பெண்கள் இருவரும் அதற்குள் தனியே ஒதுங்கிப் பேசிக்கொண்டார்கள். செங்கமலம் தன் கிராமத்தைச் சேர்ந்தவள் என்பதையும், அடுத்த வீடு-பரம்பரைப் பழக்கமுள்ள குடும்பம் என்பதையும் தணிகாசலம் கூறினான். அவரைப் பார்த்ததில் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டான். "நீங்கள் இருவரும் ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு வந்து ஒருவேளை சாப்பிட வேண்டும்" என்றான்.



"நாங்கள் சாப்பிடுவது இருக்கட்டும்; முதலில் நீங்கள் நாளைக்கு எங்கள் பங்களாவுக்கு வாருங்கள்" என்றாள் செங்கமலம்.

"சரி நாளைக்கு வருகிறேன்" என்றான் தணிகாசலம்.

"வருகிறேன் என்கிறீர்களே, வருகிறோம் என்று சொல்லுங்கள்"

அகிலன்



என்றாள் செங்கமலம். தங்கியிருக்கும் பங்களாவைச் சொல்லி, ''கௌரியையும் அழைத்துக் கொண்டு வாருங்கள்'' என்றாள். தணிகாசலம் ஒப்புக் கொண்டான்.

அன்றைக்கு அவனும் கௌரியும் வீட்டுக்குச் சென்ற பிறகும் அவனைச் செங்கமலத்தின் நினைவு சுற்றிக் கொண்டே வந்தது. சாப்பிட்டபின்பு ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு உட்கார்ந்தான். படிப்பில் மனம் லயிக்கவில்லை. புத்தகத்தின் ஒவ்வொரு ஏட்டைப் புரட்டிய போதும், செங்கமலத்துடன் கழித்த ஒவ்வொரு நாள் நிகழ்ச்சிகளையும் புரட்டுவது போல் தோன்றியது. மனத்தின் அடித்தளத்தில் மக்கிப் போய்க் கிடந்த நினைவுகள் புது மெருகு பெற்று வெளியில் தலைகாட்டின. 'செங்கமலத்தின் முகத்தில் ஏதோ ஒரு மந்திர சக்தி மறைந்து கிடக்கிறது; அது இப்படியெல்லாம் தொல்லை கொடுக்கிறது' என்று எண்ணினான். நினைப்பது தவறு என்று அவனுடைய உள் மனத்தின் உள்மனம் சுட்டிக் காட்டியது.

ஆனால் அதன் மேற்பரப்பில் வெளி மனமாகிய விந்தை வெளியில் அவன் அன்றொரு நாள் சிவன் கோயில் திரு விழாவில் ஆடிய அதே ஆனந்த நடனம் ஆடினான். மற்ற எல்லா நாட்களையும் அவனால் மறக்க முடிந்தாலும் அரங் கேற்றம் நடந்த அந்தக் கடைசி நாளை அவனால் மறக்க முடியவில்லை. நடனம் முடிந்த பிறகு அவள் அவனைச் சந்திக்க வந்தது, அரசமரத்தடி நிழலில் அவர்கள் அமர்ந்து பேசியது, நாகசுரக்காரரின் காம்போதி ராக ஆலாபனை, அதை அடுத்து எழுந்த அதிர்வேட்டுச் சத்தம் எல்லாவற்றையும் நினைத்துக் கொண் டான். அவனுடைய தாயார் செல்லக் கண்ணு அவள் கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துத் தள்ளிக் கொண்டு போனான் அல்லவா? 'நல்ல இடத்தில்தான் தள்ளி விட்டிருக்கிறான்.'

கௌரி அவன் எதிரில் வந்து நின்றதை அவன் கவனிக்கவே இல்லை. அவளும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். பொறுக்க முடியவில்லை.

''என்ன யோசனை உங்களுக்கு?''

தணிகாசலத்தின் கண்களுக்குக் கௌரியின் உருவம் தெரிந்தது.

''ஒரு கதை......கதையை நினைத்துக் கொண்டிருந்தேன்'' என்றான்.

''நல்ல கதை வந்தது உங்களுக்கு! மேலே வந்து முட்டிக் கொண்டாலும் தெரியாது போலிருக்கிறது.''

தணிகாசலம் மெல்லச் சிரித்தான். அதுவும் ஒரு பழைய சோகக் கதை தானே? அவனுடைய முதல் கதையைக் கொடுத்த கதை......

கௌரியின் தோற்றத்தில் அன்றைக்கு அவனுக்கொரு புதுமை தெரிந்தது. அவளை உச்சி முதல் உள்ளங் கால் வரை அணு அணுவாய்ப்பார்த்தான். முன்பின் பார்த்தறியாத ஒருவனமோகினி காட்டு ரோஜாச் செடிகளைச் சுற்றிக் கொண்டு அவன் முன்னே நிற்பது போல் பிரமை தட்டியது. மெல்லிய வாயில் புடவையில் மலர்ந்திருந்த அச்சு ரோஜாக்கள் உயிர் பெற்று விட்டன. கண்ணெதிரில் வந்து நிற்கும் வண்ணச் சிறு கிளியை எட்டிப் பிடிக்காமல், கற்பனை யிலே கரைந்துவிட்ட கவின் கனவைப் பின்பற்றிச் செல்லலாமோ?

''கௌரி! அன் றைக்கு நாம் தென் காசிக் கோயில் தூணில் ரதியின் சிற்பத்தைப் பார்த்தோமே?''

கௌரி சிரித்தாள்; பதில் எதுவும் சொல்லவில்லை.

''அந்த ரதி தன் கிளியைப் பறக்க விட்டு இங்கே ஓடி வந்திருக்கிறாள்.''

ரதியின் வண்ணச் சிலை செங்கமலத் தைப் போல் உயரமாகவோ ஒல்லி யாகவோ இல்லை. கௌரியைப் போன்று ஒருத்தியை நினைத்துக் கொண்டு வடித்த சிலை அது. அங்க லட்சணங்கள் அப்படி அப்படியே துண்டு துண்டாகப் பளிச்சிட் டன. உறுதியும் குழைவும், திண்மையும் மென்மையும், மெருகும் மினுமினுப்பும் ஒன்றுடன் ஒன்று போட்டியிட்டன. அது கருங்கல்லின் இழைப்புக் கலை. இது இயற்கையின் படைப்புக் கலை. ''கௌரி! நீ ரதியைவிட அழகி. அவள் நிறம் கறுப்பு. உன் நிறம் சந்தனக் கலவை.''

முரட்டுத் தனமாகக் கௌரியைப் பற்றி இழுத்தான் தணிகாசலம். அவ ளுக்கு மூச்சுத் திணறியது. ''நீங்கள் ரொம்பவும் மோசம்!'' என்று அவள் சிணுங்கினாள்.

மறு நாள் பொழுது விடிந்தது.

மாலையில் கௌரியுடன் செங்கமலத் தைப் பார்க்கச் சென்றான் தணிகாசலம். இவர்களை எதிர்பார்ப்பது போலவே உள் வாயில் முகப்பில் நின்று கொண் டிருந்தாள். வெளிக் கதவைத் தாண்டி இவர்கள் உள்ளே நுழைந்தவுடன் ஓட்ட மும் நடையுமாக வந்து கௌரியைப் பிடித்துக் கொண்டாள் செங்கமலம். சுற்றுச் சுவருக்குள் பங்களாவுக்கு முன் னால் சிறியதொரு பூந்தோட்டம். வாசற் படியருகில் பெரிய 'ரோல்ஸ் ராய்ஸ்' கார் வந்து நின்றது.

விசாலமான கூடம்; பெரிய பெரிய ஜன்னல்கள்! கண்ணாடிகளும் படங்களும் சுவர்களை அலங்கரித்தன. மத்தியில் கிடந்த வட்டமான மேஜை மேல் பூ ஜாடி இருந்தது. குமாரசாமி சோபா வில் சாய்ந்து செய்தித் தாளைப் புரட்டிக் கொண்டிருந்தார். விருந்தினர்களைக் கண்டவுடன் நிமிர்ந்து உட்கார்ந்து வர வேற்றார். செங்கமலம் கௌரியுடன் பின் கட்டுக்குச் செல்லவே, தணிகாசலம் குமாரசாமிக்கு எதிரில் இருந்த ஒரு நாற்காலி யில் உட்கார்ந்தான்.

குமாரசாமி ஒரளவு களைப்புடன் காணப்பட் டார். அவர் இருந்த நிலை யைப் பார்த்தால் அவர்கள் உலவுவ தற்குக் கிளம்ப மாட்டார்கள்



போல் தோன்றியது. ''ஏன், சிறிது தூரம் நடந்து வரலாமே?'' என்று சொன்னான் தணிகாசலம்.

''காலையில் வெளியே போனவர்கள் பன்னிரண்டு மணிக்குத்தான் திரும்பினோம்'' என்றார் குமாரசாமி. ''இவன் பேச்சைக் கேட்டு மலைச்சிக்குப் போய்க் கால் வலிக்கிறது'' என்று சொல்லி முழங்கால்களைப் பிடித்துக் கொண்டு சிரித்தார். நடையின் அசதி அவரது கண்களில் தெரிந்தது.

வலதுபக்கத்துப் படுக்கையறைக் கதவு பாதி திறந்திருந்தது. பெரியதொரு மரக்கட்டிலின் மேல் பட்டுமெத்தையும் வெல்வெட் உறை போட்ட தலையணைகளும் கிடந்தன. பங்களா முழுவதுமே குளுமையான லவண்டர் மணம் வீசிக் கொண்டிருந்தது. கூந்தல் தைலம்,



சோப்பு, பௌடர் முதலிய அலங்காரச் சாமான்கள் ஒரு மூலையில் கண்ணாடி மேஜையின் மேல் இருந்தன.

வேலையாள் கடையிலிருந்து காப்பி வாங்கி வந்தான். செங்கமலம் தகர டப்பியைத் திறந்து 'பிஸ்கட்'டுகளை எடுத்து வைத்தான். குமாரசாமியும் தணிகாசலமும் சாப்பிட்டுக் கொண்டே பேசினார்கள். குமாரசாமி தம்முடைய நிலபுலன்களைப் பற்றிச் சொன்னார்; விலைவாசி ஏற்றத்தினால் நெல்லுக்கு அது வரை நல்ல கிராக்கி இருந்தது. மூன்று நான்கு வருஷங்களாக வருமானம் தேவலாம். ஆனால் உழைக்கும் விவசாயிகள் நிலைமை அவ்வளவு சரியாக இல்லை ஒத்துழைக்காமல் தகராறு செய்கிறார்கள். வம்பும் வழக்கும் கிராமத்தில் பெருகி விட்டது.

''நிலத்தை விற்றுப் பணத்தைத் தொழிலில் போடலாமென்று பார்க்கிறேன்'' என்றார் குமாரசாமி. ''சென்னைக்குப் போய் ஏதாவது வருமானமுள்ள தொழிலைக் கவனிக்க வேண்டும். இனி மேல் கிராமத்தில் சரிப்பட்டு வராது'' என்றார்.

அவர் கவலைப்பட்ட அளவுக்குக் கிராமங்களில் அப்போது புதிய சலசலப்புத் தொடங்கியது உண்மைதான். ஆனால் அப்படி ஒன்றும்கிராமவாசிகளின் வாழ்க்கைத் தரம் உயர்ந்து விடவில்லை. பேச்சுக்கு ஆள் அகப்படாததால் அவர் தம்மிடம் பேசுகிறார் என்று தெரியாமல், சீமையில் தயாரித்த ரொட்டி வாயில் கரையும் உற்சாகத்தில் அவனும் அவருக்கு ஏதோ யோசனை சொல்லத் தொடங்கினான்.

''காலம் மாறி வருகிறது. இரண்டு பக்கமும் நியாயமான அளவுக்கு விட்டுக் கொடுத்து விளைச்சலைப் பெருக்க வேண்டும். நாட்டுக்கே சோறு போடும் பெருமை உழவுக்குத்தானே உண்டு? இதை விட்டு எதற்காகப் பட்டணத்துக்குப் போக வேண்டும்?''

குமாரசாமி சட்டென்று தம் பேச்சை நிறுத்தினார்; முகத்தைச் சுளித்தார். தம்முடைய அந்தஸ்து அவருடைய நினைவுக்கு வந்துவிட்டது. பெரிய மிராசுதாருக்குக் கேவலம், தொடக்கப் பள்ளி ஆசிரியர் யோசனை சொல்வதா! தம்முடைய வெண் பட்டு அங்கவஸ்திரத்தால் தம்மைத் தாமே விசிறி விட்டுக் கொண்டார். பணம், பதவி, திறமை முதலிய விவகாரங்கள் எப்படியோ மனிதர்களுக்குத் தலைக் கனத்தைக் கொடுத்து விடுகின்றன.

தணிகாசலமும் இதுபோன்ற போலித் தனத்துக்கு மசியாதவன். குணத்துக்கும் வயதுக்கும் மதிப்புக் கொடுப்பானே தவிர, பணத்துக்கும் பகல் வேஷத்துக்கும் வளைய மாட்டான். செங்கமலத்தை உத்தேசித்து இளம் மிராசுதாரை மதிக்க வேண்டியிருந்தது. பிறகு அவரிடம் சரளமாகப் பேசி மோதுதலைத் தவிர்த்துக் கொண்டான்.

உலவப் போவதில்லை என்ற விஷயம் தெரிந்தவுடன் தணிகாசலம் வீட்டுக்குப் புறப்படுவதற்காகஎழுந்தான். ''வாருங்களேன், வீடு பக்கத்தில்தான் இருக்கிறது; இரவுச் சாப்பாட்டை அங்கே வைத்துக் கொள்ளலாம்'' என்று அழைத்தான்.

கௌரியும் செங்கமலத்தை வற்புறுத்திக் கொண்டிருந்தாள். செங்கமலம் குமாரசாமியைப் பார்த்து, "போய் வருவோமா ?" என்று கூப்பிட்டாள்.

"நீ வேண்டுமானால் இப்போதைக்குப் போய் வா ; இன்னொரு நாள் சாப்பாடு வைத்துக் கொள்வோம். எனக்கு இன்றைக்குக் களைப்பாக இருக்கிறது." குமாரசாமி சோம்பல் முறித்துக் கொண்டு கொட்டாவி விட்டார்.

செங்கமலத்துடன் அவர்கள் வீட்டுக்குத் திரும்பினார்கள். குமாரசாமியின் களைப்பைவிட அவருடைய அந்தஸ்துதான் இப்போது குறுக்கே நின்றது என்பதைத் தணிகாசலம் தெரிந்து கொண்டான். என்றாலும் அவரிடம் அவனுக்குத் தனிப்பட்ட பிரியம் ஏற்பட்டு விட்டது.

கல்யாணி அம்மாளின் கால்களில் விழுந்து வணங்கினாள் செங்கமலம். பெண்களின் பேச்சு நீண்ட நேரம் நடந்தது. பிறகு தணிகாசலத்தின் அறைக்கு வந்தாள். அவனுடைய கதைகளைப் பற்றித் தன் கருத்தைக் கூறினாள்; பாராட்டினாள். அவனை இவ்வளவு சீக்கிரம் திரும்பவும் சந்திக்க முடிந்ததில் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்.

" அது சரி, குமாரசாமி ஏன் இங்கு வரவில்லை ? தயங்குகிறாரே ?" என்று கேட்டான் தணிகாசலம்.

" அவர் போக்கு ஒரு மாதிரி; தாராளமாக மற்றவர்களிடம் கலந்து பழக மாட்டார்" என்றாள் செங்கமலம். பிறகு உண்மையை அவனிடம் மறைக்க முடியாமல் ஓரளவு வெளியிட்டாள்.

"என்னோடு அவர் சேர்ந்து வாழ்வது அவரைச் சேர்ந்தவர்களுக்குப் பிடிக்கவில்லை. வெட்கம் ஒரு பக்கம்; பயம் ஒரு பக்கம் ; தயக்கம் ஒரு பக்கம். யார் வீட்டுக்கும் என்னை அழைத்துக்கொண்டு போக மாட்டார். நாங்கள் வெளியில் சேர்ந்து பழகியதில்லை. இதற்காக அவருக்கு என்னிடம் அன்பில்லை என்று சொல்ல முடியாது. எனக்காகவே குற்றாலத்துக்கு வந்திருக்கிறார்."

"சாரல் காலத்தில் வந்தால் நன்றாயிருக்குமே?" என்றான் தணிகாசலம்.

"சாரல் காலத்தில் நெருக்கடி அதிகம். தெரிந்த மனிதர்களின் கண்ணில் பட வேண்டியிருக்கும். நேருக்கு நேர் சந்தித்தால் அப்புறம் ஒதுக்க முடியாது."

"பாவம்! ஒதுக்கிவந்த இடத்தில் நான் குறுக்கிட்டேன்."

"தணிகாசலம்!" என்று செல்லமாய் அதட்டினாள் செங்கமலம். "உங்கள் முரட்டுத்தனம் இன்னும் போகவில்லை. அதுசரி, நான் எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்குமே?"

" கடிதம் கிடைத்திருக்காவிட்டால் இதற்குள் எனக்குக் கல்யாணமும் ஆகியிருக்காது; நேற்று உன்னைப் பார்த்ததற்குச் சும்மா விட்டிருக்கவும் மாட்டேன்."

"என்ன செய்திருப்பீர்கள்?"

"இரண்டு அறை உனக்குக் கொடுத்து விட்டு, நாலு அறை உன் வீட்டுக்காரரிடம் வாங்கிக் கொண்டிருப்பேன்."

இரண்டுபேரும் சேர்ந்து சிரித்தார்கள்.

"கௌரியையும் உங்களையும் ஒன்றாய்ப் பார்த்த பிறகுதான் எனக்கு உயிர் வந்தது" என்றான்.



தணிகாசலம் கேட்டான்: "அவருக்கு ஒன்றும் தெரியாதா?"

"தெரியாது; தெரிந்தாலும் இதில் ரகசியம் இல்லை. அம்மா என்னைத் தடுத்திருக்காவிட்டால் நானே அவரிடம் சொல்லியிருப்பேன். இனிச் சொல்வதற்கு ஏதும் இல்லை."

அவள் எழுதியிருந்த கடிதத்தில் குறிப்பிட்ட 'தாலி கட்டிக் கொள்ளாத மனைவி' என்ற சொல் இதுவரை அவனை உறுத்திக் கொண்டிருந்தது. இப்போது கூட அவள் வைரச் சங்கிலிதான் போட்டிருந்தாள். 'ஏன், தாலி கட்டிக் கொள்

டால் என்ன?' என்று கேட்க நினைத்தான். அப்படிக் கேட்காமல், ''அவர் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லையா?'' என்று கேட்டான்.

''செய்து கொண்டு விட்டார்; ஆனால் ஊரறிய வெளிச் சடங்கு கிடையாது.''

''ஏன்?''

''நீங்கள் சுலபமாய்க் கேள்வி கேட்கிறீர்கள். ஆனால் எனக்குப் பதில் சொல்லத் தெரியாது. அதில் எத்தனையோ சங்கடங்கள் இருக்கின்றன. நூறு வேலி நஞ்சைக்குமேல் இவருக்குச் சொந்தம். எனக்குத் தாலி கட்டினால் இவருக்குச் சொத்துரிமை கிடைக்காதாம். பங்காளிகள் வழக்கு போட்டுப் பிடுங்கிக் கொள்வார்கள். பெரும் பணக்காரர்கள் இப்படி வாழ்வது வழக்கம்தான்.''

தணிகாசலத்துக்கு மற்றொரு சந்தேகம் முளைத்தது: ''சொந்தக்காரர்களுக்காக இவர் சொந்தத்திலேயே இன்னொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டால் என்ன செய்வாய்?''

செங்கமலம் வருத்தத்துடன் சிரித்தாள். ''செய்து கொள்ளப் போவதில்லை என்று இவர் சொல்கிறார். ஆனால் சொத்து பாத்தியம் போய்விடுமென்றால் இவர் செய்து கொண்டாலும் செய்து கொள்வார். அப்படி நிலைவந்தால் நான் தடுக்கப் போவதில்லை.''

''என்ன?'' என்று கேட்ட தணிகாசலம் திடுக்கிட்டான்.

''உங்களுக்கு இதெல்லாம் புரியாது'' என்றாள் செங்கமலம். ''எனக்கு இந்த வாழ்க்கையில் பழக்கம் ஏற்பட்டு விட்டது. அவருக்கு என்னிடம் ஆசை அதிகம். ஆனால், என் அளவில் நான் அதிக ஆசைப்படவில்லை. எதற்கும் தயாராக இருக்கிறேன். அவரவர்களுக்குக் கொடுத்து வைத்ததுதான் கிடைக்கும். கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைய வேண்டும்.''

இன்பத்தின் நிறைவால் குலுங்கிக் கொண்டிருக்கிறாள் என்று எண்ணிய தணிகாசலத்துக்கு, இந்தப் பேச்சு சிறிது ஏமாற்றம் அளித்தது. வெளித்தோற்றத்தில் தெரியக் கூடிய வாழ்க்கை வேறு; உள் மனத்தின் வாழ்க்கை வேறு. இனி அவளிடம் ஒன்றும் கேட்கக்கூடாதென்று நிறுத்திக் கொண்டான். 'கடவுளே! அவளுக்கு ஒரு குறைவும் வைக்காதே!' என்று வேண்டிக் கொண்டான்.

அவன் அந்த வீட்டை விட்டுப் பங்களாவுக்குத் திரும்பிச் செல்லும்போது நன்றாக இருட்டத் தொடங்கியது.

## அத்தியாயம் 34

# குற்றாலத்தில் குடும்பம்

செங்கமலமும் குமாரசாமியும் ஏழெட்டு நாட்கள் குற்றாலத்தில் தங்கியதாகப் பெயர் பண்ணினார்களே தவிர, உண்மையில் அவர்கள் அங்கு தங்கவில்லை. காரெடுத்துக் கொண்டு தினம் ஒரு ஊராகச் சுற்றி வந்தார்கள். பார்த்த நேரமெல்லாம் பங்களா பூட்டிக் கிடந்தது. இரவில் வந்து தங்கி, அதிகாலையில் மறுபடியும் கிளம்புவதாகக் காவற்காரன் கூறினான். மத்தியில் ஒரு நாள் வெளிக் கதவு திறந்திருந்தது; உள் வாயில் முகப்பில் கார் நின்றது; தணிகாசலம் அவற்றைப் பார்த்துவிட்டு மேலே சென்றான்.

குற்றாலத்தை விட்டு அவர்கள் புறப்படுவதற்கு முதல் நாள் மாலை சொல்லிக் கொண்டு போவதற்காகச் செங்கமலம் தணிகாசலத்தைத் தேடிக் கொண்டு வந்தாள். பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய தணிகாசலம் மற்றவர்களிடம் அவள் விடைபெற்றுக் கொண்டு தனக்காகக் காத்திருப்பதைக் கண்டான். ''நாளைக்குக் காலையில் ஐந்து மணிக்குக் கிளம்ப வேண்டும்!'' என்று சொல்லிக் கொண்டே அவனுடைய அறையில் வந்து உட்கார்ந்தாள் செங்கமலம்.

தணிகாசலத்துக்கு அவளை அங்கு கண்டதிலிருந்தே தன் கடிதத்தைப் பற்றிக் கேட்க வேண்டுமென்று தோன்றியது. அது அவ்வளவு முக்கியமான விஷயமில்லை. என்றாலும் அதனால் அவளுக்கு ஏதேனும் கெடுதல் வரக் கூடாதென்று நினைத்தான். முன்பு வந்த சமயத்தில் அதை அவளிடம் கேட்பதற்குத் துணியவில்லை. இப்போது அவன் கேட்டான்:

''என் கடிதத்தை நீ கிழித்தெறிந்திருப்பாய் என்று நினைக்கிறேன்...''

''அதை ஏன் இப்போது கேட்கிறீர்கள்? நடந்ததை நாம் பேசவோ, நினைக்கவோ கூடாது!''

''நீ அதை இதற்குள் கிழித்தெறிந்து விட்டால் புத்திசாலி; இல்லாவிட்டால் இனிமேலாவது அதைச் செய்!''

செங்கமலம் வருத்தத்துடன் அவனை நோக்கினாள். ''ஏற்கனவே நான் உங்களிடம் சொல்லியிருக்கிறேன்; எழுதிய கடிதம் எழுதியவருக்குச் சொந்தமில்லை; அது என்னுடையது; அதைப் பற்றி நீங்கள் கவலைப்படக் கூடாது.''

''அன்றைக்கு நான் அதை எழுதியது தப்பில்லை; இன்றைக்கு நீ அதை வைத்

திருந்தால் தப்பு. விளையாட்டுத்தனமாக நடந்து கொண்டு விடாதே!''

செங்கமலம் தன் பல் தெரியச் சிரித்தாள். முன்பு ஒரு நாள் சிரித்த சிரிப்பின் சாயல் அதில் தெரிந்தது. ''நீங்கள் நான் நினைத்ததை விட நல்லவர். உங்களால் இனிமேல் எனக்கு எந்தக் கெடுதலும் வராது! உங்கள் கடிதத்தால் வந்தால் வந்துவிட்டுப் போகட்டுமே!'' என்றாள்.

கடைசிவரையில் அந்தக் கடிதத்தின் விவரத்தை அவள் அவனுக்குச் சொல்லவில்லை. சிரித்து மழுப்பி விட்டாள். அதை அவள் இன்னும் வைத்திருப்பாள் என்றே தோன்றியது. தணிகாசலம் அவளுக்கு நீண்டதொரு உபதேசம் செய்து பார்த்தான். அவள் அதைக் கேட்பதாக இல்லை. 'பெண்களுக்கே தர்க்க ரீதியாக நினைத்துப் பார்க்கத் தெரியாது போலிருக்கிறது' என்று நினைத்து அவனை நொந்து கொண்டான். தனக்குப் புத்தி சொல்லிக் கடிதம் எழுதியவள் தன் வரையில் முட்டாளாக இருக்கிறாளே!

மறுநாள் அவர்கள் புறப்பட்டுவிட்டார்கள். பொழுது விடியும்போது வீட்டு வாசலில் கார் வந்து நின்றது. தணிகாசலம் எட்டிப் பார்த்தான். காரை விட்டு இறங்காமலே குமாரசாமி ஒரு கும்பிடு போட்டார். செங்கமலமும் கை கூப்பினாள். அடுத்த கணம் கார் வேகமாய்ப் பறந்தது.

காலம் பறந்தது. பல மாதங்கள் ஆகிவிட்டன. புதிதாகக் குடும்பம் தொடங்கிய தணிகாசலத்துக்கு இத்தனை வேகமாக நாட்கள் செல்லக்கூடும் என்று தெரியவில்லை. 'நேற்றைக்குத்தான் கௌரி வந்தாளோ!' என்று மயக்கம் கொடுப்பது போல் ஒவ்வொரு நாளும் விரைந்து ஓடியது.

அவர்கள் நடத்திய புதுக் குடித்தனத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும்.

கௌரி பொன்வயலில் செல்லமாய் வளர்க்கப்பட்டவள்; பள்ளிப் படிப்பிலும் அவ்வளவு கெட்டிக்காரி இல்லை; குடும்ப வேலைகளையோ வெளியில் சொல்ல வேண்டாம்! கல்யாணியிடம் வந்த பிறகுதான் அவளுக்கு அடுப்புப்பற்ற வைக்கத் தெரியும்.

கல்யாணி அம்மாள் அவளைச் சமையல் கலையில் நளபாக நவமணியாக்கப் பார்த்தாள். தணிகாசலமோ அவளிடம் தன்னுடைய படிப்பறிவை இறக்குமதி செய்யப் பார்த்தான். தன் கதைகளுக்கு முதல் ரசிகையாக அவளைச் செய்து விட வேண்டுமென்பது அவன் ஆர்வம். பாவம்! இந்த இரண்டு பேருக்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு கௌரி பரிதாபமாக விழித்தாள். அவளுக்குச் சொல்லிக் கொடுக்கப்போய்த் தாயாரும் பிள்ளையும் அந்த அந்தக் கலையில் தேர்ச்சி பெற்றார்களே தவிர, கௌரியை ஒன்றும் அவர்களால் அசைக்க முடியவில்லை.

மருமகளின் துணிகளைத் துவைத்துப் போட்டு, அவளுக்கு எடுபிடி வேலைகளைச் சொல்லித் தரும் கல்யாணி அம்மாளைப் பார்த்து மாணிக்கவாசகத்தின் மனைவி கேலி செய்தாள். ''என்ன செய்வதம்மா? பாவாடை கட்டிக் கொண்டு திரிந்த விளையாட்டுப் பெண்ணை இழுத்து வைத்துக் கல்யாணம் செய்து வைத்தேன். மெதுவாய்த்தானே அவளுக்கு இதெல்லாம் தெரியும்?'' என்பாள் கல்யாணி அம்மாள்.

நாளடைவில் கல்யாணி அம்மாளுக்காவது அரைகுறை வெற்றி கிடைத்தது. தணிகாசலத்துக்கு அதுவுமில்லை.



பொழுது சாய்ந்தவுடன் இருவரும் சாப்பிட்டுவிட்டுப் படிப்பதற்கு உட்காருவார்கள். உற்சாகமாக அவளுக்குப் புத்தகங்களையும் பத்திரிகைகளையும் படித்துக் காட்டுவான். கடினமான பகுதிகளுக்கு விளக்கம் கூறுவான். அவளும் அதே உற்சாகத்தில் அவன் சொல்வதைக் கேட்பாள். திறந்த வாயில் ஈ நுழைவது தெரியாமல் அவன் படிப்பதைக் கவனிப்பாள். ''புரிகிறதா'' என்று கேட்டால், 'ஓ! அருமையாய்ப் புரிகிறதே!' என்று பதில் வரும். 'என்ன புரிகிறது?' என்று மட்டும் கேட்கக் கூடாது. கேட்டாலோ அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டு அவன் மடியில் தலை வைத்துப் படுத்துக் கொண்டு விடுவாள். ''இதெல்லாம் என்ன கேள்வி? கேள்வி கேட்பதை உங்கள் பள்ளிக்கூடத்தில் வைத்துக் கொள்ளுங்கள்!''

மடியில் படுத்துக் கொண்டு பாடம் கேட்கும் பெண்ணுக்கு யார்தான் பாடம் சொல்லிக் கொடுக்க முடியும்? அதட்டுவது போல் பாசாங்கு செய்து பார்ப்பான்; கோபமாக முகத்தை வைத்துக் கொண்டு நடிப்பான். இது போன்ற அதட்டல், உருட்டல், மிரட்டல் அவளிடம் அந்த நேரத்தில் பலிக்காது. கலீரென்று அவள் சிரித்துவிட்டால் புத்தகத்தைத் தூக்கி மூலையில் எறிந்து விடுவான்.

படுக்கை அறையைப் பள்ளிக்கூடமாக மாற்றவும் முடியவில்லை; மனைவியை மாணவியாக மாற்றவும் முடியவில்லை. 'மனித சுபாவத்தை மாற்றி அமைக்க முடியாது' என்ற பிரஞ்சு நாட்டுக் கொள்கை ஒன்று உண்டு. கௌரியைப் பொறுத்த மட்டில் அதை அவன் நம்ப வேண்டியிருந்தது. இயற்கையும் இருதயமுமே வெற்றி பெற்றன. லட்சியம் அந்தரத்தில்தான் தொங்கியது.

'இதனால் ஒன்றும் நஷ்டமில்லை; அவளுடைய பொன்னான உடலழகும், பூப் போன்ற உள்ளன்பும் போதும்' என்ற முடிவுக்கு வந்தான்.

கோடை விடுமுறை வந்தது.

சுற்று வட்டாரத்து ஊர்களுக்குத் தன் குடும்பத்துடன் சென்று வந்தான் தணிகாசலம். கிராமத்து வாழ்க்கையில் ஒரு அமைதி இருந்தாலும் அவன் மனம் அதில் ஊன்றி வேர்விட வில்லை. கன்னியாகுமரி, திருநெல்வேலி, திருச்செந்தூர், திருவனந்தபுரம் இப்படிப் பல இடங்களுக்கு அவர்கள் அலைந்து திரும்பினார்கள். திருநெல்வேலியைச் சுற்றி வளைத்த தாம்பிரவருணியின் சலசலப்பு அவனிடம் ஓர் புதிய பரபரப்பை ஏற்படுத்தியது. ஆற்று வெள்ளத்தைப் போலவே நாடெங்கும் அலைந்து திரிய வேண்டும் என்ற ஓர் துடிப்பு தன்னுள்ளே அலைமோதுவதை முதல்முறையாக அங்கு உணர்ந்தான். 'இனிப் பள்ளிக்கூட ஆசிரியராக வெகு நாட்கள் காலந்தள்ள முடியாது; சிறைக்கூண்டைத் தகர்த்துக் கொண்டு எங்காவது பறந்து செல்ல வேண்டும்; இந்த வாழ்க்கை பழகிப் போய் என்னை அடிமைப் படுத்துவதற்குள் நான் அதை விட்டு வெளியேற வேண்டும்.'

எங்கே, எப்படிப் போவது என்று அவனுக்கு விளங்கவில்லை. எங்கேயாவது போக வேண்டும்!

குற்றாலத்தில் மறுபடியும் சாரல் காலம் தொடங்கி விட்டது.

நடன அரங்கத்தில் நாழிக்கு நாழி உடை மாற்றிக் கொண்டு வரும் நாட்டிய மங்கை போல் இயற்கைத் தேவி அங்கே நாளுக்கு நாள் தன் கோலத்தை மாற்றிக் கொண்டு வந்தாள். வானத்தின் உச்சியிலே மிதந்த மேகங்கள் தரையை நாடிக் கீழே இறங்கி வந்தன.



நீண்டு வளர்ந்த மருத மரங்களின் இலை களில் ஓர் ஆனந்தம் ஒலித்தது. பள்ளிக் கூடத்தை அடுத்து நின்ற செண்பக மரம் கிளைக்குக் கிளை தீச்சுடர்களைத் தாங்கி நிற்பதுபோல் பூத்திருந்தது.

தணிகாசலம் கௌரியை அழைத்துக் கொண்டு போய், "பார்த்தாயா, அதிசயத்தை!" என்று சுட்டிக் காட்டினான்.

திடீரென்று ஒருநாள் கண்ணபுரத்திலிருந்து மாணிக்கவாசகத்துக்குத் தந்தி வந்தது. சுப்பையா கொடுத்திருந்தார். தந்தியும் கையுமாகத் தணிகாசலத்திடம் வந்தார் மாணிக்கவாசகம். தந்தியின் வாசகம் இதுதான்: "என் தாயார் நேற்று இரவில் இறந்து விட்டார்கள்; தணிகாசலத்திடமும் தெரியப்படுத்துங்கள்."

மாலையில் தந்தி வந்தது. இரவு ரயிலில் இருவரும் புறப்பட்டார்கள்.

கண்ணபுரத்துக்கு மாணிக்கவாசகமும் அவனும் போய்ச் சேருவதற்குள் எல்லாக்காரியங்களும் முடிந்து விட்டன. சுப்பையா இவர்களைக் கண்டவுடன் குழந்தைபோல் தேம்பினார். தேவகி, அவன் தாயார் படுத்துக் கிடந்த அதே அறையில் தலைவிரிகோலமாய்ச் சுவரில் சாய்ந்து கொண்டிருந்தாள். தணிகாசலத்தின் முகம் அவள் கண்ணில் பட்டதுதான் தாமதம், தன் உணர்ச்சிக் கொந்தளிப்பைக் கட்டுப்படுத்த முடியாமல், அந்த அறையே கிடுகிடுத்து நடுங்குவது போல் குமுறினாள். "அம்மா போய் விட்டாள்! நான் போட்டுக் கொடுத்த கஞ்சி அவளுக்குப் பிடிக்கவில்லை; நான் கலந்து கொடுத்த மருந்து அவளுக்குப் பிடிக்கவில்லை. வாய்க்கு வாய் என்னை 'அம்மா!' என்று கூப்பிடுவாளே, அந்த அம்மா போய் விட்டாள்!"

முட்டி மோதிக் கொண்டு அலறினாள் தேவகி. தணிகாசலம் இந்தப் புரியாத பாசத்தின் அடிப்படை தெரியாமல் நின்று கொண்டு விழித்தான்.

தேவகியின் தாயாரோ நெடுநாட்கள் படுக்கையில் கிடந்தவள்; சொந்த நடை உடை கிடையாது; தேறி எழுந்திருப்பாள் என்று யாருமே நம்பவில்லை. மற்றவர்களுக்குப் பெருஞ்சுமை என்று கூடச் சொல்லலாம். அப்படிப்பட்டவளுக்கா இத்தனை குமுறல்?

"நான் அவளைச் சரியாய்க் கவனிக்க வில்லை; அதனால்தான் போய்விட்டாள்!" என்று தலையில் அடித்துக் கொண்டாள் தேவகி.

தன்னுடைய உழைப்பை ஏற்றுக் கொள்வதற்கு, பாசத்தைக் கொட்டிக் கொள்வதற்கு, அன்பைப் பரிமாறிக் கொள்வதற்கு இருந்த ஓர் பாத்திரம் இப்படி உடைந்து விட்டதே என்ற ஆத்திரம் தேவகிக்கு. 'இவளைப் போன்ற பெண்கள் உள்ளவரை இந்த உலகம் வாழும்' என்று அந்தச் சாவு வீட்டில் எண்ணிக் கொண்டான் தணிகாசலம்.

ரூபாய், அணா, பைசாவில் லாப நஷ்டக் கணக்கு பார்த்து இயங்கும் இந்த உலகத்தில் தாயேது, பிள்ளையேது, அண்ணன் - தம்பி ஏது? உழைக்க வலிமையற்ற முதியவர்கள் ஓட்டை உடைசல் பாத்திரங்களுக்குச் சமானம்; மூலையில் கிடந்து முனக வேண்டியது தான். வீட்டில் ஆயிரம் வந்தாலும் சரி; ஆயிரம் போனாலும் சரி, அங்கஈனர்களும் முதியவர்களும் ஒன்றுதான். 'தங்களுக்கும் தள்ளாமை உண்டு'



என்ற எச்சரிக்கை ஒரு பக்கம் இருக்கட்டும்; ஆசை, பாசம், ஈவு, இரக்கம் இவை எங்கே போய் விட்டன?

தன் தந்தை இறந்தபோது தேம்பி அழாத தணிகாசலம், தேவகியைப் பெற்றவளின் பெருமையை எண்ணி அழுதான். அறிவு நிறைந்த உலகம் விஞ்ஞானத்தால் அழிவுச் சக்திகளைப் பெருக்கி விடலாம். ஆனால் ஈவு இரக்க முள்ள பெண் குலம் உள்ளவரை இந்த உலகம் அழியாது. விஞ்ஞானத்தை ஏவிவிடும் எதேச்சாதிகாரிகளானாலும் அவர்கள் தாய்ப் பால் குடிக்காமல் வளரவில்லையே!

தணிகாசலம் தேவகியைத் தேற்றினான். சிவகாமியிடமிருந்த கைக் குழந்தையை வாங்கிக் கொண்டு போய்த்

தேவகியிடம் நீட்டி, "அக்கா! இதோ, இனிமேல் உங்களுக்கு வேலை கொடுக்க இந்தச் சுட்டிப் பயல் இருக்கிறான். உங்கள் அம்மாவின் உயிர் இவனிடமும் இருக்கிறது; இனி இவனுடைய குழந்தை களிடமும் அது வளரும்.—எங்கே, அழு வதை நிறுத்துங்கள்!"

குழந்தையை வாங்கி அணைத்துக் கொண்டாள் தேவகி. குழந்தை சிரித் தான்; அவனுடைய அழுகை அடங்கியது.

அடுத்த நாளே மாணிக்கவாசகம் தணிகாசலத்தை அழைத்துக் கொண்டு குற்றாலத்துக்குக் கிளம்பினார். வழியில் ரயிலில் அவரிடம் தனக்குக் குற்றாலத்தை விட்டுப் போகவேண்டும் என்று தோன்றி யதைச் சொல்ல நினைத்தான் தணிகா சலம். திரும்பவும் கண்ணபுரத்துக்கு வரும்படியான வாய்ப்பு அவனுக்குக் கிடைக்கும் போலிருந்தது. பத்திரிகா சிரியர் பசுபதியை அவன் போய்ப் பார்த்துவந்தான். அவர் அவனை அழைத் துக் கொள்வதாக உறுதி கூறினார்.

பசுபதியின் நினைவு அவனுக்கு வந்தது: நடுத்தர வயது மனிதர் அவர்; குட்டை யாகப் பருமனாக இருந்தார்; 'விசுக் விசுக்' கென்று வேகமாக நடக்கும் வழக் கம் அவருக்கு உண்டு. அவன் அவரைப் போய்ப் பார்த்தபோது, தாம் எழுதிய ஒரு முழு நேர மேடை நாடகத்தை மாற்றி அமைத்துக் கொண்டிருந்தார்.

தணிகாசலத்தைக் கண்டவுடனேயே அதைத் தூக்கி அவன் முன்னால் போட் டார். கதைச் சுருக்கத்தைச் சொல்லி, சில காட்சிகளை அவனுக்குப் படித்துக் காட்டினார். "இந்தக் காட்சிகளை இப்படிப் போடலாமா? அப்படிப் போட லாமா?" என்று கேட்டார். தணிகா சலத்துக்கு அப்போது நாடகத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. 'இப்படியும் போடலாம்; அப்படியும் போடலாம்' என்று அவனுக்குச் சொல்லத் தோன் றியது. என்றாலும் பெரிய ஆசிரியர் கேட்கிறாரே என்பதற்காகச் சிலயோசனை களைச் சொல்லி வைத்தான். பசுபதி அவற்றைக் குறித்துக் கொண்டார்.

"சரி; எப்போதும் போல் பணத்தை எதிர்பார்க்காமல் எனக்கு எழுதிக் கொண்டிருங்கள். இரண்டு மூன்று மாதங்களில் உங்களை என் உதவிக்குப் போட்டுக் கொள்ளுகிறேன்."

ரயிலில் வந்து கொண்டிருந்த தணிகா சலத்துக்குப் பசுபதி கொடுத்த நம் பிக்கை சலனத்தை எழுப்பிக் கொண் டிருந்தது. மாணிக்கவாசகத்திடம் தன் ஆசையைத் தயங்கித் தயங்கி வெளி யிட்டான். "அதற்கென்ன? தாராள மாக உனக்குச் சந்தர்ப்பம் வரும்போது நீ போகலாம்" என்றார் அவர்.

அவர்கள் இருவருக்குமே அவரவர்கள் வீட்டில் நுழையும்போது ஒரு அதிசயம் காத்திருந்தது. மாணிக்கவாசகம் தம் வீட்டில்பேராசிரியர் சந்திரசேகரன்வந்து இறங்கி யிருப்பதைக் கவனித்தார். "உமா எங்கே?" என்று அவர் கேட்ட போது தணிகாசலத்தின் வீட்டில் இருப் பதாகத் தெரிவித்தார் பேராசிரியர்.

தணிகாசலமும் தன் அறைக்குள் உமா நிற்பதைக் கண்டு வியப்படைந்தான். கௌரியும் அவளும் அவனுடைய மேசை யின் மேல் கிடந்த புத்தகங்களை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தார்கள். முதல் வரவேற்பு அவனுக்கு உமாவிடமிருந்து கிடைத்தது. "மாமா! மாமா! நான் திடீரென்று வந்து குதித்து விட்டேன், பார்த்தீர்களா?" இப்படிச் சொல்லி விட்டு அவள் கௌரியின் கரத்தைப் பற்றிக் கொண்டு குதியாய்க் குதித்தாள். "எனக்குக் கௌரியை ரொம்பவும் பிடித் திருக்கிறது, மாமா!"

"உனக்கு இவளைப் பிடித்திருக் கிறதா?" என்று கௌரியிடம் கேட் டான் தணிகாசலம். "இவளிடம் கவன மாய்ப் பழகு; பெரிய வாயாடி!"

கௌரி சிரித்துக் கொண்டே உமாவை அணைத்துக் கொண்டாள். உமாவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "இந்த லீவு முழுவதும் இவளிடம் உங்களை விடமாட் டேன்!" என்றாள். 'வந்த உடனேயே வம்புக்கு வந்து விட்டாளே' என்று நினைத்தான் தணிகாசலம். சாரல் காலத்தில் எங்கெல்லாமோ இருந்து மனைவிகளுடன் உல்லாசப் பொழுது போக்கக் குற்றாலத்துக்கு வருகிறார்கள் மற்றவர்கள். இவளோ கௌரியை விடமாட்டாள் போலிருக்கிறது!

"பயப்படாதீர்கள்" என்றாள்.

அவளுடைய பெட்டி அந்த அறையில் தான் இருந்தது. குடித்தனத்தை அந்த வீட்டிலேயே தொடங்கி விட்டாள் என்பதையும் புரிந்து கொண்டான். அவசரம் அவசரமாகத் தன் பெட்டிக் குள்ளிருந்து துணிமணிகளையும் புத்தகங் களையும் வெளியில் இழுத்துப் போட் டாள். ஒரு மூலையில் பத்திரப்படுத்தி வைத்திருந்த சிறிய காகிதச் சுருளைப் பிரித்தாள். புத்தம் புதுப் பரிசுப் பொருள் ஒன்று அதற்குள் மின்னியது.

"இதை உங்களுக்காக வாங்கிக் கொண்டு வந்தேன், மாமா!"

தணிகாசலத்தால் அதை மறுக்க முடியவில்லை. உமா அதை அவனிடம் கொடுத்த போது, அவளுடைய கண் ணின் கருமணிகள் அபூர்வமான புத் தொளியை உமிழ்ந்தன. பெருமையுடன் அதை வாங்கிக் கொண்டு வைத்த கண் வாங்காமல் பார்த்தான். (தொடரும்)

# வாழ்க ராஜாஜி

சாதிமதச் சழக்குகளைக் கடந்து நிற்போன்
சமதர்ம சன்மார்க்க சாந்த சீலன்
நீதி நெறி முறை தெரிந்த நேர்மையாளன்
நிந்தையற்ற வாழ்க்கை தரும் நியமமுள்ளோன்
ஓதி உணர்ந் தச்சமற்று உண்மை கூறி
உலகாலம் காப்பதற்கே உழைக்கும் யோகி
மேதினியில் அறிவறிந்த மக்கள் யாரும்
மெச்சு மெங்கள் ராஜாஜி மேதை வாழ்க!



நாமக்கல் கவிஞர்

# எனது நினைவுகள்

ஆர். வி. கிருஷ்ணய்யர்

தமிழ் நாட்டின் தலைப்புதல்வர் ராஜாஜி. இன்று ராஜாஜியின் புகழ் பாரத தேசமெங்கும், ஏன்? உலகமெங்கும் பரவி யிருக்கிறது. அவர் ஒவ்வொரு பிரச்னையைப் பற்றியும் என்ன சொல்லுகிறார் என்று கோடிக்கணக்கான மக்கள் கேட்க ஆவலுடன் துடிக்கிறார்கள். இத்தகைய மகானுடன், அவர் தொழில் நடத்தி வந்த ஊரிலேயே வசித்து, அவர் செய்து வந்த பொதுக் காரியங்களை உற்று நோக்கிவரும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர் புகழ் தேசமெங்கும் பரவா திருந்த 1907-1910 வருஷங்களில் நடந்த சில சம்பவங்களை என்னால் மறக்கமுடியவில்லை.

சூரத் காங்கிரஸ் 1907-ம் வருஷத்தில்தான் நடந்தது. அந்நாட்களில் காங்கிரஸ், தீவிரக் கட்சி என்றும், நிதானக் கட்சி என்றும் இரு பிரிவுகளாக இருந்தது. "பரிபூரண சுயராஜ்யம் வேண்டும்" என்பது தீவிரக் கட்சியின் கொள்கை. நிதானக் கட்சியைச் சேர்ந்தவர் பிரோஷா மேத்தா, கோபால கிருஷ்ண கோகலே, வி. கிருஷ்ணசுவாமி அய்யர் முதலிய பிரமுகர்கள், "இனிமேல் காங்கிரசுக்குவரும் பிரதிநிதிகள், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு உள்ளடங்கிய சுயராஜ்யம்தான் தங்கள் நோக்கம் என்றும், அத்தகைய சுயராஜ்யத்தை அடைவதற்கு தாங்கள் சட்ட பூர்வமான வழிகளையே கையாளுவோம் என்றும் ஒரு வாக்குமூலத்தில் கையொப்பம் செய்யவேண்டும்" எனத் தீர்மானித்தார்கள். எந்தவித சுயராஜ்யத்தை ஒப்புக்கொள்வது என்பதைப் பற்றிக் காங்கிரசுக்குள் பிரிவுகளும் சச்சரவுகளும் கிளர்ச்சிகளும் உண்டாயின.

ராஜாஜி அவர்கள் "இதென்ன! இந்தப் பிரச்னையைப் பற்றி இவ்வளவு கிளர்ச்சியா? ஒருவர்க்கொருவர் சண்டையிட்டுக் கொள்ள வேண்டுமா? பிரிட்டிஷ் அரசாங்கத்தார் நாம் கேட்கும் சுயராஜ்யத்தில் ஏதாவது ஒன்றைக் கொடுத்து விடுகிறோம் என்று ஒப்புக்கொண்டு விட்டார்களா? இல்லையே! அப்படி யிருக்க நாம் எதை அங்கீகரிக்க வேண்டும் என்பதைப் பற்றி ஏன் இவ்வளவு புகார் செய்ய வேண்டும்" என்று வாதித்தார். ஆயினும் அவர் திலகரின் தீவிரக் கட்சியில் தான் இருந்தார். தேசத்துக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாரா யிருப்பவர்கள் திலகர் கட்சியில்தான் அதிகம் என்று மனப்பூர்வமாக நினைத்தார்.

ஆதலால் அந்தக் கட்சிக்குத்தான் அவர் ஆதரவு அளித்தார். நிதானக் கட்சியினரால் 1908ம் வருஷத்தில் காங்கிரஸ் மகாநாடு சென்னையில் நடத்தப்பட்டது. சேலத்தில் மகாஜன சபையென்று ஒரு ஸ்தாபனம் அநேக வருஷங்களாக இருந்து வந்தது. அந்த ஸ்தாபனம் ராஜாஜியையும் என்னையும் இன்னும் சில பேர்களையும் பிரதிநிதிகளாக அந்தக் காங்கிரசுக்கு நியமித்தது. நாங்கள் நிதானக் கட்சியின் வாக்குமூலத்துக்குக் கையொப்பமிட மாட்டோம் என்று மறுத்தோம். சேலத்திலிருந்து ஒருவர்கூட அப்படிக் கையொப்பமிட்டு, மதராஸ் காங்கிரசுக்குப் போகத் தயாரா யில்லை. இந்தச் செய்தி சென்னைக்கு எட்டியது. அங்கிருந்து ஸ்ரீ சீனிவாச சாஸ்திரியார் நிதானக் கட்சியின் சார்பாகச் சேலத்துக்கு வந்தார். சில வருஷங்களுக்கு முன் தான் அவர் இந்தியத் தொண்டர் சபையின் அங்கத்தினராகச் சேர்ந்திருந்தார். ராஜாஜியை அவரால் தமது கட்சிக்குத் திருப்ப முடியவில்லை. அதனால் நிதானக் கட்சி ஒன்றைச் சேலத்தில் புதிதாக ஏற்படுத்தலாம் என்று ஒரு கூட்டம் கூட்டினார். ராஜாஜியின் சொற்படி அந்தக் கூட்டத்துக்கு யாரும் போகவில்லை. ஸ்ரீ சாஸ்திரியார் சென்னைக்கு வெறுங் கையுடன் திரும்பினார். அநேக வருஷங்களுக்குப் பிறகு ஸ்ரீ சாஸ்திரியார் எழுதிய சர். பிரோஷா மேத்தாவின் ஜீவிய சரித்திரத்தில், நிதானக் கட்சிக்கு அந்தக் காலத்தில் சேலத்திலிருந்த எதிர்ப்பைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். அதில் சி. விஜயராகவாச்சாரியாரின் தலைமையில் இவ் வெதிர்ப்பெல்லாம் நிகழ்ந்ததென்று சொல்லியிருக்கிறார். உண்மை அது அல்ல. அவ்வெதிர்ப்புக்குக் காரணமாக இருந்தவர் ராஜாஜி அவர்கள்தான்.

** ** **

சென்னையில் 1908ம் வருஷத்தில் நடந்த நிதானக் கட்சி காங்கிரசுக்கு அவர்கள் கொள்கையை ஏற்றுக்கொண்டு கையொப்ப மிடாமல் நாங்கள் வரக்கூடாதென்று வி. கிருஷ்ணசுவாமி அய்யரும் மற்ற நிதானக் கட்சித் தலைவர்களும் செய்த தீர்மானத்தை, ராஜாஜி ஒப்புக் கொள்ளவில்லை. அத்தீர்மானம் அதிகார வரம்பு மீறினதென்று, அவரும் சேலத்தில் சர்க்கார் வக்கீலாயிருந்த கே. நடேச அய்யரும் நானும் ஒரு அறிக்கையைப் பத்திரிகையில் வெளியிட்டதுமல்லாமல் அவ்வறிக்கையை அச்சுப் போட்டுத் தேசமெங்கும் விநியோகம் செய்தோம். அவ்வறிக்கையின் பேரில் இம்மாகாணத்தில் பல இடங்களில் கூடிய கூட்டங்கள், எங்களைக் காங்கிரசுக்கு வராமல் தடுப்பது பிசகென்று நிதானக் கட்சித் தலைவர்களைக் கண்டித்தன. கடைசியாக, நாங்கள் ஒருவரும் சென்னையில் நடைபெற்ற நிதானக் கட்சிக் காங்கிரசுக்குப் பிரதிநிதிகளாகப் போகவில்லை.

அக்காலங்களில் அகில இந்திய காங்கிரசும் மாகாண காங்கிரசும் கூடும்பொழுதெல்லாம்

சமூக சீர்திருத்தக் கூட்டங்களும் கூடுவது வழக்கம். அரசியல் துறையில் இருந்தது போலவே, இச்சமூகச் சீர்திருத்தத்திலும் அப்பொழுது இரண்டு கட்சிகள் இருந்தன; அதிலிருந்த நிதானக் கட்சியோர், சமூக சீர்திருத்தங்கள் நம்முடைய சாஸ்திரங்களையும் பழக்க வழக்கங்களையும் அனுசரித்து மெள்ள மெள்ளச் செல்ல வேண்டும் என்பார்கள். மற்றொரு கட்சியோரோ கெடுதல் செய்யும் பழக்க வழக்கங்களை உடனே கைவிட வேண்டும் என்பார்கள். தீண்டாமை உட்பட, சாதிபேதங்கள் முழுதும் சீக்கிரத்தில் ஒழிந்து, இந்திய ஜனசமூகம் முழுவதும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்பதே ராஜாஜியின் அசைக்க முடியாத கருத்து. ஜனங்கள் அப்படி ஒன்றுபட வேண்டுமானால், சாதிவித்தியாசங்களின்றி விவாகங்கள் நடக்க வேண்டும். அவ்வித விவாகங்களால்தான் சாதி பேதங்கள் சீக்கிரம் ஒழியும் என்று சொல்லுவார். அந்தக் காலத்தில் சேலத்தில் ஜனங்களுக் கூச்சல் அதிகமாயிருந்தது. அப்பொழுது ஆர். நாராயணய்யர் என்பவர் சேலத்தில் உதவி கலெக்டராக வந்தார். அவர் சீமைக்குச் சென்று ஐ. சி. எஸ். பாஸ் செய்துவிட்டு வந்தவர் என்ற காரணத்துக்காக அவருடன் சிற்றுண்டி சாப்பிட்டவர்களையும், போஜனம் செய்தவர்களையும் பகிஷ்காரம் செய்ய அனேகர் முயன்றார்கள். அக்கூட்டத்தினர் ராஜாஜியையும் மும்முரமாக எதிர்த்தனர். ஆனால் அவர்கள் செய்த இடைஞ்சல்களுக்கு ராஜாஜி பயப்படவில்லை.

** ** **

ஒரு தடவை கர்நூலில் நடந்த சமூகச் சீர்திருத்தக் கூட்டத்துக்கு ராஜாஜி சென்றார்; அவருடன் சேலத்தில் வக்கீலாயிருந்த கே. ஜி. வெங்கடசுப்பய்யர் அவர்களும், நானும் சென்றோம். கே. ஜி. வெங்கடசுப்பய்யர் ராஜாஜியின் நெருங்கிய நண்பர். அவர் சேலத்துக்கு வக்கீலாக வருவதற்குமுன், சென்னைச் சிறிஸ்துவக் கல்லூரியில், கணித ஆசிரியராக இருந்தார். அவர் அந்த அலுவலை விட்டு ஓய்வெடுத்துக் கொண்டபோது, அவருடைய மாணவர்கள் அவருக்கு ஒரு சிற்றுண்டி விருந்து அளித்ததுமல்லாமல், அவருக்கு ஒரு கைக் கடிகாரத்தையும் நினைவுப் பரிசாகக் கொடுத்தனர். அந்தக் கடிகாரத்தை வெங்கடசுப்பய்யர் மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தார். அந்தக் கடிகாரத்தின்மீது அவருக்கு உயிர் என்றே சொல்லிவிடலாம். கர்நூலில் இருந்து திரும்பி ரயிலில் வரும்போது, கடிகாரம் கைதவறிக் கீழே தண்டவாளத்தில் விழுந்துவிட்டது. நல்ல இரவு. 'ஐயோ! கடிகாரம் விழுந்துவிட்டதே!' என்று வெங்கடசுப்பய்யர் மிகுந்த ஏமாற்றத்துடன் சொன்னார். உடனே ராஜாஜி ஜன்னலைத் திறந்து, ரயில் பாதையின் பக்கத்திலுள்ள தந்திக் கம்பங்களை எண்ணிக் கொண்டே வந்தார். ஆனால் அவர் என்ன செய்தார் என்று அப்பொழுது எங்களுக்குத் தெரியாது. அவர் பேசாமல் வெளியில் பார்த்துக் கொண்டு வந்ததைத்தான் நாங்கள் கண்டோம். அடுத்த ஸ்டேஷனில் ரயில் வண்டி நின்றவுடன் அவர், ஸ்டேஷன்மாஸ்டரைக் கூப்பிட்டு, "எங்களில் ஒருவருடைய கைக் கடிகாரம், இத்தனை தந்திக் கம்பங்களுக்கப்பால் கீழே தவறி விழுந்து விட்டது. அதைக் கண்டெடுத்து எங்களுக்கு அனுப்பினால், அப்படிக் கண்டெடுத்தவர்களுக்குப் பரிசு கொடுக்கிறோம்" என்று கூறி, ஸ்ரீ கே. ஜி. வெங்கடசுப்பய்யரின் விலாசத்தையும் கொடுத்தார்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பின், அக்கடிகாரம் கே. ஜி. வெங்கடசுப்பய்யர் விலாசத்துக்கு வந்து சேர்ந்தது. 'நள்ளிரவு வேளையில், அன்புப் பரிசு போய் விட்டதே! அதை எப்படிப் பெறுவது?' என்று தெரியாமல் வருந்தும் சந்தர்ப்பத்தில், பளிச்சென்று சமயோசிதமாக ராஜாஜிக்குத் தோன்றின யுக்தியையும், அதை அவர் நிறைவேற்றிய பொறுமையையும் திறமையையும் நினைத்து நாங்கள் அளவில்லாத வியப்பை யடைந்தோம்.

** ** **

வக்கீல் தொழிலில் பணம் சம்பாதிப்பதும், அதில் புகழடைவதுமே குறிக்கோளாக அவர் நினைக்கவில்லை. பிரதி தினமும் புதிய புதிய விஷயங்களைக் கற்பதில் ஊக்கம் கொண்டவரா யிருப்பார். எந்தத் துறையை எடுத்தாலும், அவருக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமில்லையென்று எங்களுக்குத் தோன்றும். சேலத்தில் அவர் புத்தகச் சங்கம் என்று ஒரு சிறிய சங்கத்தை ஏற்படுத்தினார். அதில் நானும் ஒரு அங்கத்தினனாயிருந்தேன். அதன் அங்கத்தினர் ஒவ்வொருவரும் மாதா மாதம் ஒரு குறித்த சந்தாவைச் செலுத்த வேண்டியது. அப்படி வசூலிக்கப்பட்ட மொத்தத் தொகைக்குப் புதிதாக வெளிவரும் உயர்ந்த புத்தகங்களைத் தருவித்து அவைகளை அங்கத்தினர்களுக்குப் படிக்கக் கொடுப்பது. வாரந்தோறும் அங்கத்தினர்கள் எல்லாரும் ஒரு அங்கத்தினர் வீட்டில் கூடித் தாங்கள் படித்த புத்தகங்களைப் பற்றி



திருச்செங்கோட்டுக்கு அருகிலுள்ள காந்தி ஆசிரமத்தில் ராஜாஜி அவர்கள் ஏழு ஆண்டுகள் வசித்துக் கிராமசேவை புரிந்தார்.



கவர்னர் - ஜெனரல் ராஜாஜி

விமர்சித்தல், அந்தப் புத்தகச் சங்கத்தின் நோக்கமா யிருந்தது.

அப்படி ஏதோ ஒரு அங்கத்தினர் வீட்டில் கூடும்போது, அந்த வீட்டிலேயே எல்லாருக்கும் விருந்தும் கிடைக்கும். ஆனால் அந்தச் சங்கத்தின் கூட்டங்கள் அடிக்கடி ராஜாஜி அவர்களின் இல்லத்தில்தான் நடைபெறும்.

** ** **

அக் காலத்தில் சமையலில் தேர்ச்சி பெற்ற இரண்டு நல்ல சமையல்காரர்கள் ராஜாஜியின் வீட்டில் இருந்தார்கள். அவர்கள் சமையல் செய்வதிலும், சிற்றுண்டிகள் செய்வதிலும் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களா யிருந்தார்கள். சேலத்தில் ஜில்லா கோர்ட்டு, ஊரிலிருந்து சுமார் மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. அக்காலத்தில், அக் கோர்ட்டு காம்பவுண்டில், மத்தியான வேளையில் சிற்றுண்டி வசதிகள் ஒன்றும் இருந்ததில்லை. ஜில்லா கோர்ட்டுக்கு அலுவலாகப் போகும் வக்கீல்களில் பலர் டிபன் இல்லாமல் கஷ்டப் பட நேரிடும். ஆனால், ராஜாஜி ஜில்லா கோர்ட்டுக்குப் போகும் நாட்களில், அவருக்காக அவர் வீட்டிலிருந்து பத்துப் பேருக்குப் போதுமான டிபன் வரும். கோர்ட்டில் டிபனில்லாத வக்கீல்களுக்கு வழங்குவார்.

** ** **

ஒரு சமயம் (1908-ல் என்று ஞாபகம்) தென்னாப்பிரிக்காவிலிருந்து காந்திஜியின் இயக்கத்தில் சேர்ந்த ஒரு இந்தியர் சேலத்துக்கு வந்தார். அவரைத் தம் வீட்டில் தங்க வைத்து, அவரிடமிருந்து மகாத்மா காந்தியைப் பற்றிய பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொண்டார். அவரைச் சேலம் இலக்கிய சங்கத்துக்கு அழைத்து வந்து, அங்குள்ள அங்கத்தினர்களுக் கெல்லாம் அறிமுகப்படுத்தினார். அப்பொழுது அந்தத் தென்னாப்பிரிக்க வாசி "மகாத்மா காந்தி உருவத்தில் ஒரு சிறிய மனிதர். ஆனால் அவர் இருதயம் அதோ அங்கே தெரிகிற சேலத்தைச் சுற்றி யிருக்கும் மலையைவிடப் பெரியது" என்று சொன்ன சொற்கள் என் மனத்தை விட்டு இன்னும் நீங்கவில்லை.

** ** **

ராஜாஜியின் புத்திகூர்மையும் வாதத் திறமையும் இப்பொழுது உலகப் பிரசித்தி. நான் சேலத்திலிருந்த போது, அங்கே செவ்வாய்ப் பேட்டை சுப்பிரமணி அய்யர் என்று ஒரு வக்கீல் இருந்தார். அக்காலத்தில் சென்னையில் 'லிபரல்' என்ற ஒரு வாரப் பத்திரிகை நடைபெற்றுவந்தது. அதில் வாரா வாரம் யாராவது ஒரு பிரமுகருக்கு எழுதப் பட்டிருக்கும் பகிரங்கக் கடிதம் வெளிவரும்.

ஒரு வாரம் அப்பத்திரிகையில் அப்பொழுது சேலத்தில் முனிசீபாயிருந்த டி. சுவாமி அய்யரைப் பற்றி ஒரு பகிரங்கக் கடிதம் வந்தது.

டி. சுவாமி அய்யர் பி.ஏ., பி.எல். இல்லா விடினும் கெட்டிக்காரர். ஆனால் அவர் கோர்ட்டுக்கு இரண்டரை அல்லது மூன்று மணிக்குத் தான் வருவார்; வெகு விரைவில் வழக்குகளை நடத்திவிடுவார். செவ்வாய்ப்பேட்டை சுப்பிரமணி அய்யர் அவரிடம் விரோதித்துக்கொண்டு விட்டார். அதனால் தம் வழக்குகளைத் தமக்கு விரோதமாக முனிசீப் சுவாமி அய்யர் தீர்மானிக்கிறார் என்று நினைத்து விட்டார். லிபரல் பேப்பரில் சாமி அய்யரைப் பற்றி வந்த பகிரங்கக் கடிதம் செவ்வாய்ப்பேட்டை

சுப்பிரமணிய அய்யரால்தான் எழுதப்பட்டிருந்தது. அதில் சுவாமி அய்யர் கோர்ட்டுக்கு நேரம் கழித்து வருவதைப் பற்றியல்லாமல், அவர் வேணுமென்றே சில வக்கீல்களுக்கு வழக்குகளை அநுகூலமாகவும் பிரதிகூலமாகவும் தீர்ப்பு செய்கிறார் என்றும் எழுதப்பட்டிருந்தது: 'சுப்பிரமணிய அய்யர் தம் கையில் அகப்பட்டுக் கொண்டு விட்டார். அவரைத் தீர்த்துக்கட்டி விடலாம் என்று எண்ணி, சுவாமி அய்யர் அவர் பேரில் வக்கீல் சன்னத்தையே ரத்துச் செய்ய வக்கீல் சட்டத்தின்படி நடவடிக்கை துவக்கினார்.

அவ் வழக்கில் கோர்ட்டாரைக் குறைகூறி அவமதித்து விரோதிக்காமலும் சுப்பிரமணிய அய்யரைக் காட்டிக் கொடுக்காமலும் அவர் பக்கம் வாதம் செய்வது மிகவும் கஷ்டமாக இருந்தது. இதர வக்கீல்கள் யாவரும் சுப்பிரமணிய அய்யர் பக்கம் வாதாட மறுத்து விட்டார்கள். ராஜாஜி அவ்வழக்கில், சுப்பிரமணிய அய்யரைக் காப்பாற்ற முன் வந்தார். அவர் பேசியபோது கோர்ட்டில் எள்ளுப் போட்டால் எள்ளு விழாத அவ்வளவு கூட்டம்.

ராஜாஜி அன்று கோர்ட்டில் சுவாமி அய்யர் முன்னிலையிலேயே அவர் செய்கைகளைத் தாக்கியும், அவருக்குக் கோபம் வராமல் அவர் சிரிக்கும்படியாகவும் பேசியது மிக சுவாரஸ்யமாகவும் அற்புதமாகவும் இருந்தது. சுவாமி ஐயர் சுப்பிரமணிய அய்யர் பேரில் தாம் எடுத்த நடவடிக்கைகளைத் தள்ளிவிட்டார்.

ராஜாஜி கோர்ட்டில் வழக்கு நடத்தும் போது சாட்சியாகட்டும், கோர்ட்டாராகட்டும், தங்களுக்குத் தெரியாமலேயே மெள்ள மெள்ள ராஜாஜியின் கட்சியையே பேச ஆரம்பித்து விடுவார்கள். அவர் சொல்லாமல் சொல்லும் வாதங்களைத் தாங்களே தங்கள் புத்தி சாதுர்யத்தால் கண்டுபிடித்ததாக அவர்கள் நினைக்கும்படி ராஜாஜி செய்து விடுவார். அரசியல் உத்தியோகத் துறையில் மிகவும் கீர்த்தி பெற்றவரும், ராஜாஜியின் உயிர் நண்பருமான ஸர் டி. விஜயராகவாச்சாரியார் அடிக்கடி "நீ உறுதியாய் நம்பும் கொள்கைகளையும் உண்மைகளையும் பற்றி ராஜாஜியுடன் ஒருபோதும் வாதிக்கத் தொடங்காதே. அவர் தம் வாதிக்கும் திறமையால் நீ அசைக்க முடியாது என்று நினைக்கும் உன் வேரூன்றின நம்பிக்கைகளைக்கூடக் கலைத்து விடுவார்" என்று சொல்வதுண்டு.

** ** **

ராஜாஜியின் உதார குணத்துக்கும் பெருமைக்கும், இசைந்த இல்லாளும் அவருக்கு அமைந்திருந்தனர். அந்த அம்மாளுடைய பண்பை என்னவென்று சொல்லுவது?

"இற்பிறப்பெண்ப தொன்றும்,
இரும் பொறை யென்பதொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும்"

என்று அருமையார் கூறிய மொழிகளே எனக்கு நினைவுக்கு வருகின்றன. அந்த அம்மையார் 1917ம் வருஷம் காலஞ் சென்றார். அப்பொழுது, ராஜாஜியின் நண்பரான ஸர் டி. விஜயராகவாச்சாரியார் எனக்கு எழுதிய கடிதத்தில் "ஒரு மனைவியின் வியாதி காலத்தில், அவளை அல்லும் பகலும் பாதுகாத்து, அவளுடைய சௌகரியங்களைக் கவனித்து, அவளுக்குத் தைரியம் சொன்ன கணவர்களில் ராஜாஜிக்கு ஒப்பானவர்களை நான் என் அநுபவத்தில் கண்டதில்லை" என்று எழுதினார்.

** ** **

ராஜாஜியின் மனம் ஏழைகளுக்கு இரங்கும் மனம். வக்கீல் தொழில் செய்யுங்காலத்தில் கூட, வக்கீல் தொழில் செய்பவர்கள், கட்சிக்காரர்கள் மனத்தைத் துயரப்படுத்தி இரக்கமின்றி அவர்களிடம் பணம் கறக்கக் கூடாது என்று அடிக்கடி சொல்லுவார். ஏற்கெனவே, ஏதோ ஒரு கஷ்டத்துக்குள் அகப்பட்டுக் கொண்டு கட்சிக்காரன் வக்கீலிடம் உதவிக்காக வருகிறான். அந்தச் சமயத்தில், அவன் கஷ்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு, அவனிடம் பணம் வசூலிக்க முயற்சி செய்வது தவறு என்பது அவர் கொள்கை.

ஆனால் அவர் வக்கீல் தொழிலில் மாதம் ஒன்றுக்கு ஆயிரக்கணக்காகப் பணம் சம்பாதித்தார். கட்சிக்காரரிடம் அவர் பீசு பேசும் போதும், பணம் பெறும்பொழுதும் நான் அநேக தடவைகள் நேரில் இருந்திருக்கிறேன். "நீங்கள் என்ன பீசு கொடுப்பீர்கள்?" என்று கட்சிக்காரர்களை அவர் கேட்ட மாத்திரத்தில் அவர்களே ஒரு பெரிய தொகையைச் சொல்லி விடுவார்கள். அல்லது அவர் ஒரு தொகை சொன்னால், அவர்கள் உடனே ஒப்புக்கொண்டு விடுவார்கள். அவர் ஆஜரானால் கேஸ் கண்டிப்பாய்த் தங்கள் பக்கம் ஜெயித்துவிடும் என்று அவர்களுக்கு நம்பிக்கையிருந்தது.

ராஜாஜி ஏராளமாய்ப் பணம் சம்பாதித்தார். ஏராளமாய் நல்ல வழியில் சம்பாதித்த பணத்தைச் செலவும் செய்தார். நல்வாழ்வு வாழ்ந்தார். மோட்டார்கார்கள் அதிகமாயில்லாத அந்த நாட்களில் ஒரு மோட்டார் வாங்கி, அதை அவரேகூட ஓட்டக் கற்றுக் கொண்டார். [ வருகிறவர் போகிறவர்களுக்கு நல்ல விருந்துகள். 'இல்லை' யென்று சொல்லாமல் கேட்பவர்களுக் கெல்லாம் நன்கொடை:

** ** **

அவர் 1920ம் வருஷத்தில் செய்த தியாகம் அல்லவா உண்மையான தியாகம்! அவர் காந்திஜியின் இயக்கத்தில் சேர்ந்த பிறகு, திருச்செங்கோடு புதுப் பாளைய ஆசிரமத்தில் இருக்கும்பொழுது ஒரு தடவை 1924ம் வருஷத்தில் அவரைப்பார்க்கச் சென்றேன். கதர்த் துணிகளை யணிந்து, ஒரு குடிசையில் தன்னந் தனியாய் ஏழை மக்களுடன் தானும் ஒரு ஏழையாய் வசித்து வந்தார். நூல் நூற்றுக் கொண்டு, ஹரிஜனக் குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டிக் கொண்டிருந்ததையும் கண்டேன். 'ஆகா, இவரல்லவா கர்மயோகி! இவரல்லவோ மனிதர்! நாமும் இருக்கிறோமே!' என்று நினைத்தேன்.

1906-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் தென்னாப்பிரிக்காவில் காந்திஜி தமது சத்தியாக்கிரக இயக்கத்தை ஆரம்பித்திருந்தார். அதன்-பிறகு தினசரிப் பத்திரிகைகளில் அடிக்கடி, அவரைப் பற்றிய செய்திகள் வெளிவரும். அவைகளைப் படிக்கும் போதெல்லாம் ராஜாஜிக்கு அவர் மேல், ஆர்வம் பொங்கும்.

காந்திமகானுடன் சேர்ந்தபின் ராஜாஜி நாட்டுக்குச் செய்த சேவை யாவரும் அறிந்ததே. இத்தகைய மகான் இன்று நம்மிடையே வாழ்ந்துவருவது நாம் செய்த பெரும் புண்ணியமாகும். வாழ்க, ராஜாஜி!



தண்ணீர் சப்ளை விஷயமாக உங்கள் தேவை
எதுவானாலும் சரி,
அதற்கென்றே டெமிங்
பம்புகள் உள்ளன.
டெமிங் மார்வெல்
வீடுகளுக்கு
டெமிங் ஆயில்ரைட்
தொழிற்சாலைகளுக்கு
டெமிங் டுப்ளே
கிராம தண்ணீர் சப்ளைக்கு
● வீடு, தொழிற்சாலை, ஹோட்டல், ஆஸ்பத்திரி அல்லது கிராம தண்ணீர் தேவைகளுக்கு நம்பகரமான உழைப்புடன் நயமான விலையில் பம்பு செட்டுகள் உள்ளன.
● கைவசம் உள்ள ஸ்டாக்கிலிருந்தும், வந்துகொண்டிருக்கும் ஸ்டாக்கிலிருந்தும் எந்த மாடல்களையும் விரைவில் சப்ளை செய்யமுடியும்.
● ஸ்பேர் சாமான்களுக்கு நீங்கள் கவலைப்படவேண்டியதே இல்லை. அவை எப்பொழுதும் கிடைக்கும்
● எங்கள் பொறுப்பு, சப்ளை செய்து பம்புகளை பொருத்துவதுடன் நின்றுவிடுவதில்லை. உள்ளூரானாலும் சரி, வெளியூரானாலும் சரி, பம்புகளை அவ்வப்போது சரிபார்த்து ஓடச்செய்வதும் எங்கள் பொறுப்பே. இதற்குவேண்டிய எல்லா வசதிகளும் எங்களிடம் உண்டு.
● ஒரு முறை எங்கள் கம்பெனிக்கு விஜயம் செய்து நேரில் எல்லா பம்பு செட்டுகளையும் பார்க்கவும். டெமிங் பம்புகளைப்பற்றிய ஆலோசனை எப்பொழுதும் எங்களிடம் எளிதில் கிடைக்கும்.
தண்ணீர் சப்ளை விஷயங்களை திட்டமாக தீர்த்துவைக்கக்கூடிய நிபுணர்கள்
EEC
ஈஸன் என்ஜினியரிங் கம்பெனி லிமிடெட்.
5-7 செகண்ட் லைன் பீச், மதராஸ்.
பயனீர் சைக்கிள் ஹவுஸ்
மேலக் கோபுர வீதி, மதுரை

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

7

இல்லறம் சிறப்படைவதற்குப் புருஷனுடைய குணங்களைக் காட்டிலும் மனைவியின் நற்குணங்கள் முக்கியம். புருஷனுடைய குறைகளை மனைவி சரிக்கட்டலாம். மனைவியின் குறைகள் இல்லறத்தைக் கெடுத்து விடும். புருஷன் அதற்கு ஒன்றும் செய்து சீர்படுத்த இயலாது.

வீட்டின் யஜமானி தகுந்தவளாயின், எந்தக் குறையும் நீங்கி இல்லறம் அழகு பெற்று நடைபெறும். வாழ்க்கைத் துணைவிக்கு வேண்டிய குணம் அவளிடம் இல்லையாயின், கணவன் என்ன செய்தும் பயனில்லை.

இல்லதுஎன் இல்லவள்
மாண்பானால்? உள்ளதுஎன்
இல்லவள் மாணாக்
கடை?

'இல்' என்பதை வைத்து முனிவர் தமக்கே உரிய தனி நடையில் மிக அழகான குறளை யாத்திருக்கிறார். இல்லவள் என்பது மனையாள். அவள் மாண்பு பெற்றவளாக இருந்து விட்டால் அந்த இல்லத்தில் இல்லாதது என்ன? குறையென்பதைக் காணவே முடியாது. எல்லாக் குற்றமும் குறையும் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போகும். அவளிடம் அந்த மாண்பு இல்லாவிட்டால், அந்தக் குடும்பத்துக்கு என்ன இருந்தும் இல்லைதான். பெண் குலத்துக்கு வள்ளுவர் மதிப்புத் தரவில்லை என்று யார் சொல்ல முடியும்?

• • •

ஒருவனுக்குள்ள செல்வங்களில் பெருஞ் செல்வம் கற்புடைய மனைவி. கற்பு என்பதில் அனைத்தும் அடங்கும். பிற புருஷரை விரும்பாமல் இருப்பது மட்டும் கற்பு ஆகிவிடாது. பூரண அன்பும், ஆசையும், நம்பிக்கையும், அனைத்தும் நீயே என்னும் பக்தியுமே கற்பாகும். அத்தகைய பக்தியைத் தன்னிடம் காட்டும் மனைவியை அடைந்த ஒருவ



னுக்கு, அவனே எல்லாவற்றைக் காட்டிடும் பெருந்த செல்வம்.

பெண்ணின் பெருந்தக்க
யாவுள, கற்புஎன்னும்
திண்மைஉண் டாகப்
பெறின்

'கற்பு' என்று சொல்லப்படும் திண்மை என்றார். கற்பின் முக்கியமான இலக்கணம் திண்மை. ஒரு சமயம் பொங்கி வழிந்து, ஒரு சமயம் தாழ்ந்து போகும் பக்தி கற்பாகாது. அசையாததும் அழியாததுமான பக்தியே கற்பு.

• • •

நம்முடைய நாட்டிலுடைய சமயத்தின்படியும், வழக்கத்தின்படியும், கடவுளை எந்தப் பொருளிலும் வைத்து வழிபடுவோம். எந்த லிங்கத்தையேனும் முன்வைத்துக் கொண்டு, பகவானை அன்பும் ஆர்வமும்செலுத்தி வழிபடுகின்றோம். லிங்கம் என்பது சுவாமி பூஜைக்காக வைத்துக் கொள்ளும் ஒரு அடையாளப் பொருள்.

ஆனபடியால், மனைவி தன் கணவனைப் பகவத் சொரூபமாகவே பாவித்து வழிபடலாம். அத்தகைய பண்பை அடைந்த மனைவிக்கு, வேறு கோவில் வேண்டியதில்லை. காலை கண் விழித்ததும் கொழுநனைத் தொழுவாள். கணவன் உருவத்தில் கடவுளைக் காண்பாள். சமயாசாரப்படி ஒரு மூர்த்திக்குச் செலுத்த வேண்டிய அன்பும் ஆர்வமும் பூசையும் கணவனையே ஆண்டவனாகப் பாவித்து அவனுக்குச் செலுத்துவது. எளிதான சாதனம் ஆகிவிடும். இதை முனிவர் சொல்லுகிறார் :

தெய்வம் தொழாஅள்
கொழுநன் தொழுதெழுவாள்
பெய்எனப் பெய்யும்
மழை

கடவுள் வழிபாட்டினால் அடையக் கூடிய பயனை, மனைவி தன் கணவனிடம் செலுத்தும் கற்பினால் அடைவாள். சித்தர்கள் பெறும் சித்திகளைக் கற்புடைய மனைவி எளிதில் அடைவாள்.



# DON'T USE MAKE-UPS THAT DRY YOUR SKIN...

USE

# PAN-STIK*

MAKE-UP

So good for your skin, so quick and easy to use and so gorgeous for your appearance. Just a few light strokes to forehead, nose, chin and cheeks, a quick easy fingertip blending and—presto!—your complexion is flawless, satin-smooth and ever so inviting.

**MAX FACTOR**

HOLLYWOOD





*PAN-STIK (trademark) means Max Factor Hollywood cream type make up

SARITA MONTIEL
In RKO'S
"RUN OF THE ARROW"

Available at all Leading Cosmetic and General Stores

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.

Aiyars : PS 7

# இன்பமும் துன்பமும்



“சீதை! இங்கே வா, உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது என்று நான் உனக்கு எவ்வளவு தடவைகள் சொல்லியிருக்கிறேன்?” என்றாள் கைகேயி.

“இல்லை, அம்மா! எவ்வளவு நேரம்தான் வேலை செய்யாமல் உட்கார்ந்திருக்க முடியும்? கைகாலெல்லாம் மரத்துப் போகின்றன. இதோ உங்கள் பூஜைப் பாத்திரங்களை மட்டும் எடுத்து வைத்துவிட்டு வந்து விடுகிறேன்!” என்று சீதை மிகவும் பணிவுடன் கூறினாள்.

“மன்னி! நல்ல சமர்த்து நாட்டுப் பெண்ணாக அம்மா சொல்வதைக் கேட்டுக் கொண்டிரு. பூஜா பாத்திரங்களை நான்தான் எடுத்து வைப்பேன். மாண்டவி இதைச் சொன்னதோடு மட்டும் நில்லாமல் பூஜா பாத்திரங்களை எடுக்கவும் ஓடினாள். மாமியார்களுக்குச் சேவை செய்வதில் நாட்டுப் பெண்களிடம் போட்டி ஏற்பட்டது.

“மன்னி! பூக்களைப் பறித்து வருகிறேன் என்று ஓடி விடாதே. அவற்றை நான் முன்பே பறித்து வைத்து விட்டேன்!” என்று கூறின ஊர்மிளை உடனடியாகப் பூக்களைத் தொடுக்கவும் ஆரம்பித்துவிட்டாள்.

“ஏனம்மா, சகோதரிகளே! எனக்கு இம்மாதிரி தண்டனை கொடுக்க வேண்டுமென்று உங்களுக்கு ஏன் இப்படிப் புத்தி போகிறது? பெரியவர்களுக்குச் சேவை செய்ய முடியாமல் நான் என்னதான் அப்படிப்பட்ட பாவத்தைச் செய்து விட்டேன்?” என்று சீதை கோபித்துக் கொண்டாள்...

“பாவமா, புண்ணியம் என்று சொல். முதல் முதலாக நம் குலம் விளங்க நீ தரப்போகும் அற்புத வஸ்துவால் நாங்கள் எவ்வளவு சந்தோஷம் அடைந்திருக்கிறோம் தெரியுமா? பைத்தியமே! இப்பொழுது எங்களுக்குச் சேவை வேண்டியதில்லை. மடியில் வைத்துக் கொஞ்சி, மழலைச் சொல் கேட்டு இன்புற்று மகிழ எங்களுக்கு ஒரு அருமைப்

எஸ். ரங்கநாயகி



பேரனைத் தரப் போகிறாயே, அதுதான் எங்களுக்கு வேண்டும்......சுருத கீர்த்தி! நேற்று நானும் நீயும் சென்று வாங்கின அந்தப் பீதாம்பரப் புடவையை எடுத்து வா. சீதைக்கு உடுத்தி விடலாம்'' என்று கைகேயி கூறியதும் அதை எடுத்துவரச் சுருதகீர்த்தி ஓடினாள்.

கைகேயி தன் கைகளினாலேயே அவளுக்கு அந்தப் புடவையை உடுத்தினாள். அவளைச் சுற்றிச் சுற்றி வந்து அழகு பார்த்தாள். சிறு குழந்தைபோல் அவள் கன்னத்தைத் தொட்டு முத்தமிட்டாள். நெற்றியை வருடினாள்.

'' அம்மா! இவ்வளவு பூக்கள் இருக்கின்றனவே. இவை எல்லாவற்றையும் வைத்து மன்னிக்குப் பூச்சூட்டினால் நன்றாக இருக்குமே!'' ஒரு பிரேரணையைக் கொண்டு வந்தாள் மாண்டவி.

மாண்டவி, ஊர்மிளை, சுருதகீர்த்தி மூவருக்குமே தங்களுக்கு மாமியார் ஒரு அலங்காரமும் செய்யவில்லையே என்ற குறையே இல்லை. நிறை கர்ப்பிணியான சீதைக்கு வேண்டிய அலங்காரங்களைச் செய்வதில் தாங்களும் கலந்து கொண்டனர்.

இராவண வதம் முடிந்து அயோத்தியில் மீண்டும் எல்லோரும் ஆனந்திக்கும் காலம் அது. கௌசல்யை, தன் புத்திரன் தன்னிடத்தில் இருப்பது போதும் என்ற திருப்தியுடன் இருப்பதுபோல், வைராகினியாகிச் சதா பூஜா கிருஹத்தில் ஸ்ரீமந் நாராயணனைப் பூஜிப்பதில் ஈடுபட்டிருந்தாள். அதனால் மற்றவர்களுடன் நெருங்கிப் பழக அவளுக்குத் தோன்றவே இல்லை. சுமித்திரையோ என்றுமே வாழ்நாளை அதிகமாகக் களித்து இன்புறவும் மாட்டாள், அதிகமாக வெறுத்து ஒதுக்கவும் மாட்டாள்.

கைகேயிக்கு ஒரே குதூகலம். நாட்டுப் பெண்கள் எல்லோருடனும் சிறு பெண்போல் ஒட்டி ஒட்டிப் பழகினாள். அவர்களுடன் ஆடினாள், பாடினாள், விளையாடினாள், கேலி செய்து மகிழ்ந்தாள். சீதை கர்ப்பவதி என்று அறிந்ததும் அவளுடைய முழு அன்பும் அவள் மீது விழுந்தது; அன்புச் சிறையில் வைத்துக் கைகேயியும், மற்ற நாட்டுப் பெண்களும் சீதையைத் திக்குமுக்காடச் செய்தனர்.

சீதை எவ்வளவு தடுத்தும் கேளாமல் கைகேயி, மாண்டவி கொடுத்த பூக்களை அவள் கூந்தலில் வைத்துப் பின்னினாள்! முகம் துடைத்துத் திலகமிட்டாள். அஞ்சனமிட்டு அழகு செய்தாள்.

'' அம்மா! இவ்வளவு செய்து கடைசியில் ஒன்றை மறந்து விட்டீர்களே! மன்னி இருக்கும் சோபையில் அவள் அந்த அலங்காரத்தில் வெளியே சென்றால், அன்றலர்ந்த மலரென்று நினைத்து வண்டுகள் அவளைத் துளைத்துக் கொட்டி விடும். நகர மக்களோ மற்றொரு உவமை அதற்குள் எப்படி உதித்தாள் என்று சீதையை நெருங்க ஆரம்பித்து விடுவார்கள். அதனால் முதல் காரியமாக ஒரு பெரிய திருஷ்டிப் பொட்டைக் கன்னத்தில் வையுங்கள்'' என்றாள் ஊர்மிளை.

'' ஆமாமடி, பெண்களே! இருங்கள், சீதையை அதற்குள் நீங்கள் கூடப் பார்க்காதீர்கள். திருஷ்டிப் பொட்டு வைத்த பிறகு பார்க்கலாம்.''

கைகேயி திருஷ்டிப் பொட்டை வைத்துக் கொண்டிருந்த போதே ஸ்ரீராமன் உள்ளே நுழைந்தார். பூஜைகால வேளையில் நாராயணனை நமஸ்கரித்து விட்டு, தாய்மார்களின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்வது அவர் வழக்கம். முதலில் கைகேயியிடம்தான் வருவார்.

'' அம்மா! பாததூளிகளை அருள வேண்டும்!'' என்றார், மிகவும் விநயமாக.

''வாடாப்பா வா. இதோ பார்த்தாயா? இன்றுதான் இந்தத் தங்கப் பதுமையை வாங்கினேன். இதன் அலங்காரம் நன்றாக இருக்கிறதா, பார்!'' தங்கப் பதுமையாகத் தலை குனிந்து மௌனமாக நின்ற சீதையைக் காட்டிக் கூறினாள் கைகேயி.

ஓரக் கண்களால் மனைவியைப் பார்த்த ரகுநந்தனன் அவள் அழகில் சிறிது நேரம் தம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டு நின்றார். மனைவியின் அழகை நன்றாகப் பார்த்து ரசிக்கட்டும் என்று கைகேயி, ''ராமா! நீ இதோ இங்கேயே சற்று இரு. நான் போய் உனக்குப் பூஜைப் பிரசாதம் எடுத்து வருகிறேன்'' என்று அவ்விடத்தை விட்டு அகன்றாள். மாமியின் குறிப்பை அறிந்த மாண்டவி, ஊர்மிளை, சுருதகீர்த்தியும் அவளைப் பின்தொடர்ந்து சென்றனர்.

சீதையை விட்டுக் கண்களை எடுக்க முடியாமல் நின்றிருந்தார் தசரதபுத்திரன். அன்னம் மெதுவாக அவரை நோக்கி அசைந்தது.

'' சீதை! '' — ராமன் அவள் கைகளைப் பற்றினார்.

சீதை நிமிர்ந்து நோக்கினாள்.

''சீதை! உனக்குச் சேவை செய்வதில் இவர்கள் எல்லோரும் எவ்வளவோ பாக்கியம் பெற்று விட்டார்கள். எனக்கு மட்டும் அந்த



பாக்கியம் கிட்டுவதற்கு வழி ஒன்றும் செய்ய மாட்டேன் என்கிறீரே?'' என்றான் ராமன்.

சீதை ஒரு புன்னகைப் பூ உதிர்த்தாள். ''இதோ பாருங்கள், நான் உங்களிடம் சுதந்திரமாக இருக்க விரும்புகிறேன். இவர்கள் போல் எனக்குச் சேவை செய்கிறேன் என்று கிளம்பி அன்புச் சிறையில் தள்ளிவிடாதீர்கள்'' என்றாள்.

''இல்லை, சீதை! கர்ப்பிணி ஸ்திரீகளின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதில் பலர் போட்டியிட்டுக் கொண்டு முன்வருவார்கள். உன் விருப்பம் ஒன்றுகூட நீ என்னிடம் தெரிவிக்கவில்லையே. உன்னுடைய விருப்பத்தை யாவது நிறைவேற்ற நான் விரும்புகிறேன்.''

''அப்படியானால் இந்த நகர வாழ்க்கையில் இந்த அன்புச் சிறையிலிருந்து விடுவித்துச் சில நாட்கள் வனத்துக்குச் சென்று முனிபத்தினிகளுக்குச் சேவை செய்யும் பாக்கியத்தை எனக்குக் கொடுங்கள்...''

இதற்குள் கைகேயி பிரசாதத்துடன் திரும்பி விட்டாள். ''இந்தாடாப்பா ராமா! இந்தப் பிரசாதத்தை இருவரும் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால், இதோ பார், சீதைக்குத் தித்திப்புப் பண்டங்கள் மட்டும் கொடு. அப்பொழுதுதான் பிறக்கும் குழந்தை 'குவா, குவா' என்று சதா அழுது அவளுடனேயே ஒட்டிக் கொண்டிராமல் சிரித்த முகத்துடன் பாட்டியிடம் கொஞ்சிக் கொண்டிருக்கும்'' என்றாள்.

சீதையின் முகம் வெட்கத்தால் சிவக்க ராமன் அதைக் கண்டு ஆனந்தமடைந்தார்.

● ● ●

''சீதை! சீதை...!'' கைகேயி அவளைத் தேடிக் கொண்டே ராமருடைய ஸதா இருக்கைக்கு வந்தாள். அவள் கையில் சந்திரஹாரம் ஒன்று இருந்தது. அன்றுதான் தயாரித்து வந்த அந்த ஹாரத்தைச் சீதையின் கழுத்தில் அணிவித்து மகிழ அவள் பரபரப்புடன் இருந்தாள்.

''ராமா! என் சீதை எங்கே?''

ரகுநந்தனன் தலையை நிமிர்த்தவே இல்லை. உலக அபவாதத்தை அறிந்து, அதன் காரணமாகச் சீதையை லக்ஷ்மணனுடன் வனத்துக்கு அனுப்பி விட்டதை, அன்பைப் பொழியும் இந்தத் தாயிடம் எப்படிக் கூறுவது?

''ராமா, ஏ ராமா, நான் கூப்பிடுவது உன் காதில் விழவில்லையா? என் அருமை நாட்டுப் பெண் எங்கே? அவளை ஒளித்து வைத்து அப்புறம் விளையாடலாம். அவள் கழுத்தை அலங்கரிக்கும் பாக்கியத்தை அடைய இந்த ஹாரம் துடிக்கிறது. என் சீதை எங்கேயடா என் மகனே?'' — கைகேயி ராமனுடைய முகத்தைத் தூக்கினாள்.

உடனே திடுக்கிட்டாள். அவர் முகத்தில் ஏன் இந்த சோகம்? ''ஐயோ, ராமா! உன் முகம் ஏன் இப்படி வெளுத்திருக்கிறது? என் சீதைக்கு என்ன வந்து விட்டது? அவளுக்குப் பிரசவ வேதனை எடுத்து, அதனால் துன்பப் படுகிறாயா? அப்படியானால் அதற்காக வருந்தாதே. அந்த நாராயணன் அருளில் எல்லாம் நன்றாக நடக்கும். அவள் இப்பொழுது எங்கே, சொல்! அடே பரதா! சீதை எங்கே? நீயாவது சொல்.''



ராஜாஜியின் தர்ம பத்தினி
ஸ்ரீமதி அலர்மேலுமங்கை அம்மாள்.

ராமன் வாயே திறக்கவில்லை. ''அம்மா! துயரக் கடலில் தத்தளிக்கும் அண்ணனை மேலும் துன்புறுத்தாதே'' என்றார் அருகிருந்த பரதன்.

''துயரமா? தாய்க்குக் கூடத் தெரியாமல் அப்படி என்ன துயரம் அது?''

இதற்குள் சீதையை வனத்தில் விட்டு விட்டுத் தலைவிரிகோலமாக லக்ஷ்மணன் வந்தார். ''அண்ணா! ஐயோ, ஏன் இந்தப் பொறுப்பை என்மீது சுமத்தினீர்கள்? நான் மகாபாபியாகிவிட்டேன். மன்னியை அபலையாக்கி வனத்தில் விட்டுப் பெரும் பழியைச் சுமந்து விட்டேன். அண்ணா, வேண்டாம், நான் இனி உங்களுக்குச் சேவை செய்யும் பொறுப்பை ஏற்கவே மாட்டேன். கண்மூடித்தனமான சேவையால் உங்களுடன் வனவாசத்தை ஏற்றேன், புகழடைந்தேன்; அதே கண்மூடித்தனமான சேவையால் ராவண வதத்தில் உதவி புரிந்தேன், புகழடைந்தேன்; ஐயோ! அதே கண்மூடித்தனமான சேவையால் உங்கள் கட்டளையை எதிர்க்க முடியாமல் லோக அபவாதம் என்ற போர்வையின் மறைவில் பூரண கர்ப்பிணியான மன்னியைக் காட்டில் விட்டு விட்டு வந்துவிட்டேனே. உலகம் என்னை நிந்திக்கும்''—சீதையை வனத்தில் கொண்டு விட்டுத் திரும்பின லக்ஷ்மணனால் தன் மனத்தைச் சமாதானம் செய்யவே முடியவில்லை. புலம்பித் தவித்தார்.

ஒரே நிமிஷத்தில் கைகேயி நிலைமையைப் புரிந்து கொண்டு விட்டாள்; பதறிவிட்டாள். கையிலிருந்து நழுவிச் சந்திரஹாரம் கீழே விழுந்தது. அதிலிருந்த முத்துக்கள் நான்கு புறமும் சிதறின.

''ராமா! இது என்ன அநியாயம்? சுயேச்சாதிகாரமாக ராஜ்யத்தை ஆளக் கிளம்பி விட்டாயா? சிம்மாசனத்தில் ஏறி அமர்ந்ததும் தாய்மார்களை மறந்து விட்டாயா?



ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தைந்தாம் ஆண்டில் ராஜாஜி அவர்கள் ஸ்ரீரங்கத்துக்கு விஜயம்செய்தபோது ஸ்ரீரங்க நாதக் கோயில் யானை ராஜாஜிக்கு மாலை சூட்டி வரவேற்றது.

சீதையை வனத்துக்கு அனுப்பு என்று எங்களை ஏன் கேட்கவில்லை? உனக்கு யோசனை சொல்லும் மந்திரிகள் எங்கே போய்விட்டார்கள்? ஏ, பரதா! உன் புத்தி எங்கே போய்விட்டது? ராமனை நான் வனத்துக்கு அனுப்பிய பொழுது வீரனைக் கர்ஜித்து என்னைத் தூஷித்தாயே! அண்ணன் என்ற அந்த வீரம் சோம்பேறியாகி மூலையில் முடங்கிக் கிடந்ததோ? சொல், ஏன்டா நிற்கிறாய்?'' என்று கைகேயி கர்ஜித்தாள்.

''அம்மா! அவன்று அரசன்.' நாம் பிரஜைகள். அரசருக்குக் கட்டுப்பட்டவர்கள். அவர் எதையும் யோசித்துத்தான் செய்வார்!'' என்று தலை குனிந்தபடி மிகவும் பணிவுடன் கூறினான் பரதன்.

''அம்மா!'' லட்சுமணர் கர்ஜித்தார். அவர் கோபம் முழுவதும் கைகேயியின் மீது பாய்ந்தது.

''அம்மா! இவ்வளவு கஷ்டங்களுக்கும் நீங்கள் தான் காரணம்?''

''என்ன, நானா?''

''ஆமாம், அன்று 'நீங்கள்' அண்ணனைக் காட்டுக்கு அனுப்பியிருக்காவிட்டால் மன்னி இராவணன் வீட்டில் இருக்க வேண்டியிருந்திருக்காது. இன்று இந்த உலக அபவாதமும் ஜனங்களிடையே கிளம்பியிருக்காது. அன்று கோரமாக நடந்து கொண்டீர்கள். இன்று படபடக்கிறீர்கள்!''

''லட்சுமணா! வாயை அடக்கு!'' என்று ராமன் லக்ஷ்மணனை அடக்கினார். லக்ஷ்மணன் கோபிப்பதும் ராமன் அடக்குவதும் வழக்கம்.

லக்ஷ்மணனின் வார்த்தைகள் 'நீதான் குற்றவாளி' என்று அவள் மனத்தின் நான்குபுறத்திலும் எதிரொலித்தது. அவள் தலையைப் பிய்த்துக் கொண்டாள்.

''ஆமாம், நான்தான் இந்தப் பொல்லாக் காரியங்களுக்குக் குற்றவாளி; ஐயோ, ராமா! இந்தப் பாவிதான் குற்றவாளி. நான் இப்பொழுதே ஓடுவேன். சீதையைத் தேடிக் கொண்டு வந்து விட்டுத்தான் மறுகாரியம்!''

கைகேயி உன்மத்தம் பிடித்த நிலையில் அரண்மனையை விட்டு ஓடினாள்; வெகு வேகமாக ஓடிக்கொண்டே இருந்தாள்.

* * *

திருமால் ஆதிசேஷனுடன் விளையாடிக் கொண்டிருந்தபோது பூமிதேவி வந்தாள்.

''பிரபோ! கொடுத்த வாக்கைநிறைவேற்றாமல் விளையாடிக்கொண்டிருப்பது நியாயமா?''

''என்னம்மா சொல்கிறாய்? 'இராவண வதம் முடிந்து விட்டதே. இன்னும் என் பெண் என்னிடம் வரவில்லையே' என்று துயரப்பட்டாய். நானும் உன் புத்திரியை உன்னிடம் சேர்ப்பதாக வாக்குக் கொடுத்து, லோக அபவாதத்தை ஏற்படுத்தி அவளை வனத்துக்குச் செல்ல ஏற்பாடு செய்தேன். அவளும் சென்று விட்டாளே!''

''இல்லை பிரபோ, அதோ பாருங்கள். கைகேயி அவளை நாட்டுக்கு அழைத்து வர ஓடுகிறாள். தாய் மனம் அறியாத என்னுடைய பெண், மாமியின் பேச்சுக்கு மதிப்புக் கொடுத்து அவளுடன் நகரத்துக்குத் திரும்பி விடுவாளே!''

அவளைச் சமாதானம் செய்து அனுப்பின மகாவிஷ்ணு இந்திரனையும், வருணனையும் கூப்பிட்டு அனுப்பினார்.

''சீதா, ஓ சீ...தா!'' கைகேயியின் குரல் வனத்தின் நான்குபுறமும் எதிரொலித்தது. கைகேயி ஓடிக்கொண்டே இருந்தாள். கங்கைக் கரையைச் சமீபித்து விட்டாள்.

திடீரென்று ஒரு பேய்க் காற்று கிளம்பியது. வானத்தில் மேகங்கள் சூழ்ந்து இடியும்

மின்னலும் இளம்பின. நான்குபுறமும் இருள் சூழ்ந்தது. கங்கையின் நீர் உயர உயரக் கிளம்பிப் பிசாசுபோல் சுழன்று விழுந்தது.

கைகேயி, "சீதா, ஓ சீ...தா!" என்று கதறினள். சுழல் காற்று அவளைப் பின்நோக்கித் தள்ளியது. அவள் உடல் நனைந்தது. மேலும் ஒரு அடிகூட அவளால் எடுத்து வைக்க முடியவில்லை. உடல் சோர்வும், உள்ளச் சோர்வும் அவளை வாட்ட, "சீதை!" என்று கூறியபடியே மயங்கி விழுந்துவிட்டாள்.

இதற்குள் அவளை இடைமறித்து, அரண்மனைக்கு அழைத்துச் செல்ல வந்த பரதன் தம் ரதத்தை அவள் அருகில் செலுத்தி வந்து விட்டார். மூர்ச்சித்துக் கிடந்த அன்னையைத் தூக்கி ரதத்தில் வைத்து அரண்மனையை நோக்கி விரைந்தார்.

மறுநாள் மூர்ச்சை தெளிந்ததும் கைகேயி மீண்டும் கிளம்பினள். ஆனால் அவளால் ஒரு அடியும் எடுத்து வைக்க முடியவில்லை. அன்றிலிருந்து அவள் மற்ற நாட்டுப் பெண்களிடம் கூடிக் குலாவுவதை நிறுத்திக் கொண்டாள். அன்ன ஆகாரத்தை மறந்தாள்.

தெருவில் உல்லாசமாகப் பாடி வந்த அந்தக் குசலவர்களைப் பார்த்து நகர மக்கள் அனைவரும் திரண்டு தெருவில் கூடினர்.

முதியோர் அவர்கள் தேஜஸில் மயங்கினர். மாங்கல்ய ஸ்திரீகள் அவர்களை நிற்க வைத்து மஞ்சள் நீர் சுற்றித் திருஷ்டி கழித்தனர்.

குசலவர்கள் வால்மீகியின் கட்டளையினுல் யாக முடிவில் திவ்யமான ஆதிகாவியமான ராமாயண சுலோகங்களைப் பாடி விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தனர். நகர மக்களின் வரவேற்பு அவர்களுக்கு ஆனந்தத்தை விளைவித்தது. சீக்கிரமாக முனிவரிடம் திரும்ப வேண்டும் என்று கடுக நடக்க ஆரம்பித்தனர்.

"குச, லவா! என் அருமைக் கண்மணிகளே!"

இருவரும் திரும்பிப் பார்த்தனர். கூனை மடைந்த உடலும், அழுக்கு ஆடையும் கூடின ஒரு வயோதிக ஸ்திரீ ஓடி வந்து கொண்டிருந்தாள். அவளுக்காக, நின்றனர் இருவரும். 'பரந்தாமனின் அருமைக் குழந்தைகள் அவர்கள்' என்பதை அறிந்துவிட்ட கைகேயி அவர்களைச் சமீபித்து விட்டாள்! பெரியவள் என்ற முறையில் தெரியாதவர்களாயினும் நமஸ்கரிக்க வேண்டியது என்ற குருவின் கெடுப்படி இருவரும் அவள் பாதங்களில் நமஸ்கரித்தனர்.

கைகேயி இருவரையும் அணைத்துக் கொண்டாள். கண்ணீர் பெருக்கினள். "குழந்தைகளே! நான் யார் தெரியுமா?...நான்தான்... வேண்டாமடா, என் உறவே உங்களுக்குத் தெரிய வேண்டாம்...நான் ஒரு பாபி என்று அறிமுகம் செய்து கொள்ளுங்கள்."

குசனும், லவனும் பரிதாபமாக அவள் முகத்தை நோக்கினர்.

"இதோ பாருங்கள் குழந்தைகளே! உங்கள் அம்மா ஏன் இவ்வளவு நல்லவளாக இருக்கிறாள்? தனக்குத் தீங்கு செய்தவளை அவள் ஏன் இன்னும் சபிக்கவில்லை? அவள் சபித்திருந்தால் நான் அந்தச் சாபத்தில் பொசுங்கிச் சாம்பலாகி இவ்வளவு நாட்களில் பூமியில் சமாதி அடைந்திருப்பேனே!"

"அம்மா! சபிப்பது மகா பாபம் என்று எங்கள் அம்மா சொல்வாள்" என்றான் லவன், கைகேயியை அவன் புரிந்து கொள்ளவில்லை.

"உங்கள் அம்மா ஒன்றும் தெரியாமல் சொல்லுகிறாள். சபிக்காவிட்டால் உலகில் பாபிகள் நிறைந்து விடுவார்கள் என்று சொல்லுங்கள். அவளை நீங்கள் மீண்டும் சந்திக்கும்போது 'உனக்கு ஒரு மாமி கேகய வம்சத்தில் பிறந்தவள் இருக்கிறாளே, அவளை நன்றாகத்திட்டு. வஞ்சகி, பாதகி என்று திட்டு' என்று சொல்லுங்கள். அந்தத் தீயிலாவது நான் மடிந்துசாகிறேனா என்று பார்க்கலாம்."

அவளைப் பலவிதமாகச் சமாதானம் செய்து குசனும் லவனும் புறப்பட்டார்கள். அவர்கள் போகும் திக்கையே பார்த்தபடி நின்றுவிட்டாள் கைகேயி.

• • • •

"ஏ விலாசினி! ஏனடி நிற்கிறாய். போ, சீக்கிரம் தீயை மூட்டு. இந்த என் பாப உடலைப் பூமிதேவி தன்னிடம் சேர்த்துக் கொள்ள விரும்பாமல் போனால் போகட்டும். அக்னி பகவானிடத்தில் எல்லோருக்கும் அன்பு உண்டு; உம், சீக்கிரம் தீயை மூட்டு. நான் சீக்கிரமே ஸ்வர்க்கத்தில் சீதையைச் சந்திக்க வேண்டும். ஏன் நிற்கிறாய்? ஏமாண்டவி, மாமியின் வார்த்தையில் உனக்கும் அலட்சியமா? சீக்கிரம் தீயை மூட்டு; நான் அக்னிப் பிரவேசம் செய்ய வேண்டும்" என்று கர்ஜித்தாள்.

இன்று அவளுடைய கடைசி விருப்பமும் ஈடேறாமல் போய் விட்டது. சீதையைப் பார்க்க அவள் வருவதற்குள், அவசரப்பட்டு அவளுடன் பேசி விடைபெறும் எண்ணம் கூடத் தோன்றாமல், தான் களங்கமற்றவள் என்பதை நிரூபிக்கத் தாயான பூமாதேவியிடம் ஐக்கியமாகி விட்டாள்.

இந்தச் சமயம் வசிஷ்டர் உள்ளே நுழைந்தார். அவரைப் பின்தொடர்ந்து லவகுசர்கள் நுழைந்தனர்.

"ஸ்வாமி! நான் போகிறேன்" என்று கைகேயி அவர் பாதங்களில் வணங்கினாள்.

கைகேயி எங்கே போவது? "இந்த இரு தாயற்ற குழந்தைகளுக்கும் நீதான் தாய்" என்று லவகுசர்களை அவள் கைகளில் ஒப்படைத்தார் வசிஷ்டர். பிறகு பாலர்களின் பக்கம் திரும்பி, "குசா, லவா! இவள்தான் இனி உங்கள் தாய். சீதையைவிட நீங்கள் இவளிடம் அதிக அன்பு செலுத்த வேண்டும்" என்று கூறி, அவர்களை ஆசீர்வதித்துச் சென்று விட்டார்.

கைகேயினுல் அவர் கட்டளையை மீற முடியவில்லை. தனக்குப் பெரிய கௌரவம் கிடைத்து விட்டதாக மகிழ்ந்தாள். அக்னிப் பிரவேசத்தை மறந்தாள். இரு பாலர்களையும் அணைத்து முத்தமிட்டாள். உச்சி முகர்ந்து உள்ளம் குளிர்ந்தாள். தலையோடு கால்வரையில் தடவிக் கொடுத்தாள்.

திடுமென்று அவள் சரீரத்துக்குப் பலம் வந்தது. ஓடிச் சென்று பட்டாடைகளை எடுத்து வந்தாள். அவ்விருவருக்கும் அதை அணிவித்து முனி குமாரர்களை ராஜகுமாரர்களாக்கினள். கைகேயியின் இருதயத்தில் தாயன்பு பெருக்கெடுத்து ஓடியது.



இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரல் லார்ட் மௌண்ட்பாட்டன் தம்பதிகளை வழியனுப்புகிறார் கவர்னர் ஜெனரல் ராஜாஜி.

உழவுக் கலையையும் உவந்து கற்கிறார் கவர்னர் ஜெனரல்.





எந்த நாளிலும் காந்தி மகானுடைய அன்புக்கும்,
சர்தார் படேலினுடைய பூரண நம்பிக்கைக்கும்,
மரியாதைக்கும் உரியவர் ராஜாஜி.

* * *

மனிதகுல மாணிக்கமும் பாரத ரத்தினமும்.

* * *

கவியரசியும், கவர்னரும்





சேலம் விஜயராகவாச்சாரியார் அவர்கள் குடும்பத்தாருடன்
சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்.

ராஜாஜியும் பேரன் பேத்திகளும் - இரண்டு பெரிய
வம்சங்களின் சந்ததிகள்.




தில்லை வாழ் அந்தணரும்
உடன் செல்லச் சென்று எய்திக்
கொல்லை மான் மறிக்கரத்தார்
கோபுரத்தைத் தொழுது இறைஞ்சி
ஒல்லை போய் உட்புகுந்தார்
உலகு உய்ய நடம் ஆடும்
எல்லையினைத் தலைப்பட்டார்
யாவர்களும் கண்டிலரால்
- கோபாலகிருஷ்ண பாரதியார்
ஆலயப் பிரவேச உரிமையே
தீண்டாமை விலக்கின் அச்சாணி
தமிழ் நாடு ஹரிஜன சேவக சங்கம்


சக்கரவர்த்தித் திருமகன்
ராஜாஜி அவர்கள் தமது வாழ்க்கையில் எத்தனையோ துறைகளில் எத்தனையோ மகத்தான சாதனைகள் புரிந்திருக்கிறார். ஆனாலும் அவர் தமிழ் இலக்கியத்துக்கு ஆற்றிவரும் தொண்டு அவர் ஆற்றிய தொண்டுகளில் சிகரம் போன்றது.
''கல்கி''யில் தொடர்ந்து சக்கரவர்த்தித் திருமகனும், வியாசர் விருந்தும் எழுதித் தமிழ் மக்களுக்குச் செய்த தொண்டில் தாம் அடைந்த மகிழ்ச்சியைப் போல் வேறு எதிலுமே அடைந்ததில்லை என்று அவரே சொல்லுகிறார்.


வியாசர் விருந்து
***
தமிழ்ப் பெரு மக்களுக்கு
என்று ராஜாஜி அவர்கள்
அளித்த ஒரு விருந்து வியாசர்
விருந்து. அதை இன்று உலக
மக்கள் அரும் இலக்கிய விருந்
தாகப் போற்றி வருகிறார்கள்.



# பஜ கோவிந்தம்

மனித குலம் உய்வதற்குப் பக்தியும் ஒழுக்கநெறியும் தான் சிறந்த வழி என்று கண்ட ஆதிசங்கரர் பஜ கோவிந்தத்தை இயற்றினார். அதைப்பெரிதும் அனுபவித்துத் தமிழில் தந்து உதவியிருக்கிறார் ராஜாஜி.



பகவான் ராமகிருஷ்ணர், மகாத்மா காந்தி, துறவி லாரென்ஸ் ஆகிய ஞானிகள் அருளிய அருளுரைகளை ராஜாஜி தமிழ் மக்களுக்கு வழங்கிச் செய்துள்ள சேவை மகத்தானது. இப்பொழுது 'கல்கி' நேயர்கள் ராஜாஜி அவர்கள் எழுதி வரும் வள்ளுவர் வாசகங்களில் திளைத்து அனுபவித்து வருகிறார்கள்.

ராஜாஜி அவர்கள் இயற்றிய இந்த இலக்கியங்களிலிருந்து ஒரு சில காட்சிகளை ஓவியக் கண் கொண்டு பார்த்து வழங்கி இருக்கிறார் ஓவியக் கலைஞர் மணியம்.

குடும்ப நண்பன்

# டஸ்ஸஜுல்

இருமலுக்கும் புண்பட்ட தொண்டைக்கும்

---




## Soviet Literature

**MONTHLY**

Invites every reader to an exciting *tour de force* in the realms of Art and Letters. In each number is presented a novel or play, short stories & poems, articles and reviews, and fine plates of recent paintings. All prominent Soviet writers and critics of world renown are among its distinguished contributors.

**COPIES SENT BY AIR**

*Gift*

*If you subscribe for any Soviet Periodical before 1-1-'58 you will receive a gift of 5 different new Soviet Stamps.*

*Subscription Rates :*

| | |
|---|---|
| ONE YEAR | RS. 6. |
| HALF YEAR | RS. 3. |
| SINGLE COPY | 0.62 N. P. |

V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.

NEW CENTURY BOOK HOUSE, 199, Mount Road, Madras - 2
NEW CENTURY BOOK HOUSE, 10, West Tower Street Madura
VISALAANDHRA PUBLISHING HOUSE - - Vijayawada - 2

# தமிழர் புகழ் வளர்த்த செல்வர்

அன்னை அடிமை நிலைபோக்கி
  அறப்போர் வெற்றித் தளபதியாய்
மன்னும் காந்தி யடிகட்கு
  வலக்கை யாக நின்றுதவி
சென்னை தமிழர் புகழ்வளர்த்த
  செல்வா! ராஜ கோபாலா
இன்னும் பல்லாண் டிவ்வுலகில்
  இனிது வாழ்க வாழ்கவே!

இனிய கனிகள் கையி லெடுத்து
  எளியேன் இருக்கும் இடந்தேடி
கனியும் அன்பால் வந்துள்ளம்
  களியச் செய்த கனவானே!
புனித ஞானி என்றுலகம்
  புகழும் ராஜ கோபாலா
நனியெம் பெருமான் அருளால்எந்
  நாளும் வாழ்க வாழ்கவே!

....

விண் அமுதை யொத்த
  வியாசர் விருந்தளித்த
புண்ணியனே! வேதாந்த
  போதகனே! – தண்ணிய நீள்
ஆழிசூழ் இவ்வுலகில்
  ஆழியான் இன்னருளால்
வாழியநீ ஐயா மகிழ்ந்து!

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை






## வாழ்த்துவோம் !

இவ்வுலகப் பொது மறையாம் அருங்குறளை நம் தாய்நாட்டுக்கு இனிய, எளிய, இன்பமான நடையில் "வள்ளுவர் வாசகம்" என்ற தலைப்பில் உலக அறிஞர் வரிசையில் இருக்கும் மகான் திரு ராஜாஜி அவர்கள் கல்கியில் எழுதியதைப் படிக்கிறேன். எண்ணும்தோறும் இன்புறுகிறேன். அரசியல் வாதிக்கு வழி காட்டியாகவும், நாட்டின் ஆணிவேரான விவசாயிகளுக்குக் கர்த்தாவாகவும், மாணவர் உலகுக்குப் பேராசிரியராகவும், புகழோடு வாழ்விக்கும் இறைவனுக்கு அஞ்சலி செய்குவோம். அவர் நீடுழி வாழத் தினந்தினம் பிரார்த்திப்போம். கல்வி நிலையங்களில் ஆசிரியர் உலகம் அம்மகானுக்குச் சிலை அமைத்து வணங்கி வாழ்த்துவோம்.

தடுக்குப்பம்
26-11-57

டி. கணேசன்

## வள்ளுவர் வாசகம்

திரு ராஜாஜி அவர்கள் கல்கியில் எழுதி வரும் "வள்ளுவர் வாசகம்" என்ற தலைப்பில் குறட்பாக்களின் கருத்தினையும், திருக்குறளின் பெருமையையும் தேச மக்களுக்கு எடுத்துக் காட்டி, பயனடையுமாறும் எழுதி வருகிறார். திருக்குறளைப் படிக்க விரும்பும் அநேக நேயர்களுக்கு இது ஒரு அரிய சந்தர்ப்பமாகும். அவருடைய இந்த அருமைத் தொண்டு வளர்மதி போல் வளரட்டும்.

திருச்சி - 4
9-11-57

எழிலன்பன்

## ராஜாஜி ஜெயந்தி

தமிழ் நாட்டில் பல இடங்களிலும் "ராஜாஜி ஜெயந்தி" கொண்டாட ஏற்பாடுகள் நடந்து வருவது வரவேற்கத் தக்கது. ராஜாஜியின் கொள்கைகளை எடுத்துக் காட்டும் 'கல்கி'யும், ராஜாஜியின் 79-வது ஜெயந்தி விழாவை வெகு விமரிசையாகக் கொண்டாட வேண்டும். அவரது வாழ்க்கை வரலாறுகள் - பொன்மொழிகளை யாவரும் அறியச் செய்ய வேண்டும். ராஜாஜி அவரது ஜெயந்தி தினத்தன்று கல்கி மூலம் நமக்கு நல்ல அறிவுரைகள் வழங்குவார் என்று எதிர்பார்க்கிறேன். தமிழர்கள் ஒவ்வொருவரும் "ராஜாஜி ஜெயந்தி" கொண்டாடத் தூண்ட வேண்டும். நமக்கு ராஜாஜி போன்ற அறிஞர்கள் கிடைப்பது அரிது. கடவுள் ராஜாஜிக்கு நீண்ட ஆயுளையும் நல்ல தேக ஆரோக்கியத்தையும் கொடுக்கப் பிரார்த்திப்போம்.

கல்லிடைக்குறிச்சி
20—11—57

ஆர். ராஜாமணி

## பொருத்தமான கேள்வி

ராஜாஜி தமிழ் நாட்டில் தோன்றியதற்கு நாம் எல்லாரும் பெருமைப்பட வேண்டும். அரசியலில் எந்த விஷயத்தையும் தமது கூரிய கண்களால் குறி வைத்துப் பார்த்து எதையும் நல்லது கெட்டது என்று வெளியிடுவார். ராஜாஜியும், கல்கியும் ஹிந்திக்கு எதிர்ப்பு தெரிவித்து ஹிந்தியை வியாபாரத் தொடர்புக்காவும், ஆங்கிலம் ஆட்சி மொழியாகவும் இருக்கத் தகுதியுள்ளது என்றும் ஹிந்தி ஆட்சி மொழியானால் தமிழர்கள் புறக்கணிக்கப்படுவார்கள் என்றும் கூறி விருப்பது ரொம்பவும் விரும்பத்தக்கது. 'தமிழனுக்கு இரண்டு தாய்களா?' என்று ராஜாஜி கேட்டிருப்பது மிகவும் பொருத்தமான கேள்வி. ஹிந்தி திணிக்கப்பட்டால் ஆங்கிலம் கற்கத் தேவையில்லாமல் போகிறது. தாய்மொழி தெரிந்தால் அவர்களுக்கு அரசாங்க உத்தியோகம் கிடைத்து விடுகிறது. ஆனால் ஒரு தமிழன் ஆங்கிலம், ஹிந்தி, தமிழ் ஆகிய மும்மொழி படிக்க வேண்டி யிருக்கிறது.

ஆகையால் எல்லா அரசாங்க உத்தியோகங்களும் வடவருக்கே கிடைக்கும். ஹிந்தி தெரியாது தமிழருக்கு வேலையில்லாத் திண்டாட்டம்தான். ஆகையால், நாம் ஆங்கிலத்தை இந்திய ஆட்சி மொழியாக ஸ்திரப்படுத்த ராஜாஜி, கல்கி வகுத்துக் கொடுக்கும் வழிகளிலே செல்வோமாக !

புகளூர்
20—11—57

எஸ். பி. செங்கோடன்



# மேஜை



## இரண்டாவது வள்ளுவர்

மூதறிஞர் ராஜாஜி அவர்கள் கல்கியில் எழுதத் தொடங்கியிருக்கும் வள்ளுவர் வாசகத்தில் வள்ளுவரின் குறளை ஆராய்ந்து, தேவர்களுக்குப் பரமாத்மா பாற்கடலைக் கடைந்து தேவாமிர்தம் கொடுத்ததுபோல் குறளில் கண்ட அமிர்தத்தை நமக்குக் கல்கி மூலமாகப் பகிர்ந்து கொடுக்கிறார். தமக்கென்று வாழாத ராஜாஜியை ஏன் இரண்டாவது வள்ளுவர் என்று சொல்லக் கூடாது?

அழகர் நாயக்கன்பட்டி
தேவாரம் — டி. ஏ. ராமசாமி
6—11—57

## இந்தி

இந்தி மொழி வெறியர்களுக்குத் திரு ராஜாஜி கொடுத்திருந்த பதில் வெகு அருமையாக இருந்தது. தமிழ் மொழி சிறப்புற்று வளர்ச்சி பெறத் தமிழ் நாட்டில் ராஜாஜியைப் போன்றவர்கள் முன்வந்திருப்பது தமிழ் மொழிக்கு வெற்றியாகும். மேலும் இதைப் போன்ற ராஜாஜியின் அறிவுரைகளைப் பிரசுரித்து மகிழ்வியுங்கள்.

பம்பலப்பட்டி — ஆர். சீனிவாசன்
28—10—57

## ஜெயந்தி கொண்டாடுவோம்

புராதன பெருமை வாய்ந்த தமிழகத்தில் ஆதிகாலத்திலிருந்து அறிவிலே சிறந்த பெரியோர்களும் ஒழுக்கத்தில் உயர்ந்த மகான்களும் தியாகசீலர்களான உத்தமர்களும் தோன்றியிருக்கிறார்கள். நக்கீரரும், கபிலரும், திருவள்ளுவரும், திருநாவுக்கரசரும், ஞானசம்பந்தரும், பன்னிரு ஆழ்வார்களும் இளங்கோவடிகளும், இராமானுஜரும் இந்தத் தெய்வத் தமிழ் நாட்டிலே பிறந்து வளர்ந்து பெருமை தேடித் தந்தவர்கள்.

அத்தகைய அறிவில் சிறந்த தியாக மூர்த்திகளின் பரம்பரையில் வாழையடி வாழையாகத்தோன்றி இன்றையதினம் நம்மிடையே வாழ்ந்திருக்கும் மகான் ராஜாஜி அவர்கள். "யாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்று துணிந்து சொல்லக் கூடிய உத்தமர். ஏழை பங்காளர்; சத்தியசந்தர்; அறிவுக்களஞ்சியம்; தியாகத்தின் உறைவிடம்.

இத்தகைய மகானைத் தலைவராகப் பெற்றிருக்கும் நாம் பாக்கியம் செய்தவர்கள்.

தேசத்துக்காவது, சமூகத்துக்காவது ஏதேனும் ஒரு துறையில் தொண்டு செய்தவரை அந்தத் தேசமும் மக்களும் போற்றிக் கொண்டாடுவதைக் காண்கிறோம்.

ராஜாஜி அவர்கள் தம் வாழ்நாளில் செய்திருக்கும் தொண்டோ மகத்தானது. அவர் ஈடுபட்டுத் தொண்டு செய்யாத துறையே இல்லை என்று துணிந்து கூறிவிடலாம்.

பெண்களுக்காக அவர் ஆற்றியிருக்கும் தொண்டைப்பற்றிப் பெண்குலமே பெருமைப் படவேண்டும். பெண்மணிகள் அறிவு வளர்வதற்காக அவர்கள் எத்தனையோ நூல்களை எழுதி யிருக்கிறார்கள். ஆமாம். பெண்மணிகளுக்காகவே எழுதியதாகத்தான் நினைக்கிறேன். சோக்ரதர், மார்க்கஸ் அரேலியர், வியாசர் விருந்து, சக்கரவர்த்தித் திருமகன், கண்ணன் காட்டிய வழி, உபநிடதப் பலகணி, ராமகிருஷ்ண உபநிஷதம், பஜகோவிந்தம், ரகுபதி ராகவ, துறவி வாரன்ஸ் முதலிய நூல்களை யெல்லாம் ஒவ்வொருவரும் படித்துப் பயன்பெற வேண்டிய பொக்கிஷங்கள் அல்லவா? இந்த நூல்களை இனிய தமிழில் எளிய நடையில் இயற்றி எங்களுக்கு அளித்த ஞானி ராஜாஜி. இப்பொழுது வள்ளுவர் வாசகத்தின் மூலம் மக்களுக்குச் சிறந்த முறையில் வழிகாட்டி வருகிறார்.

இந்த மகானின் பிறந்த தினத்தை ராம நவமி போல, கிருஷ்ண ஜெயந்திபோல ஒவ்வொரு வீட்டிலும் கொண்டாட வேண்டும். இவ்வாறு கொண்டாடுவதன் மூலம் நாம் உயருவதுடன் நம்முடைய தேசத்தையும் உயர்த்தியவர்களாவோம். அறிஞர்களையும், ஞானிகளையும் போற்றியவர்களாவோம்.

உலகத்தில் அன்பு நிலவப் பாடுபட்டு வரும் உத்தமர் ராஜாஜியின் ஜெயந்தியைக் குதூகலமாகக் கொண்டாடி, பல்லாண்டு பாடுவோம்;

ஆறும் நகரம், சென்னை — புனிதாம்பாள்
27—11—57




சித்திரத் தொடர் கதை
சோதிடப்புலி
11
அத்யாயம்
குழந்தைக்கு மட்டும் என்ன? என் நாக்கிலேயே நீர் ஊறிற்று. எப்படியாவது பலகாரம் நமக்கும் கிடைக்க வேண்டும் என்று ஒரு வழி செய்தேன்.
என்ன வழி?
கல்யாணத்துக்கு முதல் நாள் குதிரை காணாமற் போனதே, அது இந்தச் செல்வத்தின் கை வரிசைதான்!
ஐயோ!
திருட்டுப் பட்டம் கட்டிக் கொள்ள எனக்கு இஷ்டமில்லே. அதனாலே, குதிரையைக் கொண்டு போய் ஒளித்து விட்டு, சோதிடம் சொல்லி நல்ல பெயர் வாங்கினேன். அதனால் தான் நமக்கு அந்த மரியாதை கிடைத்தது!
அப்படியா செய்தீ? அது சரி, இந்த ரத்ன ஹாரத் திருட்டை எப்படிக் கண்டு பிடித்தீங்க?
நான் சோதிடன் ஆனது எதனாலே? இந்த நாக்கினால் தானே? அதனால், "ஏ நாக்கே! எல்லாம் உன்னால் வந்த வினைதான்!" என்று கூச்சல் போட்டேன்! என் கிரகப் பெற்ற அதிர்ஷ்டம் இந்த நாகு தானாக வந்து மாட்டிக் கொண்டதோடு திருட்டை ஒப்புக் கொண்டாள்.


அப்போ ஜமீன்தாரிடம் அவன் பெயரைத்தான் சொல்லி விடுவேனோன்!
அதெப்படி? அவருக்கு நான் கொடுத்திருக்கும் வாக்கு என்ன ஆவது?
அட! பெரிய சோதிடன் மாதிரியில்லே நடிச்சுட்டான். ஜமீன்தார் கிட்ட வத்தி வைத்து இவனைச் சந்திசிரிக்க வைக்கவில்லேயென்றால், என் பெயர் சொக்கன் இல்லை.
அவரும், அவர் பெண் சாதியும் பேசிக்கிட்டிருந்ததை இந்தக் காதாலே கேட்டேன். குதிரையை ஒளிச்சு வைத்தது அவருதான். ஆள் மாட்டிக்கொண்டு விடுவோமோ என்ற சந்தேகம் வந்ததும், சோதிடராக நடித்துத் தப்பியிருக்கிறார்.
அதே போல ரத்தின ஹாரங்களைத் திருடியதும் அவன் தான் என்கிறாயா?
ஆமாமுங்க! இல்லாவிட்டால் திருடன் பெயரைச் சொல்லியிருக்க மாட்டாரா?
நீ சொல்கிறதும் சரியாகத்தான் தோன்றுகிறது. இருந்தாலும் அவனைக் கையும் களவுமாகப் பிடிக்க வேண்டாமா? அதற்கு ஒரு வழி செய்கிறேன்.
தொடரும்

# மாயப் பந்து

ராஜி



## 36. மால்கோஷ் தப்பினுன் !

மால்கோஷ், அவன் கொண்டுவந்த உணவைச் சாப்பிட்டுவிட்டு, "ஐயா! எனக்கு ஒரு உதவி செய்ய முடியுமா ?" என்று கெஞ்சிக் கேட்டான்.

"நான் உனக்கு என்ன உதவி செய்ய முடியும் ?" என்று கேட்டான் அவன்.

"நீ மாத்திரம் என்னை இந்த இடத்திலிருந்து தப்பி ஓடுவதற்கு உதவி செய்தாய் என்றுல் நான் உனக்குப் பொன் காசுகள் கொடுத்து உதவுவேன்" என்று மால்கோஷ் அந்த ஆளின் காதில் இரகசியமாகச் சொன்னுன்.

"என்னப்பா என்னிடம் பொய் சொல்லுகிறாய்! உன்னிடம் ஏது பவுன் நாணயம்? நீ வைத்திருந்த ஒரு பவுன் நாணயத்தைத் தான் போலீஸார் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள் என்று சொன்னுயே !" என்றுன் சேவகன்.

"ஐயா! அதில்தான் என் சாமர்த்தியம் இருக்கிறது. நான் அவர்களுக்குத் தெரியாமல் கொஞ்சம் பவுன் நாணயங்களை ஒளித்து வைத்திருந்தேன். இதோ பார்!" என்று தன்னிடமுள்ள பவுன் நாணயங்களைச் சேவகனுக்குக் காண்பித்தான் மால்கோஷ். பளபளவென்ற பவுன் நாணயங்களைப் பார்த்த அந்த ஆளுக்கு அவைகளைப் பெற ஆசை உண்டாயிற்று.

"எனக்கு இந்த இடத்தை விட்டுத் தப்பி ஓடுவதற்கு நீ உதவி புரிந்தால் இந்த நாணயங்கள் யாவும் உனக்கே. அது நிச்சயம்" என்றுன் மால்கோஷ். சேவகன் பலத்த யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

"சரி. நான் உன்னைத் தப்புவிக்கிறேன். ஆனுல் நீ சர்வஜாக்கிரதையாக வெளியேற வேண்டும். நீ தப்பின விதத்தைப் பற்றி யாரிடமும் மூச்சுக்கூட விடக் கூடாது" என்று கூறி, அந்தக் காசுகளை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டு சிறைச்சாலைப் புறத்துக் கதவுக்கு அருகில் சென்றுன்.

"இதோ பார். இந்தக் கதவைத் திறக்கிறேன். உடனே நீ வெளியே போய்விடு. இந்த மாந்தோப்பும் சிறைச்சாலையைச் சேர்ந்ததுதான். இங்கே யாரும் வரமாட்டார்கள். தோப்பில் வெகுதூரம் நடந்தால், முள்வேலியும் சிறு சுழல் கதவும் தென்படும். அதன் வழியாக நீ வெளியேறி ரஸ்தாவுக்குப் போய் விடலாம். பகல் சாப்பாட்டு வேளையாதலால் இப்பொழுது உன்னை யாரும் கவனிக்க மாட்டார்கள். உம். போ !" என்று கூறித் தோட்டக் கதவைத் திறந்தான். உடனே மால்கோஷ் வெளியே பாய்ந்து சென்று மாந்தோப்பை அடைந்தான். மறுகணம் சிறைச்சாலைத் தோட்டக் கதவை மூடிக் கொண்டு சேவகன் உள்ளே போய் விட்டான்.

மால்கோஷின் அதிர்ஷ்டவசமாக அந்த மாந்தோப்பில் மனித சஞ்சாரமேயில்லை. இருந்தாலும் மால்கோஷ் மரங்களிடையே சர்வ ஜாக்கிரதையாக நாலாபுறங்களும் பார்த்துக் கொண்டே ஓட்டமும் நடையுமாகச் சென்றுன். வெகுதூரம் சென்றதும் தோப்பின் மறு பக்கத்து வேலியும் சிறு சுழல் கதவும் தென்பட்டன. அதன் வழியாக மால்கோஷ் பெரிய ரஸ்தாவை





அடைந்தான். அப்புறம்தான் அவன் பர பரப்பு அடங்கியது. சற்று மெதுவாக நடக்க ஆரம்பித்தான்.

வேகமாக நடந்தும் ஓடியும் வந்ததினு லும், பசி எடுக்க ஆரம்பித்தது. தன் விதியை நொந்துகொண்டே நடந்தான்.

தூரத்தில் ஒரு சிறிய குடிசை அவன் கண்களில் தென்பட்டது. 'மினு மினு' வென்று ஒரு விளக்கும் தெரிந்தது. அதன் பக்கத்தில் ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள். மால்கோஷ் அவளிடம் சென்றான். தான் அவளுக்கு ஏதாவது இட்ட வேலைகளைச் செய்வதாகவும் அதற்குப் பதிலாக அவனது பசி தணியும் வண்ணம் ஏதாவது ஆகாரம் கொடுத்து உதவ வேண்டும் என்றும் கெஞ் சிக் கேட்டுக் கொண்டான்.

அந்தக் கிழவி, "ஐயா! எனக்கு ஒன்றும் நீ வேலை செய்ய வேண்டாம். பட்சணங்கள் விற்று அதில் வரும் லாபத்தை வைத்துக் கொண்டு ஜீவனம் செய்து வருகிறேன். இன்று எனக்குச் சரியான வியாபாரம் இல்லை. இந்தப் பட்சணங்கள் நாளைக்கு வைத்துக் கொண்டிருந்தாலும் வீணாகப் போய்விடும். நான் சந்தோஷமாக அவை களை உனக்குக் கொடுக்கிறேன். உன் பசி தணியும் வரையில் அவைகளைச் சாப்பிட்டு விட்டுப் போ" என்றாள். அவள் கொடுத்த தின்பண்டங்களைத் தின்று தன் பசியை ஆற்றிக் கொண்டான். தன் பையிலிருந்து சில பொன்நாணயங்களை வரவழைத்தான். அவைகளைக் கிழவியிடம் கொடுத்து, "அம்மா! என்னிடத்தில் வேறு சில்லறைக் காசுகள் இல்லை. இந்தப் பவுன் நாணயங் களை என்னுடைய அன்பு அளிப்பாக ஏற்றுக் கொள்" என்றான்.

கிழவி வாங்கிக் கொள்ள மறுத்தாள். மால்கோஷ் பிடிவாதமாக அவளிடம் கொடுத்து விட்டுச் சென்றான். பவுன் நாண யங்களை அடைந்த சந்தோஷத்தினால் மலர்ந்த ஏழைக் கிழவியின் முகம் மால் கோஷின் நினைவிலிருந்து போகவில்லை. 'இத்தகைய ஏழைகளுக்குப் பவுன்களைக் கொடுத்து அடிக்கடி உதவினால் என்ன?' என்று அவனுக்கு ஒரு எண்ணம் தோன் றியது. தன் எதிரில் வந்த பிச்சைக்காரர்க ளுக்குப் பவுன்களைக் கொடுத்தான். வரவர இது அதிகமாகி ஊர் முழுதும் அவனைப் பற்றியே பேசலாயினர்.

"யாரோ ஒருவன் ஊர் பேர் தெரியாத வன், பவுன் நாணயங்களாக ஏழைகளுக் குத் தர்மம் செய்கிறான். ஆனால் பாவம் தனக்கு அதை உபயோகப்படுத்திக்கொள்வ தில்லை. எந்த ஏழையின் வீட்டிலாவது சாப்பிட்டுத் தன் பசியை ஆற்றிக் கொள் கிறான்" என்று ஊரார் சொல்லிக் கொண்டார்கள்.

பவுன் நாணயங்களை ஏழைகளுக்குக் கொடுத்துக் கொடுத்து மால்கோஷின் கைகள் சளைத்து விட்டன. தன்னை எப் பொழுதும் சுற்றிக் கொண்டிருக்கும் ஏழை களின் கூட்டத்திலிருந்து தப்பித்து நிம்மதி யாக ஒரு இடத்தில் போய்த் தங்க வேண் டும் என்று நினைத்து, ஒரு நாள் தன் அருகில் ஒருவரும் இல்லாத சமயத்தில் மலை அடிவாரத்துக்குச் சென்றான்.

அங்கே பழைய கட்டடம் ஒன்று இருந்தது. அந்த இடத்துக்குப் போன பொழுது ஒருவரும் அந்தக் கட்டடத்தில் இல்லை. தனியாகச் சற்றுப் படுத்துத் தூங்கி னான். பிறகு மறுநாள் காலையில்தான் எழுந்திருந்தான். மால்கோஷ் தனியாக அங்கிருப்பதாக நினைத்தானே தவிர, வெகு நாட்களாக மூன்று திருடர்கள் அவனைப் பின்தொடர்வதை அவன் அறிந்துகொள்ள வில்லை. மால்கோஷிடம் உள்ள பவுன் நாணயங்களை எப்படியாவது களவாட வேண்டும் என்ற எண்ணத்துடன் அவர்கள் வந்தார்கள். சரியான சமயத்தை எதிர் பார்த்து அவர்களும் மால்கோஷுடன் மலை யடிவாரத்துக்கு வந்தார்கள்.

மறுநாள் காலையில் மால்கோஷ் எழுந் திருந்தவுடன் நாணயத்தை எடுத்தான். கட்டடத்துக்கு உள்ளே வந்த சூரிய வெளிச்சத்தில் அந்தப் பவுன் நாணயத் தின் பளபளப்பைக் கண்டு சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தான். நல்லசமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த மூன்று திருடர்களும் பழைய கட்டடத்துக்குள் நுழைந்தார்கள். அவர்கள் போட்டுக் கொண்டிருந்த உடுப்புகளையும் அவர்களது முகத்தையும் பார்த்தவுடன் மால்கோஷ் தனக்கும் தான் வைத்திருக்கும் பவுன் நாணயத்துக்கும் ஏதோ ஆபத்து வந் திருக்கிறது என்று நிச்சயம் செய்து கொண்டான்.

அந்த மூன்று



திருடர்களும் மால்கோஷின் மீது பாய்ந்து அவன் கையில் வைத்திருந்த பவுன் நாணயத்தைப் பிடுங்கிக் கொண்டார்கள்.

ஒரு திருடன் மால்கோஷ் அணிந்திருந்த கோட்டின் வலது பையில் கையை விட்டுப் பார்த்தான். அப்பொழுது மால்கோஷ் நடுங்கினான். எங்கே பவுன் நாணயங்கள் வந்துகொண்டே இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து விடுவார்களோ என்று பயந்தான். ஆனால் மால்கோஷின் அதிர்ஷ்டவசமாக வலது பையைப் பரிசோதித்த திருடனின் கையில் ஒரு பவுன் நாணயமும் அகப்படவில்லை. அப்பொழுது தான் மால்கோஷ் சந்தோஷமடைந்தான். "பையில் இருக்கிற மந்திர சக்தி எனக்குத் தான் உதவுகிறதே தவிர வேறு ஒருவருக்கும் உதவவில்லை. என்னுடன் படித்துக் கொண்டு எனக்கு இந்தச் சட்டையில் உள்ள மந்திர சக்தியைக் கொடுத்து உதவிய கிழவரின் சாமர்த்தியமே சாமர்த்தியம்!" என்று சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் மூன்று திருடர்களும் மால்கோஷைக் கோபத்துடன் பார்த்தார்கள்.

"டேய்! உனக்குச் சில நிமிஷங்கள் அவகாசம் கொடுக்கிறோம். பவுன் நாணயங்கள் உனக்கு எங்கிருந்து கிடைக்கின்றன என்று மாத்திரம் சொல்லி விடு. நீ யோசனை செய்யும் வரை நாங்கள் சற்று வெளியே போய் விட்டுவருகிறோம்" என்றார்கள். மால்கோஷ் தனக்கு ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிந்தான். உடனே தன் பையிலிருந்து பவுன் நாணயங்களை எடுத்தான். கட்டடத்தில் உள்ள சுவர்களில் பல வெடிப்புகள் காணப்பட்டன. வெடிப்புகள் இருந்த இடத்திலெல்லாம் ஒவ்வொரு பவுன் நாணயத்தையும் வைத்தான். பிறகு வாசல் பக்கம் வந்து திருடர்களைப் பார்த்து, "உள்ளே வாருங்கள்! எனக்குக் கிடைக்கும் தங்க நாணயங்கள் யாவும் இந்தக் கட்டடத்திலிருந்துதான் எடுத்து வருகிறேன். இந்தக் கட்டடத்துச் சுவர்களிலும், பூமியிலும் ஏராளமான பவுன் நாணயங்கள் இருக்கின்றன. இந்த இரகசியத்தை ஒருவருக்கும் சொல்லாமல் நீங்களே உங்கள் உபயோகத்துக்கு வைத்துக் கொள்ளுங்கள்" என்று பூமியிலும் சுவர்களிலும் பொருத்தப்பட்டிருந்த பவுன் நாணயங்களைச் சுட்டிக் காண்பித்தான்.

அதைப் பார்த்த திருடர்கள் சந்தோஷம் கொண்டார்கள். "பலே! பலே! உண்மையைச் சொல்லி விட்டாய். இனிமேல் நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம். நீ இங்கிருந்து போய் விடு!" என்றார்கள். மால்கோஷ் அவ்விடத்தை விட்டு வெகு வேகமாக ஓடினான். (தொடரும்)

தீர்க்கதரிசன வாக்கு :

## இளைஞர்களுக்கு

எங்கள் வாழ்நாளிலே நாங்கள் பெற்றுத் தருகிற சுதந்திரத்தின் அளவும் பண்பும் எப்படி இருந்த போதிலும், அதன் குறைபாடுகளை நீக்கிப் பரிபூரண சுதந்திரமாக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. அந்த லட்சியத்தை அஹிம்சா முறையில் அடைந்தீர்களானால் அது இந்தியா செய்த பெரும் பாக்கியமாகும். குழப்பமும் கலவரமுமின்றி அமைதியான முறையில் அடைந்தீர்களானால் அது பாரதத்தின் நல் அதிர்ஷ்டமாகும். உண்மையான அஹிம்சா முறையில் அந்தப் பூரண சுயராஜ்யத்துக்குப் பாடுபடுவது உங்களுக்குக் கிடைக்கக்கூடிய நல்ல வாய்ப்பாகும். அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றவுடன் அஹிம்சை முற்றுப் பெற்றுவிடாது. உண்மையில் அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்ற பிறகுதான் நாம் செய்ய வேண்டிய பெரும் காரியங்கள் இருக்கின்றன! நமது அஹிம்சைக்குப் பலப்பல சோதனைகள் நிமிஷத்துக்கு நிமிஷம் ஏற்படலாம். சுதந்திர பாரதத்தின் சந்தோஷ வாழ்வு, அஹிம்சைக் கொள்கையில் நாம் வைக்கும் பூரண நம்பிக்கையையே பொறுத்திருக்கிறது. எவ்வளவுக் கெவ்வளவு அஹிம்சையில் நம்பிக்கை கொண்டிருக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு பாரதநாட்டு மக்களின் வாழ்வில் குதூகலம் இருக்கும். பள்ளிக்கூடங்களில் குழந்தைகளை அடிப்பது நிறுத்தப்படவில்லை என்றால், கல்வித் துறையில் பலாத்காரமும் ஹிம்சையும் இருக்கிறது என்று பொருள். அதை நீக்கவேண்டும். குடும்ப விவகாரங்களில் காணப்படும் ஹிம்சையை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். தொழில் துறைகளிலிருக்கும் ஹிம்சையை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். சமுதாய, தேசிய வாழ்வில் — ஒவ்வொரு துறையிலும் — காணப்படும் ஹிம்சையை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். அஹிம்சா நெறி என்பது, வாழ்க்கையில் எல்லாவிதமான தோற்றங்களில் வரும் ஹிம்சையை எதிர்த்துத் தொடர்ந்து வாழ்க்கை முழுதும் போராட வேண்டிய ஒரு முறையாகும். 16-12-1941



"டாக்டர், சீக்கிரம் வாருங்கள்..." அவருடைய ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிள் டாக்டரை சில நிமிஷத்திலே அங்கு எடுத்துச் செல்லுகிறது. குறைந்த அளவு பெட்ரோலில் ஓடக்கூடிய ராயல் என்பீல்ட் பணத்தையும், நேரத்தையும் மிச்சப்படுத்துகிறது.

## ஒவ்வொரு நிமிஷமும் மிக்க அவசியமாக இருக்கும்பொழுது

# ராயல் என்பீல்ட்

**என்ஜின் 150**

### மோட்டார் சைக்கிளுக்கு ஈடு இணை வேறில்லை

- ★ புதிய உயர் ரக ஸ்பிரிங்குகளுடன் கூடிய போர்க் எவ்விதமான தரையிலும் சுகமாகவும் பத்திரமாகவும் பிரயாணம் செய்ய உதவுகிறது.
- ★ துரிதமாகவும், பத்திரமாகவும்செல்வதற்குப் பெரிய சக்கரங்கள் உதவுகின்றன. பிரயாணம் செய்ய உல்லாசமாகவே இருக்கிறது.

நேரத்தை மிச்சப்படுத்த உங்கள் சொந்த ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிள்தான் சிறந்தது. ஜன நெருக்கடியான ரயில், பஸ் இவற்றுக்குக் காத்துக் கிடக்க வேண்டியதில்லை. குறித்த காலத்தில் அலுவல்களைச் செய்ய முடியாதோ என்று பயப்பட வேண்டியதில்லை. மேலும் ராயல் என்பீல்ட் என்ஜைன் 150 ஒரு காலனுக்கு சுமார் 130 மைல்கள் ஓடுகிறது. அதனால் உங்கள் பணமும் மிச்சப்படுகிறது.

தவிர இந்த உன்னத மோட்டார் சைக்கிள் அளிக்கும் எல்லா அனுகூலங்களையும் கவனியுங்கள். அதிகமான உறுதி, சுலபமாக இயக்குவது, அதிர்ச்சியைத் தாங்கும் விசேஷ அமைப்புகள், அதிக ரோட் கிளியரன்ஸ், நிலையான பிரயாணத்திற்கு ஏற்ற பெரிய சக்கரங்கள், இலகுவான ஓட்டம், திறமையான பிரேக் பிடிப்பு.........மறுபடி விற்கும்போது மிக மிக அதிகமான விலை மதிப்பு.

பல இடங்களுக்குப் போகவேண்டிய ஒருவருக்கு, ராயல் என்பீல்ட் என்ஜைன் 150 போல் வேறொன்றும் சிறந்ததல்ல என்பதை நீங்களும் ஒப்புக்கொள்வீர்கள்.

## அலுப்பற்ற பிரயாணத்திற்கு — ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிள்

| படிப்படியாகத் தயாரிப்பவர்கள் | பூரண விற்பனை ஏஜெண்டுகள் |
| --- | --- |
| **என்பீல்ட் இந்தியா லிமிடெட்** | **மதராஸ் மோட்டார்ஸ் பிரைவேட் லிட்.** |
| மதராஸ் - 19 | மதராஸ் - பெங்களூர் - டில்லி |

# மாலவல்லியின் தியாகம்

## அத்தியாயம் 23

## ஓலை சொன்ன செய்தி

காஞ்சி பல்லவ மன்னன் அரண்மனையில் மந்திராலோசனை சபை கூடியிருந்தது. மந்திரி மண்டலத்தாரும், முக்கியமான மக்கள் பிரதிநிதிகளும் அமர்ந்திருந்தனர்;

"தஞ்சை முத்தரையர் கொடும்பாளூர் மீது படையெடுக்கத் தீர்மானித்து நம்மையும் அதற்கு உதவி செய்யத் தூது அனுப்பியிருக்கிறார். நமது படைகளும் ஆயத்தமாயிருப்பதாகச் சேனாபதி கூறினார். இருக்கட்டும். சிம்மவர்மன் எங்கே?" என்று மன்னன் நந்திவர்மன் கேட்டதும் சபையில் உள்ளவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.



சேனாபதி உதயசந்திரன் எழுந்து, "மகாராஜா! சிம்மவர்மனும் கலங்கமாலரையரும் இரண்டு நாட்களுக்கு முன்பு குதிரைகளில் ஏறிக்கொண்டு எங்கோ சென்றனர். நல்ல நிசி வேளையில் அவர்கள் புறப்பட்டதனால் எனக்கு ஏதோ சந்தேகம் ஏற்பட்டது. உடனே நம் ஒற்றர்களை அனுப்பி அவர்கள் அறியாவண்ணம் அவர்களைப் பின் தொடர்ந்து செல்ல உத்தரவிட்டேன். ஒற்றர்கள் இன்னும் திரும்பவில்லை" என்று வணக்கமும் கம்பீரமும் கலந்த குரலில் கூறினான்.

"அப்படியா? சிம்மவர்மனின் போக்கு வரவர நம்பிக்கை யளிப்பதாக இல்லை. அவனிடம் உண்மை அன்பு பாராட்டும் என்னை அவன் வெறுப்பதன் காரணம் எனக்குத் தெரியாமல் இல்லை. ராஜ்ய ஆதிக்கத்தில் அவனுக்கு ஆசை விழுந்து விட்டது. அதுதான் என்னிடம் குரோதமாக வளர்ந்திருக்கிறது. நான் இதை நன்கு அறிந்தும் அவனிடம் நான் வெளிப்படையாக எதையும் குறிப்பிட்டுப் பேசினதில்லை. அவன் நமது அரசாங்கத்துக்கு விரோதமாக ஏதாவது சதி செய்து கொண்டிருப்பான்."

"அரசே! போதாக்குறைக்கு அந்த மகாபாவி கலங்கமாலரையனும் அவனோடு சேர்ந்து கொண்டிருக்கிறான். இனிமேல் அவர்களிடமிருந்து நல்லது எதையும் எதிர்பார்க்க முடியாது!" என்றான் சேனாபதி.

இந்தச் சமயம் கொடும்பாளூரிலிருந்து தூதன் வந்திருப்பதாக அரண்மனைக் காவலன் ஒருவன் சேனாபதியிடம் வந்து சொன்னான். சேனாபதி அவனை உள்ளே அழைத்து வரும்படி சொல்லியனுப்பினான்.

கொடும்பாளூரிலிருந்து வந்த தூதன் மிகவும் மரியாதையாக மந்திராலோசனை மண்டபத்துக்குள் வந்து மன்னனையும் மற்றுமுள்ள பிரமுகர்களையும் வணங்கினான். பிறகு ஒரு ஓலையை எடுத்துச் சேனாபதியிடம் கொடுத்தான். சேனாபதி அவனை ஒரு ஆசனத்தில் அமரும்படி சுட்டிக் காட்டிவிட்டு ஓலையைப் பிரித்துப் படிக்கலானான்:



கி. ரா. கோபாலன்

"மேன்மை தங்கிய பல்லவ சக்கரவர்த்தி நந்திவர்ம மகாராஜா அவர்களுக்கு.

மிகவும் முக்கியமான ஒரு விஷயத்தைத் தங்கள் கவனத்துக்குக் கொண்டுவரவேண்டும் என்னும் ஆவலில், கொடும்பாளூர் ஆதித்தன் வணக்கத்துடன் எழுதுவது :

நீதி நெறி வழுவாத ஆட்சியினால் நெடுந்தூரம் வரையில் புகழ் பெற்று விளங்கும் மகாராஜாவாகிய தங்கள் ராஜ்யத்தில், சதிகாரர்கள் வலுப்பெற்று விளங்குகிறார்கள் என்னும் விஷயம் தங்களுக்கு ஒருவேளை தெரியாமல் இருக்கலாம். தங்கள் சகோதரர் சிம்மவர்மர் தங்களுக்கே கேடு சூழ நினைத்துப் பலவிதமான சதிக் காரியங்களில் ஈடுபட்டு வந்திருக்கிறார். கடைசியாக அவர் எங்கள் ராஜ்யத்துக்கு வந்து, தங்களுக்கு எதிராக எங்கள் உதவியைக் கோரினார். கலங்கமாலரையரும் சோழ அரசுக்கு எதிராக எங்கள் உதவியைக் கோரி இங்கு வந்தார். இருவருடைய சதி உள்ளங்களும் அவர்களையே கவிழ்த்து விட்டன. இங்கே அவர்கள் சிறையில் இருக்கிறார்கள். எங்கள் அருமை நண்பர் பூதுகரும் அந்த முயற்சியில் தான் முழுமூச்சுடன் ஈடுபட்டு வருகிறார். அவர் மீதும் சதிக் குற்றத்தைச் சுமத்தக் கலங்க மாலரையரும் சிம்மவர்மனும் பெரு முயற்சி செய்தனர். அறிஞர் பூதுகருக்குத் தங்களிடம் மதிப்பும் மரியாதையும் உண்டு. தங்களை நேரில் சந்திக்கச் சந்தர்ப்பமும் சூழ்நிலையும் இடம் தராததனால் அவர் வரவில்லை.

பூதுகர் மேலுள்ள ஆத்திரத்தைப் பல்லவ ராஜ்ய இசைக் கணிகையான தேனார்மொழியாள் மீது காட்டி அநியாயமாக அவளைச் சிறைப்படுத்தியிருக்கின்றனர். உண்மையை விசாரித்து நியாயம் வழங்க வேண்டியது தங்கள் கடமை.

நானும் என் சகோதரனும் பல்லவ சக்கரவர்த்தியினிடமும் அவர் ஆட்சியிலும் மதிப்பும் மரியாதையும் கொண்டிருக்கிறோம். எங்களுக்கு யார் மீதும் ஆதிக்கம் செலுத்தும் நோக்கம் இடையாது. யாரையும் சூழ்ச்சியினால் அடக்கியாள விரும்பவில்லை. பழமையான சோழ ராஜ்யம் பழையாறை நகருக்குள்ளேயே மங்கிப் போகாமல் வளம் பெற்றுத் திகழ வேண்டும் என்று விரும்புகிறோம். அந்த விருப்பத்தையும் நாங்கள் தவறான பாதையில் சென்று அடைய ஒரு சிறிதும் விரும்பவில்லை. அதன் காரணமாக நாங்கள் தங்களுடைய மனக் கசப்பையும் பெற விரும்பவில்லை. சோழ அரசை மீண்டும் நிறுவி, அதற்கு உரிமையாளனுகிய விஜயாலயனுக்கு முடி சூட்டுவதன் மூலம் தங்கள் பேரரசுக்கு நாங்கள் எத்தகைய நிந்தையும் நினைக்கவில்லை. தீங்கு செய்யவும் முடியாது என்பது தாங்கள் அறிந்ததே.

தங்களுடன் நட்புப் பூணவும் நல்லுறவைப் பேணவும் பேரார்வத்துடன் காத்திருக்கிறோம். தாங்கள் இங்கு விஜயம் செய்து, பழை



யாறையில் நடக்கவிருக்கும் சோழ அரசு நிறுவும் மகத்தான விழாவுக்கும் ஆசி கூற வேண்டும் என்று பெரிதும் விழைகிறோம்.

தங்கள்
வணக்கமுள்ள
ஆதித்தன்."

ஓலையைப் படித்து முடித்ததும் சபையில் சந்தோஷ ஆரவாரம் எழுந்தது. சக்கரவர்த்தி நந்திவர்மன் முகத்திலும் மகிழ்ச்சி பொங்கியது.

"சேனாபதி! எனக்கு வெகு நாட்களாகக் கொடும்பாளூர்ச் சகோதரர்களிடம் பிரியமுண்டு. அவர்கள் தந்தை பூதிவிக்கிரம கேசரி ராஜ தந்திர நிபுணர். நம்மிடம் பரம விசுவாசமுள்ளவர். சிம்மவர்மன் அவர்கள் மீது ஏதாவது கோள் புனைந்து கூறிக் கொண்டிருந்தான். அதனால் நான் கூடச் சிறிது மனத்தில் மாறுபாடான அபிப்பிராயம் கொள்ள நேர்ந்தது. இந்த ஓலை அவர்களுடைய மனப்பான்மையை நன்கு எடுத்துக் காட்டி விட்டது. அவர்களுடைய அழைப்பை ஏற்றுக் கொள்ளலாம் என நினைக்கிறேன்" என்று கூறிச் சக்கரவர்த்தி எல்லோருடைய முக பாவங்களையும் கவனித்தார்.

"அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டும்!" எல்லோரும் ஒருமுகமாக அபிப்பிராயம் கூறினார்கள்.

"மகாராஜா! நல்ல சமயத்தில் இந்த ஓலை வந்து நமக்கு உதவியது. நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் நாமாகச் சம்பந்தம் ஏற்படுத்திக் கொண்டு போருக்குப் போவது அரச தர்மம் அல்ல என்பது மட்டும் அல்ல. அது நமது பரந்த பல்லவ சாம்ராஜ்யத்துக்கே இழுக்குக் கற்பிப்பதும் ஆகும். தங்கள் மூதாதையர்களெல்லாம் வீரத்திலும் தீரத்திலும் நேர்மையிலும் சிறந்து விளங்கினார்கள். அவ்வழி வந்த தாங்கள் தங்கள் பரம்பரைக் கௌரவத்துக்குக் குந்தகம் விளைவிக்கும் விதத்தில் எந்தக் காரியத்தையும்செய்யக் கூடாது என்பதே எனது அபிப்பிராயம். நான் இன்று இதைச் சபை கூட்டியதும் எடுத்துக் கூறலாம் என்று தீர்மானித்திருந்தேன். நம்மிடம் நேரடியாகப் பகைமையே சிறிதும் கொள்ளாத கொடும்பாளூர் மீது நாம் படை எடுத்துச் செல்வது முறையல்ல. மேலும், தஞ்சை மன்னர் முத்தரையரின் ஆட்சிக்கு வல்லரசுகளினால் ஏதாவது அபாயம் வருவதாயிருந்தால் நாம் படையெடுத்துச் சென்று அவருக்கு உதவியாயிருப்பது நியாயம். இப்பொழுது சோழ அரசு அமைவதில் நமக்கு ஒன்றும் மாறுபாடான அபிப்பிராயம் இல்லை. தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளி கொண்டாருக்காக நாம் எந்த ஒரு நாட்டின் மீதும் படையெடுத்துச் செல்வது உசிதமல்ல. புலிப்பள்ளி கொண்டார் தம் சுயநலத்துக்கு நம்மைப் பயன் படுத்திக் கொள்ளுவதை நாம் அங்கீகரிக்க முடியாதல்லவா!" என்று நிதானமாகவும் உறுதியாகவும் முதல் அமைச்சர் கூறவே சபையோர் அதை ஒருமுகமாக வரவேற்றனர்.

முதல் அமைச்சரின் இந்தப் பேச்சு மன்னன் நந்திவர்மனுக்கு மிகவும் மகிழ்ச்சி தருவதாயிருந்தது.

"முதல் அமைச்சரே! உமது அபிப்பிராயம் மிகவும் சரி. நான் பரிபூரணமாக ஆதரிக்கிறேன்!" என்று சந்தோஷத்துடன் கூறினார்.

"...அப்படியானால் கொடும்பாளூரை நோக்கிப் படையெடுத்துச் செல்வதாக இருந்த யோசனையை......" என்று சேனாபதி சற்றுத் தயங்கினார்.

"உடனே நிறுத்தி விடவேண்டியதுதான். தஞ்சை அரசருக்கு உடனே இது





விஷயமாக ஓலை அனுப்பி விடுங்கள்!'' என்று கூறினார் சக்கரவர்த்தி.

''அதுதான் நியாயமான காரியம். சக்கரவர்த்தியின் பெருமைக்கு அதுதான் உகந்தது!'' என்று சபையிலிருந்த பிரமுகர்கள் ஒருமுகமாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர்.

* * *

தஞ்சை முத்தரையரின் சைன்யம் புலிப்பள்ளி கொண்டார் மகன் கோளாந்தகன் தலைமையில் பேரார வாரத்துடன் புறப்பட்டது.

அலங்கரிக்கப்பட்ட மத்தகஜங்கள் முன்னாலே கம்பீரமாகச் செல்ல, அவற்றுக்குப் பின்னாலே அணி அணியாக ஆயுதம் தாங்கிய வீரர்கள் அழகிய அசுவங்களில் ஆரோகணித்துச் சென்றனர்.

வீரர்கள் போட்ட ஆரவாரம் வானளாவ எழுந்தது. குதிரைகளின் குளம்படிகளிலிருந்து கிளம்பிய புழுதி வான வீதியையே மறைத்தது.

வேல்களும் வாள்களும், ஈட்டிகளும் காலை வெய்யிலில் பளிர் பளிர் என்று மின்னின.

போருக்குச் செல்லும் புரவிகள் கனைக்கும் பேரொலியும், யானைகள் பெருங்கூட்டமாகப் பிளிறும் ஓசையும், காலாட்படைகளின் வீர வாசகங்களும் வழி நெடுக எதிரொலி யிட்டன.

தஞ்சையை விட்டுப் புறப்பட்ட படை காட்டுப் பகுதியில், அஸ்தமன வேளையில் தங்கியது. கூடாரங்கள் போடப்பட்டன.

சூரியன் மலைவாயில் விழுந்து. வானம் முழுதும் செந்நிறம் பூசிக் காணப்பட்டது. அந்தி மயங்கும் வேளையில் வீரர்கள் யாவரும் நெடும் வழி நடந்த அலுப்புத் தீர, உற்சாகமாகப் பாட்டுப் பாட ஆரம்பித்தனர். ஒருபுறம் ஆயிரக் கணக்கான வீரர்களுக்கு அறுசுவை உண்டி தயாராகிக் கொண்டிருந்தது.

வீரர்கள் யாவரும் ஆவலோடு பல்லவ சைன்யத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். சேனாபதிக்கோலங்கொண்ட கோளாந்தகன் அமைதியில்லாமல் இங்குமங்கும் நடப்பதும் பெருமூச்சு விடுவதுமாக இருந்தான்.

அவன் இந்தப் பெரும் போரில் எப்படியாவது தனக்கு வெற்றி கிட்ட வேண்டுமே என்று மனத்துக்குள் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தான். கொடும்பாளூர்ச் சகோதரர்கள் கலங்கமாலவரையரையும் சிம்மவர்மனையும் எப்படியோ சாமர்த்தியமாகச் சிறையில் அடைத்து விட்டார்களே என்று கோளாந்தகன் மனசுக்குள் வியந்து கொண்டிருந்தான். அத்தகைய ராஜதந்திர சாமர்த்தியம் வாய்ந்த கொடும்பாளூர்ச் சகோதரர்களிடம் எப்படிச் சண்டையிட்டு வெல்லப் போகிறோம் என்று அவன் மனத்துக்குள் சிறிது அச்சம் தலைகாட்டாமலில்லை. அவனது அச்சத்துக்கு ஏற்றாற்போல், பல்லவ ராஜ்யத்தின் உதவிப்படை ஏற்கெனவே குறிப்பிட்டிருந்தபடி இன்னும் இந்த இடத்துக்கு வந்து சேரவில்லை. நேரம் செல்லச் செல்லக் கோளாந்தகன் உள்ளத்தில் பதை பதைப்பும் இதயத் துடிப்பும் அதிகமாயின. அவனுடைய நடையில் முன்பு இருந்த மிடுக்கும் கம்பீரமும் இப்பொழுது இல்லை. மாலை நேரம் போய் இரவு வந்து விட்டபடியால் ஏராளமான தீவர்த்திகள் மூலைக்கு மூலை கொழுந்து விட்டெரியச் செந்நிற ஒளி பரவியது. தீவர்த்திகளிலிருந்து கிளம்பிய கரும்புகை வான மண்டலம் வரையில் சென்று, உதய சந்திரனையே கருந் திரையினால் மறைக்க முயன்றது.

தஞ்சை மன்னர் மாறன் முத்தரையர் கொடும்பாளூர் மீது படையெடுக்கத் துணிந்ததற்கு முக்கிய காரணம், பல்லவ சைனியம் தாராளமாக உதவிக்கு வருகிறது என்று தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளி கொண்டார் உறுதியாகச் சொன்னதுதான். பல்லவ சைனியத்தின் உதவியில்லா விட்டால் கொடும்பாளூர்க் கோட்டையை முற்றுகையிடுவது பகற்கனவாகி விடும் என்பது முத்தரையருக்கு நன்கு தெரிந்ததுதான். கொடும்பாளூர்க் கோட்டையை முற்றுகையிட்ட பெருமை தமக்குக் கிடைக்க வேண்டும் என்னும் அற்ப ஆசை வெகு நாட்களாக முத்தரையருக்கு உண்டு. முத்தரையர் உள்ளத்தில் இந்த ஆசை விழுந்ததற்கு மற்றொரு காரணம் அவர் மகன் இளந்திரையன் உள்ளத்தில் கொடும்பாளூர் இளவரசி அனுபமாவிடம் அத்தியந்த

# பார்த்தவுடன் நம்பிக்கை—

## அவர்கள் ட்ரேயோபேன்* அச்சடித்த பைகளில் காணும் பொருள்களை வாங்குவது நிச்சயம்!





அச்சடித்த ட்ரேயோபேன் பைகள் விற்பனையை அதிகரிக்கும் என கடைகாரர்களும் பொருள் உற்பத்தி செய்பவர்களும் கருதுகிறார்கள். சாமான் வாங்குபவர்கள் ட்ரேயோபேன் பைகளை விரும்புகிறார்கள். ஏனெனில் அவை சுத்தமானவை. சௌகரியமானவை. சீதோஷ்ணத்தால் பாதிக்கப்படாதவை. இப்பைகள் கடைக்காரர்களின் பாக்செய்யும் நேரத்தையும், தாள்கள் வீணாவதையும் குறைக்கின்றன.

இந்தியாவில் முதன்முதலாக ட்ரேயோன்ஸ் கவர்ச்சிகரமான இப்பைகளை பல நிறங்களிலும் அளவுகளிலும் அளிக்கிறார்கள். 12 ⅜" X 23 1/32" வரை. உங்கள் பெயர் அச்சிடப்பட்ட பிரத்தியேகமான பைகளுக்கு இன்றே ஆர்டர் செய்யுங்கள்.

**ட்ரேயோபேன்*** அச்சடித்த பைகள்

மலிவானவை!
சுத்தமானவை!
சௌகரியமானவை!

* ட்ரேயான்ஸ் ட்ரான்ஸ்பெரன்ட் தாளின் புதிய பெயர்

தயாரிப்பாளர்கள்:

TRAYONS **தி திருவாங்கூர் ரேயன்ஸ் லிமிடெட்.,**

ஃபாக்டரி: ரேயான்புரம் போஸ்ட், கேரளம்

சேல்ஸ் ஆபீஸ்: 2/6, செகண்ட் லேன் பீச், சென்னை-1

பிரேமைத் தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்ததுதான்.

இளந்திரையன் உள்ளத்தில் அனுபமாவுக்குத் தனி இடம் இருந்தது. அவளைத் தான் மணந்து கொள்ள வேண்டுமானால் அவளுக்கும் தன்னை மணந்து கொள்ளும் நோக்கம் இருக்க வேண்டுமே என்னும் ஒரு சாதாரண உண்மை அந்த மந்த மதியீனனுக்குத் தெரியாமல் இருந்தது தான் அதிசயம்.



போர்க்கோலம் கொண்டிருந்த மூத்தரையர் மகன், இளந்திரையன் அடிக்கடி வாளை உருவுவதும் மீண்டும் உறையில் இடுவதுமாக இருந்தான். திடீரென்று உருவிய வாளைச் சுழற்றி எதிரிகளை மாய்ப்பதுபோல் உறுமிப் பாய்வான்; மறுகணம் எதிரிகளைக் கண்டு பயந்தவன்போல் மருண்டு வாளைக் கீழே போட்டுவிட்டு ஓட்டம் பிடிப்பான்.

இம்மாதிரி தருணத்தில், குதிரைக் குளம்பொலி 'டக் டக் டக் டக்' என்று கேட்டது. வீரர்கள் யாவரும் பல்லவ சைன்யம் உதவிக்கு வந்து கொண்டிருப்பதாக நினைத்தார்கள். உடனே அவர்களிடையே ஒரு உற்சாகம் காணப்பட்டது. கோளாந்தகனின் நடையில் சோர்வு நீங்கி ஒரு பரபரப்பு ஏற்பட்டது. உடைகளை ஒரு முறைக்குப் பல முறைகள் சரிசெய்து கொண்டு விப்மித நடை போட்டான். ஆனால் ஒரே ஒரு குதிரை தான் வெகு வேகமாக வந்தது. சிம்மக் கொடியுடன் வந்ததிலிருந்து பல்லவ வீரன் என்று தெரிந்தது.

அவன் நேரே சேனாபதி கோளாந்தகனிடம் சென்று குதிரையை விட்டு இறங்கி மிகவும் மரியாதையுடன் ஒரு ஓலையை அவனிடம் கொடுத்தான். தீவர்த்திகளின் ஒளியில் அந்த ஓலையை வாங்கிப் படித்த கோளாந்தகன் முகம் வெளிறியது.

உடனே இளந்திரையனும் மற்ற வீரர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டனர்.

"வீரர்களே! பெரிய ஏமாற்றத்தில் நாம் இப்பொழுது சிக்கிக் கொண்டிருக்கிறோம். பல்லவ சைன்யம் நமக்கு உதவிப் படையாக வரவில்லை. பல்லவ சக்கரவர்த்தி பழையாறை சென்று விஜயனுக்கு முடிசூட்டி வைக்க இசைந்து விட்டாராம்" என்று பலத்த குரலில் கோளாந்தகன் கூறினான்.

உடனே சேனை வீரர்களிடையே மாபெரும் ஆரவாரம் எழுந்தது. வீர வாசகங்களைப் பேசி வீர நடை போட்டுக் கொண்டு வந்த வீரர்கள் அனைவரும் சோர்ந்து விட்டனர்.

"வீரர்களே! நாம் இப்பொழுதே, இரவுக்கு இரவே நம் தலைநகரை நோக்கிச் சென்றுவிட வேண்டியதுதான். பல்லவர் படை நமக்கு உதவிக்கு வராததுடன், பல்லவ சக்கரவர்த்தி விஜயனுக்குப் பட்டம் சூட்டிவைக்க இசைந்திருக்கிறார் என்பது நமக்கெல்லாம் அதிர்ச்சி தரும் செய்தி. பொழுது விடிந்த பின்பு நாம் புறப்பட்டோமானால், எதிரிகளை நினைத்து, பயந்து பின்வாங்குவதாக மக்கள் நினைத்து விடக்கூடும். அதற்கு நாம் இடங் கொடுக்கக்கூடாது. உடனே சத்தடி செய்யாமல் புறப்பட்டுவிட வேண்டும்" என்று சேனாபதி கோளாந்தகன் கூறவே சேனைவீரர்கள் அனை

*ராஜாஜியின் மணிமொழி*

## கலைச் சொற்கள்

கணித முழுவதையும் பல நூற்றாண்டுகளுக்கு முன் வேறு பாஷைக் கலப்பின்றி உலகத்துக்கு அளித்த இந்திய நாடானது. ஊரூராய் அலைந்து மறுபடியும் தாய் வீட்டுக்கு அந்தக் கலை திரும்பி வந்த காலத்தில், 'உனக்கு உடுக்க இங்கே ஆடையில்லை; பிற தேசத்தாருடைய உடுப்புகள் அணிந்து தான் நீ இங்கே இருக்கலாம்' என்கிறது. என்ன வெட்கக்கேடு! இதுவே வேறு பல சாஸ்திரங்களின் நிலையும். எல்லாக் கலைகளுக்கும் போதிய மொழிச் செல்வம் நம் தாயண்டை உள்ளது. தமிழும் சம்ஸ்கிருதமும் சேர்ந்து உலகத்தையே அளக்கலாம். நம் நாட்டுக்குப் பழக்கமான உடை உடுத்தினால் தான் கலைகளைக் கண்டு பயப்படாமலும் திகைக்காமலும் நம் நாட்டு மக்கள் அவைகளண்டை நெருங்கிப் பழகுவார்கள்; பயனும் அடைவார்கள்.

வரும் உடனே புறப்படுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யலாயினர்.

அடிக்கப்பட்ட கூடாரங்கள் துரித கதியில் பிரிக்கப்பட்டன; களைத்துப் போய் இளைப்பாறிக் கொண்டிருந்த குதிரைகளுக்குச் சேணங்களைப் பூட்டி வீரர்கள் புறப்படலானார்கள்.

அசைந்தாடிக் கொண்டு புல்லையும் தழையையும் தின்று கொண்டிருந்த யானைகளை அவற்றின் பாகர்கள் உசுப்பி விட்டுக் கொண்டிருந்தனர்.

இந்தச் சமயத்தில், வெகு வேகமாக ஒரு குதிரை வீரன் அங்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்ட சேனாபதி கோளாந்தகன், பரபரப்புடன் அவனிடம் சென்றான்.

"சேனாபதியவர்களே! மதுரையிலிருந்து பாண்டியர் சைன்யம் கொடும்பாளூருக்கு உதவிப் படையாகச் செல்கிறது. இந்தச் செய்தி நம் அந்தரங்க வேவுகாரர்களின் மூலம் எனக்குக் கிடைத்தது. அது பெரிய சைன்யமாம்......!" என்று கூறினான் அக் குதிரை வீரன்.

"அப்படியானால் நாம் பின்வாங்கச் சிறிதும் தயங்கக் கூடாது. இனித் தஞ்சை மண்ணை மிதித்த பிறகுதான் மற்ற யோசனைகளெல்லாம்!" என்று கூறிவிட்டு, சேனை வீரர்களைச் சீக்கிரம் புறப்படும்படி கட்டளையிட்டான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் வீரர்கள் தஞ்சையை நோக்கிப் புறப்பட்டனர்.

இரவு வேளையில் நிலவொளியில், யானைகளும், குதிரைகளும், வாளேந்திய வீரர்களும் சென்றது ஏதோ கனவு உலகத்தில் நிகழும் காட்சியைப் போல் தோற்றமளித்தது. (தொடரும்)

# அறிவுக்கு விருந்து

பியாரிலால்

அன்று திங்கட்கிழமை; வாரந்தோறும் காந்திஜி மௌன விரதம் அனுஷ்டிக்கும் தினம். எனவே, காந்திஜி தாம் கூறுவதைத் துண்டுக் காகிதங்களில் எழுதி சம்பாஷணையை நடத்தி வந்தார். காந்திஜிக்கும் காங்கிரசின் மாபெரும் தலைவரான ராஜாஜிக்கும் சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது.

ராஜாஜி சேவாக் கிராமத்துக்கு வந்து சிறிது காலம் தம்முடன் தங்கியிருக்க வேண்டும் என்பது காந்திஜியின் ஆசை. தமது ஆசைக்கு ராஜாஜி இணங்கும்படி செய்யக் காந்திஜி முயற்சி செய்து கொண்டிருந்தார்;

ராஜாஜி: 30-ந் தேதிக்குள் நான் சேவாக் கிராமத்துக்கு வரச் சௌகரியப்படலாம்.

காந்திஜி: அப்படியானால் நீங்கள் கூறும் கெடுவுக்குள் நான் உங்களை எதிர்நோக்கிக் கொண்டிருப்பேன்.

ராஜாஜி: தங்கள் விருப்பப்படியே.

காந்திஜி: 'உங்களை எதிர்நோக்கிக் கொண்டிருப்பேன்' என்றால் என்ன அர்த்தம்?

ராஜாஜி: சிற்சில சமயங்களில் அபாயங்களைக்கூட எதிர்நோக்கிக் கொண்டிருப்பது உண்டு.

காந்திஜி: அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன். அந்த அபாயத்தைக் கூட நான் விரும்புகிறேன். பல விஷயங்களை யொட்டி நான் உங்களுடன் குறிப்புகளை (கருத்துகளை)ப் பரிமாறிக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ராஜாஜி: அதற்குள் நாம் இருவரும் நம் குறிப்புகளில் சிலவற்றை மறந்து விடுவோம் என நம்புகிறேன். பிறகு பரிமாறிக் கொள்வதற்கு எதுவுமே இராது.

காந்திஜி: அப்படியானால் நாம் இருவரும் சேர்ந்து உடம்பு உப்பும்படி சிரிப்போமே.

பிறகு சம்பாஷணை உப்பில்லாத உணவு பற்றித் திரும்பியது.

காந்திஜி: நான் தென்னாப்பிரிக்காவில் பல ஆண்டுகள் வரையில் உப்பில்லாமல் வாழ்ந்திருக்கிறேன். இங்கு நான் அந்த விதியை மாற்றிக் கொண்டேன். எனினும் மேற்கொண்டு பரிசீலனை செய்ததன் மீது மறுபடியும் உப்பில்லா உணவுக்கே வந்து விட்டேன்.

ராஜாஜி: உப்பில்லாப் பத்தியம் இருக்கும்படியான நிர்ப்பந்தத்துக்கு ஆளானோர், உப்பு வேண்டும் என்ற இயற்கையான ஆசையைத் தீர்த்துக் கொள்வதற்காக சுவர்களை ருசி பார்ப்பது உண்டு; குழந்தைகளைப் போல் மண்ணைத் தின்ன முற்படுவதும் உண்டு.

காந்திஜி: அது அவர்களுக்கு நல்லதுதான்; சுவர்கள் அதிக சுத்தமாக இருக்கும்! இது மாதிரியான பேச்சுத்தான், நாம் சேவாக் கிராமத்தில் மனம் விட்டு இஷ்டப்படி சிரிப்பதற்குப் பூர்வாங்கமாகும்.

இச்சமயத்தில் மணி ஒன்பதரை ஆயிற்று; காந்திஜி தூங்கச் செல்லுவதற்கு நேரமாகி விட்டது.

காந்திஜி: நான் உங்களை நேசிக்க வேண்டுமாயின், இப்போதே நான் உங்களை விட்டுப் பிரிந்து செல்ல வேண்டும்.

காந்திஜியும் ராஜாஜியும் கூடிப் பேசுவதை எல்லோரும் எப்போதும் ஆவலுடன் எதிர்பார்ப்பது வழக்கம். ராஜாஜியுடன் பேசும் சந்தர்ப்பத்தைக் காந்திஜியே மிகுந்த ஆர்வத்துடன் எதிர்பார்ப்பார். அவர்கள் எப்போது சந்தித்தாலும் அது புத்தி சாதுர்யம், விவேகம், சிறந்த நகைச்சுவை - முதலியவை நிறைந்த விருந்தாகவே இருக்கும்;


இருட்டு நேரங்களில்
உங்களுக்கோர்
வழிகாட்டி
BRIGHT LIGHT
LONG LIFE
எஸ்ட்ரேலா
எஸ்டிரெல்லா பாட்டரீஸ் லிட்.
பம்பாய் — கல்கத்தா — டில்லி — கான்பூர் — மதராஸ் — நாகபூர்
WAS-56


1895-லிருந்து
ஜலதோஷம்
முதலியவைகளை
எதிர்ப்பதில்
முதன்மையானது
மூன்று தலைமுறைகளாக உபயோகித்தவர்கள் அமிர்தாஞ்சனம், ஜலதோஷம் முதலியவைகளை, சீக்கிரமாகவும், நிச்சயமாகவும், குணப்படுத்துகிறது என்பதை நிரூபித்துவிட்டார்கள்.
அமிர்தாஞ்சனம்
அமிர்தாஞ்சன் லிட்.,
சென்னை-4.
இதர இடங்கள், பம்பாய்-1,
கல்கத்தா-7.
AL.37-2A. TAM.

# ராஜாஜி பொல்லாதவர்

கல்கி

நாலு வருஷங்களுக்கு முன்பு ஒருநாள் கோவில்பட்டியில் ரயில் ஏறினேன். ரயில் கொம்மாளம் போட்டுக்கொண்டு சென்னையை நோக்கி அதிவேகமாய்ச் சென்றது. அதனுடைய சக்கரங்கள் சுழலும்போது உண்டான சத்தம் ''ராஜாஜி! வேண்டாம்!'' ''ராஜாஜி! வேண்டாம்!'' என்று முறை வைத்துக் கோஷிப்பதுபோல இருந்தது.

ரயில் அவ்விதம் கோஷம் செய்ததற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. மறுநாள் சென்னையில் ''ராஜாஜி வேண்டுமா? வேண்டாமா?'' என்ற பிரச்னை முடிவு செய்யப்படுவதாயிருந்தது. அதற்காகச் சென்னை சட்டசபைக்குப் புதிதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட எம். எல். ஏ.க்களும் எம். எல். ஸி.க்களும் நாலா திசைகளிலிருந்தும் சென்னையை நோக்கி விரைந்தார்கள். அந்தப் பெரிய மனிதர்களின் சம்பாஷணை என் காதில் விழுந்து கொண்டிருந்தது.

''காங்கிரஸ் 'ஹை கமாண்டு'க்கு இந்த விஷயத்தில் தலையிட என்ன அதிகாரம்? அவர்கள் யார் இதைப்பற்றிச் சொல்வதற்கு? எங்களுக்கு இஷ்டமான தலைவரை நாங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்கிறோம். காங்கிரஸ் மேலிடம், இங்கே எங்களிடம் ஒன்றும் வாலாட்ட முடியாது! வாலை ஆட்டினால் ஒட்ட நறுக்கி விடுவோம்!'' என்று ஒருவர் ஜமாய்த்துக் கொண்டிருந்தார். மற்றவர்களும் இந்தப் போக்கிலேயே பேசினார்கள். யாரோ ஒருவருடைய தீனமான குரல் ''அப்படி எதற்காக உங்களுக்கு ராஜாஜியின் மேல் துவேஷம்! அவர் மேல் குற்றம் என்ன? உதாரணத்துக்கு ஒன்றை எடுத்துக் காட்டுங்கள்!'' என்றார்.

''குற்றமா? நான் சொல்லட்டுமா?'' என்று ஒருவர் ஆரம்பித்துக் கூறினார் :—

''சொல்லுகிறேன். கேளும் ஓய்! இந்த மனுஷர் பிரதம மந்திரியாயிருந்த போது என்ன செய்தார், தெரியுமா......?''

''என்னத்தைச் செய்தார்? எல்லாம் நல்லதைத்தான் செய்தார்?'' என்றது அந்தத் தீனக் குரல்.

''என்ன நல்லதைச் செய்தார்? என்ன பிரமாத நல்லதைச் செய்து விட்டார்?— ஒன்றுமில்லை. இதைக் கேளும்! அவர் செய்த அநியாயத்தைக் கேளும். கிணற்றங்கரையில் வேஷ்டி துவைக்கிறது போல் படம் எடுத்துப் பத்திரிகையில் போட்டார்! கேட்டீரா! என்ன அக்கிரமம்?''

''அதில் அக்கிரமம் என்ன? வேஷ்டி துவைத்தது ஒரு குற்றமா?''

''வேஷ்டி துவைத்தது குற்றமோ இல்லையோ? அதைப்பற்றி இப்போது பேசவில்லை; தம்முடைய வேஷ்டியை மட்டும் துவைத்தால் துவைக்கட்டும்; அல்லது ஊரார் வேஷ்டியை வேண்டுமானாலும் தோய்த்து வண்ணான் பிழைப்பைக் கெடுக்கட்டும்! எதற்காக அதைப் போட்டோ படம் எடுத்துப் பத்திரிகையில் போட்டார் என்று கேட்கிறேன்.''

''அவரா படம் எடுத்தார்? அவர் வேஷ்டி துவைக்கிறதை அவரே எப்படிப் படம் எடுக்க முடியும்? 'மெட்ராஸ் மெயில்'காரன் படம் எடுத்துப் போட்டான். அதற்கு ராஜாஜி என்ன செய்வார்?''

''அதெல்லாம் சுத்த ஹம்பக்! அவருடைய இஷ்டமில்லாமல் படம் எடுத்துவிட முடியுமா ஓய்! எல்லாம் பிரசார தந்திரம்! அந்த மனுஷர் தந்திரக்காரர் என்பதுதான் உலகம் அறிந்த விஷயமாயிற்றே? அதை நீர் மறைத்து என்ன பிரயோசனம்? வேஷ்டி துவைக்கிறதைப் படம் எடுக்கிறதாம்! அதைப் பத்திரிகையில் போடுகிறதாம்! நினைத்தால் எனக்கு வயிற்றைப் பகீர் என்று பற்றி எரிகிறது! இரத்தம் கொதிக்கிறது!......''

அடுத்த வண்டியிலிருந்து இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த எனக்கு ரொம்பப் பயமாய்ப் போய்விட்டது!

அன்று ராத்திரியெல்லாம் கனவு கண்டேன். ராஜாஜி வேஷ்டி துவைப்பது போலவும், நான் ஓடிப் போய் அவருடைய கையைப் பிடித்து நிறுத்தி, ''வேண்டாம்! இவ்வளவு பயங்கரமான குற்றத்தைச் செய்ய வேண்டாம்!'' என்று கதறியது போலவும் கனவு கண்டேன். படம்பிடிக்க வந்தவருடன் சண்டைக்குப் போய் அவர் கையிலிருந்த காமிராவைப் பிடுங்கி எறிந்தேன். ஆனால் எத்தனை பிடுங்கி எறிந்தாலும் சூரன் தலையைப்போல மறுபடியும் ஒரு காமிரா அந்தப் போட்டோகிராபருடைய கையிலே முளைத்துக் கொண்டேயிருந்தது! இதனால் எனக்கு ஏற்பட்ட ஆயாசத்தைச் சொல்லி முடியாது!

மேலே கூறிய அநுபவங்கள் எல்லாம் மறுபடியும் எனக்கு இந்த வருஷம் ஜூலை மாதத்தில் நினைவுக்கு வந்தன: இந்த ராஜாஜி இவ்வளவெல்லாம் கஷ்டப்பட்டு அநுபவித்த பிறகும் மறுபடியும் பழைய பெத்தானே, பெத்தானாக இருக்கிறார்! சென்னைப் பிரதம மந்திரியா யிருந்தபோது வேஷ்டி துவைத்தார். அதைப் படம் எடுத்துப் பத்திரிகையில் போட்டுக் கொண்டார்: கவர்னர் ஜெனரல் ஆன பிறகு இன்னும் ஒருபடி மோச

மாகப் போய்விட்டாரே! இப்போது கலப்பை பிடித்து ஏர் உழுது அந்தப் படத்தைப் பத்திரிகைகளில் போட்டுக் கொள்கிறார்! முன்னேயாவது "மெட்ராஸ் மெயில்" ஒரு பத்திரிகையில் மட்டும் வேஷ்டி துவைக்கும் படம் வெளியாயிற்று. இப்போது அவர் ஏர் உழும் படம் இந்தியாவிலுள்ள நூற்றுக்கணக்கான பிரபலபத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. வேஷ்டி துவைக்கும் படத்தை நினைத்து வயிறு எரிந்து இரத்தம் கொதித்த மனிதருடைய கதி இப்போது என்ன ஆகுமோ? அவருடைய இரத்தம் இன்னும் எவ்வளவு பயங்கரமாகக் கொதிக்குமோ? மண்டையே வெடித்துப் போய் விடுமோ என்னமோ? ராஜாஜியைப் 'பொல்லாதவர்' என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்லுவது?

இந்த மாதிரி விஷயங்களில் மற்றவர்கள் யாராவது யோசனை சொன்னால், அவர்கள் ரொம்ப ஆப்தர்களாயிருந்தாலும், ராஜாஜி கேட்பார் என்கிறீர்களோ? அது தான் கிடையாது. ஒரு சமயம், ராஜாஜி வேஷ்டி துவைத்ததினால் நேர்ந்த விபரீதத்தைப் பற்றி நானே அவரிடம் சொன்னேன். "அதனால் உங்களுக்குப் பிரதம மந்திரி வேலையே போய் விட்டது!" என்று எடுத்துக் காட்டினேன். பிறகு "என்னிடம் வேஷ்டியைக் கொடுங்கள்! நான் துவைக்கிறேன்!" என்று கேட்டுப் பார்த்தேன். பலிக்கவில்லை. "உம்முடைய வேஷ்டியை நீர் துவைத்துக் கட்டினால் போதும்!" என்று சொல்லி விட்டார். (இது குற்றாலத்தில் வைத்து நடந்தது) "ஏதோ எனக்கு உபகாரம் செய்ய வருவதாக உத்தேசம் போலும். நான் கஷ்டப்பட்டுக் கொண்டு வேஷ்டி துவைத்தால் அல்லவா நீர் உதவி செய்ய வரவேணும்? வேஷ்டி துவைப்பதில் எனக்குச் சந்தோஷம் இருக்கிறது. அதனால் தான் தோய்க்கிறேன். அந்தச் சந்தோஷத்தை நீர் அபகரிக்க வருகிறீரே!" என்றார். இது என்னமோ உண்மைதான்! ராஜாஜி குதூகலத்துடன் அநுபவிக்கும் சில சந்தோஷங்களில் வேஷ்டி துவைப்பது ஒன்று. அதிலும் அவர் குற்றாலத்தில் தங்கியிருக்க வேண்டும். மலை ஏறி மரப்பாலத்துக்குப் போய்விட வேண்டும். பளிங்கு போன்ற அருவி நீரில் துணியை நனைத்துத் தூய்மையான பாறாங்கல்லில் துவைப்பதில் ராஜாஜிக்கு அளவில்லாத குதூகலம்.

"இருந்தாலும், 'ஊருக்காகப் பால் குடிக்க வேண்டும்' என்பார்களே! அதுபோல் தாங்கள் துவைப்பது சிலருக்கு எவ்வளவு கோபம் மூட்டுகிறது என்பதையாவது எண்ணிப் பார்க்க வேண்டாமா?" என்று கேட்டேன்.

"கோபம் யாருக்கு வருகிறது? அரசியல் வாதிகளுக்குத்தானே? அவர்களுக்கு வருகிற கோபம் எனக்கு நல்லதாய்ப் போயிற்று! வேஷ்டி துவைப்பதற்கு இன்னும் அதிக சாவகாசம் கிடைக்கிறது! படம் பத்திரிகையில் வந்தது பற்றியும் நான் கவலைப்படவில்லை. அதில் எனக்குச் சந்தோஷம்தான்; அதைப் பார்த்து யாராவது பத்து இளைஞர்கள் 'நம்முடைய காரியங்களை நாமே பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று ஆரம்பித்தால் எனக்குப் போதும்" என்றார் ராஜாஜி;

ராஜாஜியைச் சிலர் 'தந்திரக்காரர்' என்று சொல்லுவதுண்டு; சிலர் அதை உண்மையாகவே நம்புவதும் உண்டு. ஆனால் அவரைப் போலச் சொந்த விஷயங்களில் தந்திரமே தெரியாதவரை நான் பார்த்ததே இல்லை.

ராஜாஜி மிகச்சிறந்த அறிவாளி என்பது உலகம் ஒப்புக்கொண்டது. அத்தகைய அறிவாளி தந்திரசாலியாக இருந்தால் அவரை யாராவது ஜெயிக்க முடியுமா? சென்னை மாகாணத்தின் தலைமைப் பதவி அவரிடமிருந்து போயிருக்குமா?

நான் அறிந்த ராஜாஜி, தந்திரம் என்பதே அறியாதவர். உள்ளும் புறமும் ஒத்தவர். மனத்தில் ஒன்று வைத்துக்கொண்டு வெளியில் ஒன்று பேசுவது என்பது அவருடைய சுபாவத்துக்கே மாறான காரியம். இதனாலேயே அவர் பலருக்குப் 'பொல்லாதவர்' ஆகியிருக்கிறார்.

நான் அறிந்த ராஜாஜியிடம் இன்னொரு விசேஷ குணம் உண்டு. அதுதான் பிரசார மனப்பான்மை. "தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பது ராஜாஜியின் வாழ்க்கை அடிப்படை. இதிலிருந்துதான் அவருடைய பிரசார மனப்பான்மையும் ஏற்படுகிறது. தமக்கு நல்லது என்று தோன்றுவதை மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும். அவர்களும் அந்த நன்மையை அடைய வேண்டும். தமக்கு உண்மை என்று தோன்றுவதை உலகத்துக்கு எடுத்துரைக்க வேண்டும்; அந்த உண்மையை மற்றவர்களும் கண்டு அதன் வழி நடக்க வேண்டும். இதற்காக எல்லாவிதப் பிரசார முறைகளையும் கடைப்பிடிப்பதற்கு ராஜாஜி தயார். ஆனால் எல்லாப் பிரசார முறைகளிலும் மிகச் சிறந்தது, தாம் சொல்லுவதைத் தாமே சொந்தமாகச் செய்து காட்டுவதுதான் அல்லவா? ஆகையால் அதற்காகப் படம் எடுத்துக் கொள்ளத் தயார். பத்திரிகைகளில் வெளியிடச் செய்வதற்கும் தயார்தான்.

"உழுது பயிரிடுங்கள், உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்!" என்று எத்தனையோ பேர்கள் எழுதியிருக்கிறார்கள்; பேசியிருக்கிறார்கள்; படித்திருக்கிறோம்; கேட்டிருக்கிறோம். ஆயினும் கவர்னர் ஜெனரல் கலப்பை பிடித்து உழுத காட்சி நம் மனதில் பதிந்தது போல வேறு ஏதாவது பதிந்தது உண்டா?

இதற்காகக் கோபித்துக் கொள்கிறவர்கள் சிலரும் இருக்கத்தான் இருப்பார்கள். கோபித்துக் கொள்கிறவர்கள் எப்போதுமே கோபித்துக் கொள்கிறவர்கள். கவர்னர்-ஜெனரல் ஏர் உழும் படம் வெளியானதன் பயனாக யாராவது சிலரேனும் உழவுத் தொழிலிலும் உணவு உற்பத்தியிலும் ஈடுபட்டால் அதுவே ராஜாஜிக்குப் போதுமானது. 'கையினால் தொழில் செய்வது அவமானம் அல்ல. ஏர் பிடித்து உழுவது இழிவான காரியம் அல்ல' என்று பத்துப் பேர்கள் தெரிந்து கொண்டால் அதுவே அவருக்குப் பரம திருப்தி அளிக்கக் கூடியது.

ஆமாம்; ராஜாஜி மிகவும் 'பொல்லாதவர்' தான்! மற்றவர்களுக்குத் தோன்றாததெல்லாம் அவருக்குத் தோன்றுகிறது. மற்றவர்களுக்கு விளங்காததெல்லாம் அவருக்கு விளங்குகிறது; மற்றவர்கள் செய்யத் தயங்கும் காரியங்களையெல்லாம் அவரால் தயங்காமல் செய்ய முடிகிறது; இதெல்லாம் 'பொல்லாத்தனம்' அல்லவா?

# 1,000 மைல் பிரயாணம்— ஓர் அறையினுள்ளே!

கடகட, படபட, படார்... ஓடுவது ஓர் குழந்தையின் பொம்மை ரெயில்தான்... கடகட, படபட, படார், சிறிய நேரம் அறைக்குள்தான் இவ்வளவு ஓட்டமும்: ஆனால், குழந்தைக்கோ ஆயிரம் மைல் பிரயாணம் செய்யும் திருப்தி! அதன் ஓட்டமும் வேகமும் அல்லவா குழந்தைக்கு முக்கியம்!

ஹிந்துஸ்தான் லீவர் கம்பெனியிலுள்ள எமக்கோ, வேகமும் தூரமும் அதைவிட முக்கியம்தான். தினந்தோறும் உங்கள் பொருட்டுநாங்கள் பல்லாயிரம் மைல்கள்—சொல்லப்போனால், பாரத நாட்டின் 35,000 மைல் நீளமுள்ள இருப்புப்பாதை முழுமையுமே — கடந்து வருகிறோம்.



அனுப்புவதற்கு முன்பே, சாமான்களின் போக்குவரத்து சாதனம் என்ன என்பதை நாங்கள் நிர்மானித்துக்கொள்ள வேண்டும்.அது எப்படியாயினும், சாமான்கள்போய்ச்சேரத்தான் வேண்டும் — அதுவும் நல்ல நிலையில் போய்ச் சேரவேண்டும். ஏனென்றால், எமது சாமான்கள் மீது பொதுஜனங்களுக்குப் பூரண நம்பிக்கை இருந்து வருகிறதல்லவா! ஸன்லைட் சோப், விம், ரெக்ஸோனா, டால்டா வனஸ்பதி முதலிய எமது சாமான்களுக்கு உள்ள தேவை எங்கெங்கும், எல்லாப் பருவங்களிலும் வளர்பிறை போலப் பெருகி வருகிறது.

அத்தகைய தேவையைப் பூர்த்தி செய்யத்தான் நாங்கள் சிரமமெடுத்துக் கொள்கிறோம். சாமான்கள் மூலம் கிடைக்கும் சேவையைத் தவிர மற்றோர் சேவையையும் உங்களுக்கு வழங்குகிறோம்: ஆம், ஒழுங்கு தவறாமல் விநியோகித்து வருகிறோம்.

**குடும்பந்தோறும் நலம்தோங்க**

**ஊழியம் புரிவது**

**ஹிந்துஸ்தான் லீவர்**

HLL. 6-X29 TM


தரத்திலும் உபயோகத்திலும்
இன்னும்
முன்னணியிலுள்ள
10.ல் 9 நபர்
பிரபாத்
• ஸ்டவ்ஸ்
• லாண்டர்ன்ஸ்
• மேண்டல்ஸ்
• ப்ளோ லாம்ப்ஸ்
உபயோகிக்கின்றனர்
பிரபாத் (ஸ்டவ் அண்ட் லாம்ப்) பிராடக்ட்ஸ் கம்பெனி
பிரைவேட் லிமிடெட்
தோபின் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் வீதி, போர்ட், பம்பாய்-1







கீழே கூடம் இரண்டுபடுகிறது!

அன்று புதிதாகப் பஞ்சகச்சம் வைத்துக் கட்டிக்கொண்டு குறுக்கும் நெடுக்கும் பறக்கிறார். மன்னியின் கூரைப்புடவை மொர மொரக்கிறது. ஊரிலிருந்து வந்திருந்த பாட்டியால் இருக்கிற இடத்தை விட்டு நகர முடியாது. ஆனால் அங்கிருந்தபடியே காரியங்களை நகர்த்திக் கொண்டிருக்கிறாள். அம்மாவுக்கு அடுப்பங்கரையில் காலும் ஓடவில்லை, கையும் ஓடவில்லை. அப்பா ஸ்டேஷனுக்குப் போயிருக்கிறார், வரப்போகிறவர்களை எதிர்கொண்டு அழைக்க. எல்லாம் கிடக்க, பானு என்னவோ, பெரிய மனுஷிமாதிரி, மாடிக்கும் கீழுக்கும் அலைகிறாள். சந்தனப் பேலாவை உருட்டி விட்டு முதுகில் ஒன்று வாங்கிக் கொள்ளாத வரையில் இவளுடைய துறுதுறுப்பு தீராது.

"இன்னும் அரை மணியிலே வந்து விடுவார்களாம்" என்றாள் பானு, ஓடிவந்து. "நீ வரவில்லையா, அக்கா, கீழே?"

நான் அவளுடைய குழந்தை மனத்தை எண்ணிச் சிரித்துக் கொண்டேன். என்ன குதூகலம் இவளுக்கு! அக்காவுக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது. பாட்டும் கலகலப்பும் கொஞ்சலுமாக. வீடே இரண்டு நாட்களுக்குப் பொங்கி வழியும். தனக்கும் ஒரு புதுச் சட்டை, பாவாடை கிடைக்கும் என்பதற்கு மேல் பானுவுக்குக் கல்யாணத்தைப் பற்றி என்ன தெரியும்!

எனக்கு இது புதிதில்லை. இதே அமர்க்களம் அப்போதும் நடந்தது. என்னவோ உலகத்திலில்லாத மனிதர் என்னை வந்து பார்த்து என் அழகில் மயங்கி விடப் போகிறார் என்றுதான் அலங்காரத்தில் ஈடுபட்டேன். ஒரு பவுடர் டப்பி முழுதாகக் காலியாகி விட்டதாக அண்ணா கேலி செய்தார். உலகத்திலில்லாத மனிதராகத்தான் அவர் வந்தார்; பார்த்தார். என்ன அதிசயம்! அவர் என் அழகில் மயங்குவார் என்று எதிர்பார்த்திருந்த என் அகங்காரம் அழிந்தது. முதல் பார்வையிலேயே அந்த மனிதர் என்னை மயக்கி விட்டார்.

அப்புறம் பொருளாதாரப் பிரச்னை வந்தது: ஆணாகப் பிறப்பது எத்தனை லாபம்? ஒரு பெண்ணும், அவளோடு நகைகளும் வெள்ளிப் பாத்திரங்களும் தேடி வரும். இவ்வளவைச் சுமந்து வந்தும் அவளுக்கு என்ன அதிகாரம் புக்ககத்தில்? ஒன்றுமில்லை. பிறந்தகம் வற்றாத சுரங்கமாக இருந்தால்-அப்படி இருக்க வேண்டும் என்பதுதான் பிள்ளை வீட்டாரின் ஆசை-தொல்லை குறைந்தது. வருஷத்துக்கு ஆயிரம் பண்டிகைகள். கல்யாணத்துக்கு முன்பு வரையில் வெறும் சாப்பாட்டுப் பண்டிகைகளாக இருந்தவை இப்போது புதுப் புடவைகள்; புது நகைகளாக உருவெடுத்தன.

"ஞானம்...அடியே ஞானம்!"

கீழேயிருந்து அம்மாவின் குரல் என்னை உலுக்கியது. பாவம், அம்மா அங்கே என்ன கஷ்டப்படுகிறாளோ!

"என்னம்மா?"

"அங்கே என்ன செய்து கொண்டிருந்தாய், மாடியிலே? அவர்கள் வருகிற சமயம்...இங்கே வந்து ஒத்தாசையாக இருக்கப்படாதோ?"

"ம்...என்ன செய்யணும் நான் சொல்லு."

"சந்திரா என்ன செய்கிறாள், பார்!"

சந்திரா என்ன செய்கிறாள் என்பதைப் பார்க்க வேண்டுமா? அவள் என்ன செய்து கொண்டிருப்பாள் என்பது எனக்குத் தெரியாதா, என்ன?

ஆனால் சந்திரா இவ்வளவு நேர்த்தியாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டிருப்பாள் என்று நான் எண்ணவில்லை. அடியம்மா! எனக்கே தலை சுற்றியது. போன வருஷம் வெறும் தாவணியோடு பள்ளிக்கூடம் போய் வந்த பெண்-இன்று பார்த்தால் ஒரே பூரிப்பும் மலர்ச்சியுமாக நிற்கிறாள்.



அவள் என்னைப் பார்த்ததும், "அக்கா! தலை படியவே மாட்டேன் என்கிறது. நீதான் சரி செய்து விடேன்" என்றாள்.

"அது எப்படிப் படியும்? பெருமையில் பூரித்து நிற்கிறது!" என்றேன்.

"போ, அக்கா...!"

"சரி, சரி...வா..."

பானு ஓடி வந்து எட்டிப் பார்த்தாள்.

"அவர்களெல்லாம் வந்தாச்சு..."

சந்திராவுக்கு வியர்த்து விட்டது: அவளுடைய பயம்—வெறும் பயமா அது?—எனக்குச் சிரிப்பைத் தந்தது. அந்தப் பயத்தைக் குடைந்துகொண்டு இன்ப வண்டு இசைக்கிறது மனத்தில்; மாம்பழத்தின் கொட்டைக்குள் இருக்கும் வண்டைப்போல. எல்லாம் நான் அனுபவித்த அதே சங்கடங்கள் தானே! ஆனால், பாவம் சந்திரா! என்னைப் போலப் பின்னால் சங்கடப்பட வேண்டாம். இதுவே என் பிரார்த்தனை.

ரத்தினக் கம்பளத்தை விரித்துப் போட்டு, வந்தவர்களை அமரச் சொன்னார்கள். வந்தவரைப் பார்த்தேன். சாதுவாகத் தோன்றினார். இப்போது அப்படித்தான் இருப்பார்கள். பின்னால் போகப் போகத் தெரியும் என்று எண்ணிக் கொண்டேன். முகத்தில் நல்ல களை. என்ன இருந்தாலும் அவரைப் போல இல்லைதான். புகுந்த வீட்டின் ஆதரவை இழந்து பிறந்த வீட்டோடு கருண்டு கிடக்கும் இந்த நிலையிலும் என் மனத்தில் ஒரு துள்ளல்.

அப்புறம் நடக்க இருப்பவை எனக்குத் தெரியும். சந்திரா நமஸ்காரம் செய்வாள். அப்போது பையன் பெண்ணைப் பார்ப்பான். பையனின் தாயார் பெண்ணின் கழுத்தையும் காதையும் பார்ப்பாள். பையனின் அக்கா பெண்ணின் மூக்கையும் விழியையும் பார்ப்பாள். பையனின் தந்தை வீட்டையும் அப்பாவையும் பார்ப்பார். யாராவது ஒருத்தர் அவளுடைய மனத்தைப் பார்ப்பார்களோ? அது ஏது?

சந்திரா நமஸ்காரம் செய்தாள். என்னைப் போலத்தான், ஒரே தடுமாற்றம், நடுக்கம். தலை நிமிர்ந்தால்தானே? உள்ளே வந்ததும், "என்னடி?" என்றேன். அவளால் பேச முடியவில்லை. பானுகுட்டி போய்ச் சந்திராவின் வருங்காலக் கணவரின் மடியில் சுவாதீனமாக உட்கார்ந்து விட்டாள்.

வழக்கம்போல் அடுத்தபடி பொருளாதாரப் பேச்சு. இந்த வழக்கம் எப்படித்தான் நம் சமூகத்தில் வந்ததோ! சந்தையில் மாடுகளை விலை பேசுகிற மாதிரி. சே! சே! இந்த அநியாயத்துக்கு ஒரு முடிவே கிடையாதா?

சாஸ்திரிகள் நல்ல நாள் பார்த்துச் சொன்னார்! வரை அழைத்து நிச்சயதார்த்தம் செய்தாயிற்று:

"சந்திரா, உனக்குச் சம்மதம்தானே!" என்று கேட்டேன்.

"ம்..."

"அவரை நன்றாகப் பார்த்தாயா?"

"ம்..."

"அடிகள்ளி, குனிந்த தலை நிமிரவில்லையே?"

"போ, அக்கா..."

"சரி. எப்படி இருக்கிறார், சொல்லு."

"எனக்குச் சொல்லத் தெரியாது."

"அவரைப் பிடித்திருக்கிறதா?"

"ம்..."

அவள் இறைஞ்சிய இறைஞ்சலும், பார்த்த பார்வையும் எனக்கு இரக்கத்தையே தந்தன: எல்லாம் என்னைப் போலவே. அக்காவைப் போலவேதான் தங்கையும்!

கல்யாணம் தடபுடலப்படும்: செலவு ஒரு அளவுக்குள் அடங்குமா? எடுத்ததற்கெல்லாம் ரூபாய் நோட்டுக்களாக அள்ளி வீசவேண்டும்: சம்பந்திகளைத் திருப்திப்படுத்தி அனுப்பினால் போதும் என்று ஆகிவிடும். மனிதனை மனிதன் பிடுங்கி எடுக்கிற நாகரிக ஏற்பாடு இது: மனத்தின் சங்கமத்துக்கு இதில் இடமில்லை: ஆடம்பரமும், செருக்கும் நிறைந்த பிரா து ஏற்பாட்டுக்கு இரண்டு ஜீவன்கள் பலி!

அழைப்பிதழ்கள் தயாராகி விட்டன: அண்ணா லிஸ்ட் எடுத்துக் கொண்டு வந்து விட்டார். நினைத்து நினைத்துத் தபால் பறந்தது. பறந்து பறந்து காரியங்கள் நடந்தன. நடந்து நடந்து மன்னி அலுத்துவிட்டாள். அலுத்து அலுத்து அப்பா ஓய்ந்தார்.



"ஞானம்! உன் கணவர் வருவாரா?" என்று ஊரார் கேட்க ஆரம்பித்து விட்டார்கள். எனக்கு இல்லாத கவலை இவர்களுக்கு! அவர் வந்தால் என்ன, வராவிட்டால் என்ன! என்னை ஒரு பெண் என்று மதிக்காதவரை நான் ஏன் எதிர்நோக்க வேண்டும்? தாம்பத்தியம் என்பது பொருளற்றதாகி விட்டபோது வெளி வேஷம் எதற்காக?

வாசலில் நாகஸ்வரம் களை கட்டிவிட்டது. கூடத்தில் ஹோமப் புகை கூட ஆரம்பித்து விட்டது. பின்புறம் சமையற்கட்டில் ஏழெட்டுச் சமையற்காரர்களின் கைவரிசை துவங்கி விட்டது. அம்மாவுக்குத் தொண்டை கட்டிக் கொண்டு பேச முடியவில்லை.

"நல்ல நாளும் அதுவுமாக ஏன் 'உர்' ரென்று உட்கார்ந்திருக்கிறே?"

எனக்கு மனம் எதிலும் ஒடவில்லை. தானே ஒட்டாது விலகி நிற்கிறபோது இதிலெல்லாம் ஈடுபடத்தான் முடியுமா?

"அக்கா! உனக்கு விஷயம் தெரியுமா?"

"என்னடி?"

"அத்திம்பேர் வந்திருக்கிறார்......"

"யாரு?"

"அத்திம்பேர்" என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னாள் பானு.

துள்ளி எழுந்தேன்: அவரா வந்திருக்கிறார்? நிஜமாகவா?

அறை வாசலில் நிழல் தெரிந்தது. பானுவின் தலை மறைந்தது. அவர் உள்ளே வந்தார். நான் ஏன் தலையை நிமிர்த்துகிறேன்? நிமிர்ந்துவிட்டால் நான் ஞானம் இல்லையே!

"ஞானம்......"

"........."

"ஞானம்! என்மேல் கோபமா?"

ஐயோ, அந்த வார்த்தையில் என்னதான் மந்திர சக்தியோ? என்னை நொடியில் தான் ஆளாக்கி விட்டது. தலை தானாக நிமிர்ந்தது. எதிரே அவரா நின்றார்? பெண் பார்க்க வந்த அன்று என் கண்ணில் நிறைந்தவர், நெஞ்சில் வழிந்தவர் நின்றார்.

"ஏன் பேச மாட்டேன் என்கிறாய்? இங்கே வருவதற்கு என்ன தந்திரம் செய்தேன், தெரியுமா? — அம்மாவும் வந்திருக்கிறாள். இந்தா, இதைக் கழுத்தில் போட்டுக்கொண்டு அவளை நமஸ்காரம் செய், போ."

அவர் கொடுத்த நகைப் பெட்டியைப் பார்த்தேன். அதற்குள் இருந்த வைர நகை என்னைப் பார்த்துச் சிரித்தது. இந்தத் தகராறு காரணமாகப் பிறந்த வீடு வந்தவள் தானே நான்! இது இல்லாமல் மருமகளை ஏற்க முடியாது என்று கூறிவிட்டாள் மாமி. இப்போது தன் தாயாருக்காகவும் தனக்காகவும் இந்த ஏற்பாட்டுடன் வந்திருக்கிறார்.

"போட்டுக்கொள், ஞானம்! அம்மாவிடம் மட்டும் இது உன் பிறந்த வீட்டில் செய்தது என்று சொல்லி விடு."

நான் அவரை நிமிர்ந்து பார்த்தேன். சற்று முன்பு என் நெஞ்சில் இனித்தவர், இப்போது கசந்து விட்டார். மனம் மாறி வந்திருக்கிறார் என்று நினைத்தேனே! அவருடைய ஆண்மையை விடக் கோழைத்தனமே அல்லவா இதில் மிஞ்சி நிற்கிறது! அதை என்னால் ஏற்க முடியாது.

"இதில் நீங்கள் யாரை ஏமாற்றுகிறீர்கள், தெரியுமா?" என்று கேட்டேன்.

இந்தக் கேள்வி அவரை உலுக்கி விட்டது: இருந்தாலும் சிரித்துக் கொண்டு, "அம்மாவை!... அதனால் என்ன?" என்றார்.

"இல்லை. உங்களையே நீங்கள் ஏமாற்றிக் கொள்கிறீர்கள்."

"நீ என்ன சொல்கிறாய், ஞானம்?"

"அம்மாவை இப்போதைக்குத் திருப்திப் படுத்திவிடலாம். இந்தத் திருப்தி சிரந்தரமாக இருக்குமா? உங்கள் அம்மாவுக்கு மருமகள் வேண்டாம்; இந்த நகைதான் வேண்டும்...கொண்டு போய்க் கொடுங்கள்."

"ஞானம்!"

"நான் அனுபவித்ததெல்லாம் போதும். உங்களுக்கு நான் வேண்டுமென்றால், தைரியமாக நில்லுங்கள் ... இல்லாவிட்டால்..."



"உன் பிடிவாதம் எனக்குப் புரியவில்லை..."

"இதைப் பிடிவாதம் என்கிறீர்களா?"

அவர் என்னை நிமிர்ந்து பார்த்தார். "சரி! இந்த நகையைப் போட்டுக் கொள். நான் அம்மாவிடம் சொல்லிக் கொள்கிறேன்."

"நீங்கள் என்ன சொல்வீர்கள்?"

"ஏதோ சொல்கிறேன்: நீ வாயையே திறக்க வேண்டாம்."

"நீங்கள் என்ன சொல்வீர்கள் என்று எனக்குத் தெரியும். நான் சொல்ல மறுத்ததை நாளுக்காக நீங்களே சொல்லி விடுவீர்கள்..."

அவர் சிரித்தார். "இல்லை, ஞானம். அப்படிச் சொல்ல மாட்டேன். இந்த நகை என் பிராயச்சித்தம் என்று சொல்வேன். ஞானம் தந்த ஞானம் என்று சொல்வேன்."

நெஞ்சு விம்ம அவர் காலடியில் விழுந்தேன்: பானுக் குட்டி தலையை நீட்டினாள். "பாவிகை விடப் போகிறானாம்! கூப்பிடறா!" என்றாள். பிறகு, "என்ன, மாமி! நீங்கள் இங்கு நிற்கிறீர்கள்? ஹோமப் புகை கண்ணை உறுத்துகிறதா?" என்று கூறினாள்.

நான் வெளியே வந்தேன். ஹோமப் புகையாலோ வேறு எதுவாலோ கண்ணைக் கசக்கிக் கொண்டு அங்கு நின்றாள் என் மாமியார். "நமஸ்காரம் பண்ணுகிறேன்" என்றேன்.

"தீர்க்காயுசாக இரு அம்மா! அந்த வைர நகையை உன்னுடைய பெண்ணுக்காக 'ரிசர்வ்' பண்ணிக்கோ..." மாமி மனம் விட்டுத்தான் சொன்னாள்.

"ஊஹூம். மகளுக்காக அல்ல; வரப் போகிற மருமகளுக்காக" என்றேன் நான்.



பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு நான் சென்றபோது மாலை நாலு மணி இருக்கும். ஆஸ்பத்திரியின் நிர்வாக அதிகாரி எனது நெருங்கிய நண்பர். அவரைக் கண்டு சிறிது நேரம் அளவளாவுவதற்கே நான் அங்கு சென்றேன்; வேறொன்றுமில்லை!

ஆஸ்பத்திரிக்கு உள்ளே தோட்டத்தில் தமது நோயாளிகளில் சிலரை நண்பர் கவனித்துக் கொண்டிருந்தார். என்னை அறியாமல் என்னுடைய கண்கள் அந்தத் துரதிர்ஷ்டசாலிகளை நோக்கின.

அவர்களில் குறிப்பாக ஒருவரை 'நான் உற்றுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. அவரது முகம் என் நண்பர் ஒருவருடைய முகத்தை ஞாபகப்படுத்தியது. இல்லை, இல்லை. என் நண்பருடைய முகம் போலவே, இருந்தது! திடுக்கிட்டேன்;

பர்மாவில் உள்ள என் நண்பருக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம்? ஒருவேளை அவரைப் போன்ற முகச்சாயல் இவருக்கு இருக்கலாம் என்று எண்ணி மனத்தைச் சமாதானம் செய்து கொண்டேன்.

"என்ன, அவரையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே?" என்று கேட்டார் அதிகாரியான என் நண்பர்.

"பர்மாவில் எனக்கு ஒரு நண்பர்' இருக்கிறார். இவரது முகம் அவரைப் போலவே இருக்கிறது. அதனால்தான் அப்படிப் பார்த்தேன்" என்று சமாதானம் கூறினேன்.

இந்தச் சந்தேகமும் பிரமையும் இத்துடன் நின்று விடும் என்று நினைத்தேன்: நண்பரிடம் வேறு ஏதோ பேச்சை எடுத்தேன்.

ஆனால் அவர் விடவில்லை: "உங்கள் நண்பரின் பெயர் என்னவோ?" என்றார். அவரது பேச்சில் ஒருவித ஆர்வம் தொனித்தது:

"அவர் பெயர் கதிரேசன்" என்றேன் அசிரத்தையாக.

"இவருடைய பெயரும் கதிரேசன்தான்: இவரும் சமீபத்தில் பர்மாவிலிருந்து வந்தவர்தான்" என்றார் நண்பர்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது: ஆஸ்பத்திரி என் கண்களிலிருந்து மறைந்தது. எதிரில் நிற்கும் நண்பரையும் மறந்தேன். கதிரேசனின் முகம் ஒன்றுதான் என் கண் எதிரே நிற்பதுபோல் தோன்றியது.

உடனே என்னை அறியாமல் என் மனத்தில் ஒரு வேகம் உண்டாயிற்று. 'விடுவிடு' என்று கதிரேசன் அருகில் சென்று, "என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு?" என்றேன்.

கதிரேசன் சில விநாடிகள் என்னையே வெறித்துப் பார்த்தார்.

"என்னைப்போன்ற அதிர்ஷ்டசாலி யாருமே இல்லை" என்றார் சிரித்துக்கொண்டே.

கதிரேசன் வேறு என்ன சொல்லியிருந்தாலும் அது அவ்வளவாக என்னுடைய மனத்தைக் கிளறியிராது.

"அதிர்ஷ்டசாலியாம், பாவம்! உலகில் துரதிர்ஷ்டத்தின் எல்லையைக் கண்டவர் ஒருவர் உண்டெனில், அவர் கதிரேசன்தான்: இவர் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் வசிக்கும்படி நேர்ந்ததைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. கதிரேசன் வாழ்க்கையில் ஏற்பட்ட சகிக்க முடியாத நிகழ்ச்சிகள் காரணமாக இவர் முன்பே உயிர் துறந்திருந்தால்கூட நான் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டேன்."



இவ்விதம் நான் கூறியதைக்கேட்ட நண்பர், "இவர் உயிரைப் போக்கிக் கொள்ள முயற்சி செய்ததால்தான் இன்று இந்தஆஸ்பத்திரியில் இருக்கிறார்" என்றார்.

"என்ன, அப்படியா? எனக்கு விவரமாகச் சொல்லுங்கள்" என்று மிகுந்த ஆர்வத்துடன் அவரைக் கேட்டேன்.

"உங்கள் நண்பரைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? அதை முதலில் சொல்லுங்கள். கதிரேசன் வாழ்க்கையின் பிற்பகுதியை எனக்குத் தெரிந்த வரையில் சொல்லுகிறேன்" என்றார் நண்பர் புன்னகையுடன்.

நான் சுருக்கமாக அவருக்குக் கதிரேசனின் கதையைச் சொல்லத் தொடங்கினேன்:

ஒரு காலத்தில் பர்மாவிலே கதிரேசன் கோடீசுவரராகத் திகழ்ந்தார்: ரங்கூன், மாண்டலே, மோல்மின் முதலிய பல நகரங்களிலும் அவருக்குச் சொந்தமாகப் பல மாளிகைகளும் ஆயிரக்கணக்கான ஏக்கர் நில புலன்களும் இருந்தன. அரிசி வியாபாரம் அவருக்கு அள்ளி அள்ளிக் கொடுத்தது. தேக்குமர வியாபாரத்தில் கொள்ளை கொள்ளையாக லாபம் வந்தது. இவற்றுடன் லேவாதேவித் தொழிலும் சேர்ந்து கதிரேசனைக் கலியுகக் குபேரனாக்கி விட்டது.

அவருடைய முக்கியமான வேலைக்காரர்களில் அம்மாப்பேட்டை என்பவனும் ஒருவன்.

"அம்மாப்பேட்டை என்று ஒருவனுக்குப் பெயரா? வேடிக்கையாக இருக்கிறதே!" என்றார் நண்பர் இடைமறித்து.

அவனுடைய உண்மையான பெயர் யாருக்கும் தெரியாது. அவன் சொந்த ஊர் அம்மாப்பேட்டை. அதனால் அம்மாப்பேட்டை என்ற பெயரே அவனுக்கு நிலைத்து விட்டது.

அம்மாப்பேட்டைக்கு முப்பது வயது இருக்கும். அப்போது அவனது இளம் மனைவி இறந்து விட்டாள் என்ற செய்தி கிடைத்தது. அவள் மூன்று வயதுப் பெண் குழந்தையை விட்டு விட்டுக் கண்ணை மூடி விட்டாள். அந்தக் குழந்தையைப் பார்ப்பதற்காக அம்மாப்பேட்டை ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை இந்தியாவுக்குச் செல்லத் தொடங்கினான்.

கதிரேசன் இரண்டு தடவைகள் பேசாமல் இருந்தார். மூன்றாவது தடவை அவன் ரஜா கேட்டபோது, "ஏலேய்! ஆறு மாசத்துக்கு ஒருதடவை நீ ஊருக்கு உல்லாசமாகப் போய் விட்டால், இங்கு கடை வேலைகள் என்ன ஆவது? வெள்ளைக்காரனும் காட்டியும்!" என்று கடிந்து கொண்டார்.

அந்தத் தடவை கதிரேசனிடம் கெஞ்சிக் கூத்தாடி ரஜாவில் சென்ற அம்மாப்பேட்டை, ஊரிலிருந்து திரும்பி வரும்போது நாலு வயதான தன் அருமைக் குழந்தை உமையையும் தன்னுடன் அழைத்து வந்து விட்டான்.

தமது அனுமதியின்றி அம்மாப்பேட்டை குழந்தையை அழைத்து வந்ததைக் கண்டு முதலில் கதிரேசன் ஆத்திரம் அடைந்தார். எனினும், நாளடைவில், அவரது கோபம் தணிந்து விட்டது. புதிது புதிதான ஆடையுடனும் இரட்டைப் பின்னலுடனும் குறுகுறுவென்ற விழிகளுடனும் காட்சியளித்த

# துளிர்த்தது!

ஜெயமணி



# சேலம் தந்த செல்வம்.

நற்சிப்பியிலே வந்த முத்து அவர்-எங்கள்
நாட்டின் பாரத ரத்னமவர்
கற்சிலை உறுதி உடையவராம்-எங்கள்
ராஜாஜி அவரை வாழ்த்திடுவோம்! (நற்)

மதுவைப் போக்கிடப் பாடுபட்டார்-அதில்
மகத்தான வெற்றியும் கண்டு விட்டார்
எதுவும் எடுத்துச் சொல்லிடவே-அவர்
என்றும் தயங்கி நிற்கமாட்டார். (நற்)

ஹரிஜன சேவைகள் செய்திட்டார்-பல
அரும் பெரும் தொண்டுகள் செய்திட்டார்
புரிகின்ற சேவைகள் எதிலும் அவர்
பிரதி பலன் பார்த்து இருக்கமாட்டார் (நற்)

அணுகுண்டு அரக்கனை ஒழித்திடவே-பல
அறிவுரை வழங்கி வருகின்றார்
உணர்ந்து உலகமும் நடந்திட்டால்
அழிவைப் போக்கிட வழியுண்டு. (நற்)

சேலம் தந்திட்ட செல்வம் அவர்-எமை
செம்மையாய் நடத்தும் தலைவர் அவர்
ஞாலம் உள்ள நாளளவும்-அவர்
சீரும் சிறப்புடன் வாழியவே!

—'பரதூர் ராமு'

உமை, வியாபாரம், கொள்ளை லாபம், ஆடம்பர அதிகாரம் இவற்றைத் தவிர வேறு எதையும் கண்டிராத கதிரேசனின் வறண்ட மனத்தில்கூடச் சிறிதளவு அன்பு உணர்ச்சி ஊறும்படி செய்து விட்டாள்.

இருந்தாலும் குழந்தையைப் பார்த்துச் சிரிக்கவோ, அவளை அருகில் நெருங்கவிடவோ அவரது பாழும் கௌரவம் இடம் கொடுக்கவில்லை. தமது சிப்பந்திகளுடன் சேர்ந்து உரக்கச் சிரிப்பதுகூடத் தமது கௌரவத்துக்குக் களங்கத்தை உண்டாக்கிவிடும் என்று எண்ணுபவர் கதிரேசன். இருந்தாலும் ஏழை வேலைக்காரனின் குழந்தை என்பதற்காக அவர் உமையை வெறுக்காமல் இருந்தாரே, அதுவே பெரிய காரியம்தான்!

அம்மாப்பேட்டையின் நிலை எப்படியாயினும் குழந்தை உமை எப்போதும் நல்ல ஆடை உடுத்திக் குதூகலமாகக் குதித்து விளையாடிக் கொண்டிருந்தாள். அக்குழந்தையிடம் அம்மாப்பேட்டை உயிரையே வைத்திருந்தாள் என்பதைச் சொல்லவா வேண்டும்! மற்றச் சிப்பந்திகளும் குழந்தையினிடம் மிகவும் அன்புடன் இருந்து வந்தார்கள். உள் விஷயம் தெரியாதவர்கள் உமை கதிரேசனின் குழந்தை என்றே நினைத்தனர்.

இவ்வாறு சிலர் நினைத்ததுதான் உமையின் உயிருக்கே உலையாக முடிந்தது.

ஒரு நாள் மாலை ஏழு, ஏழரை மணி இருக்கும். உமையைப் பூங்காவுக்கு அழைத்துச் சென்றிருந்த இரண்டு பையன்களும் அலறிக்கொண்டு ஓடி வந்தனர். "ஐயோ! குழந்தையை யாரோ தூக்கிக் கொண்டு மோட்டாரில் சென்று விட்டார்களே" என்று தட்டுத் தடுமாறிக் கொண்டு சொன்னார்கள். அவ்வளவுதான்; கதிரேசன் கடை அல்லோல கல்லோலப்பட்டது. சிலர் ஒன்றும் தோன்றாமல் பூங்காவுக்கு ஓடினர். கதிரேசன் கூடப் பிரமித்து உட்கார்ந்து விட்டார். எங்கு தேடியும் குழந்தை கிடைக்கவில்லை.

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. போலீசுக்கும் அறிவிக்கப்பட்டது.

பத்து நாட்கள் கழித்துக் கதிரேசனுக்கு மர்மமான ஒரு கடிதம் வந்தது.

"உங்கள் குழந்தையை நீங்கள் மறுபடியும் உயிருடன் பார்க்க வேண்டுமானால் ஐம்பதாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும். ஏழாம் தேதி இரவு பத்து மணிக்கு ஜூபா சதுக்கத்துக்கு மேற்கே ஒரு பையன் வெள்ளைக் குல்லாய் போட்டுக் கொண்டு நிற்பான். அவனிடம் தொகையைக் கொடுத்து விட்டால் நிச்சயமாக நீங்கள் குழந்தையைத் திரும்பப் பெறலாம். போலீசுக்கு அறிவித்துச் சூழ்ச்சி செய்தால், உங்களுக்குப் பெரும் அனர்த்தம் நேரும். கண்டிப்பாக அறியவும்."

கயிரன் கொள்ளைக்காரர்களிடமிருந்து வந்திருந்த இந்தக் கடிதத்தை வைத்துக்கொண்டு கதிரேசன் வெகு நேரம் உட்கார்ந்திருந்தார். அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லை. ஐந்நூறு, ஆயிரம் என்றாலும் கொடுத்துத் தொலைத்திருப்பார். ஒரு வேலைக்காரனின் குழந்தையை மீட்க ஐம்பதாயிரம் ரூபாய் கொடுப்பதா? உமை, தன் குழந்தையில்லை, வேலைக்காரனின் குழந்தை என்பதைக் கொள்ளைக்காரர்களுக்கு எப்படித் தெரியப் படுத்துவது? அவ்விதம் தெரியப்படுத்தினால் கேட்டுத்தொகை குறைந்து விடும். ஆனால், அதைத் தெரியப்படுத்துவதற்கு வழி எதுவும் அவருக்குப் புலப்படவில்லை.

மேற்படி கடிதம் கிடைத்த விவரம் கடையில் இருந்த ஓரிருவருக்குத்தான் தெரியும். எனவே, கதிரேசன் அவ்விஷயத்தை வேறு யாருக்கும் தெரியாமல், முக்கியமாக அம்மாப்பேட்டைக்குத் தெரியாமல் அமுக்கிவிட்டார்.

நாட்கள் ஆக ஆக, குழந்தை காணாமற் போனதால் கதிரேசன் கடையில் ஏற்பட்ட பரபரப்பு அடங்கத் தொடங்கியது.

குழந்தை போனது போனதுதான். அம்மாப் பேட்டை சம்பந்தப்பட்ட வரையில், இந்த உலகத்தையும் அவனையும் இணைத்திருந்த ஒரே ஒரு பிணைப்பும் அறுந்து விட்டது. எனவே, அவன் முப்பத்தைந்து வயதிலேயே வாழ்க்கையில் ஊக்கம், உற்சாகம் எதுவுமற்ற நடைப்பிணமாகி விட்டான்.

* * *

வருஷத்துக்கு வருஷம் கதிரேசனின் கை ஓங்கி வந்தது. யுத்த பீதி காரணமாக விலைவாசிகளும் ஏறத் தொடங்கியதால், அரிசி வியாபாரத்திலும் தேக்கு ஏற்றுமதியிலும் கதிரேசனுக்கு லட்சக்கணக்கில் லாபம் கிடைத்தது. ஏராளமான தொகையைப் பாங்கியில் போட்டார்; புதிதாக நிலங்கள் வாங்கினார்; வைரக் கற்களாக வாங்கி ஒருவருக்கும் தெரியாமல் இரும்புப் பெட்டிக்குள் வைத்தார்.

கதிரேசனுக்குப் பிரிட்டிஷ் அதிகாரிகள்கூட மரியாதை செலுத்தத் தொடங்கினர். பொது மக்களிடையே மாத்திரமல்ல, அரசாங்கத்தில் கூடக் கதிரேசனின் மதிப்பும் செல்வாக்கும் மேலே மேலே உயர்ந்து கொண்டே போயின.

இதுவரையில் நான் கூறிய வரலாற்றை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நண்பர் "அந்தச் சந்தர்ப்பத்தில்தான் யுத்தம் வந்ததோ?" என்று கேட்டார்.

"அதைச் சொல்லத்தான் வாயெடுத்தேன். அதற்குள் நீங்களே சொல்லிவிட்டீர்களே...... ஆமாம், கதிரேசனின் அதிர்ஷ்ட கிரகம் உச்சநிலையை அடைந்தபோதுதான் இரண்டாவது உலக மகாயுத்தம் மூண்டது. இதிலிருந்துதான் கதிரேசன் வாழ்க்கையின் இரண்டாவது அத்தியாயம் ஆரம்பமாகிறது" என்று கூறிவிட்டு மேலும் சொல்வதற்குத் தொடங்கினேன்:

அதுவரையில் பணக்குன்றின்மீதும் சுக போகங்களிலும் திளைத்துக் கொண்டிருந்த கதிரேசனின் ஆனந்த வாழ்க்கையில் யுத்தமானது பெரும் திருப்பத்தை உண்டாக்கியது.

பர்மாவில் கோர யுத்தம் நடந்ததால் கதிரேசனுக்குச் சொந்தமான பெரும்பாலான வீடுகளும் வெடிகுண்டு வீச்சுக்கு இலக்காகித் தரைமட்டமாயின. அவரது வியாபாரம் அடியோடு குன்றியது. யுத்தத்தின்போது கறுப்பு மார்க்கெட்டில் பலர் ஏராளமான தொகை சம்பாதித்தார்களெனினும், கதிரேசனுக்குப் பலவிதத்திலும் நஷ்டமேற்பட்டது. பதினாயிரக்கணக்கான அரிசி மூட்டைகளை ஜப்பானிய இராணுவ அதிகாரிகள் அதிகாரத்துடன் எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். இடிந்த பாலங்களைச் செப்பனிட்டதில் கதிரேசன் கடைத் தேக்குகள் காலியாயின. கதிரேசனுக்குச் சொந்தமான மோட்டார்களைக்கூட ஜப்பானியர்கள் இராணுவ உபயோகத்துக்கு எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள். எனவே, அவர் வீட்டிலேயே அடைந்து கிடக்கும்படி நேர்ந்தது.

எப்போதாவது குழந்தை உமையின் கொஞ்சும் முகம் அவரது அகக் கண்முன் வந்து நிற்கும். அவர் அப்போது அடையும் மனவேதனையை வர்ணிப்பதென்பது இயலாதகாரியம்.

இவ்விதம் கதிரேசன் வாழ்க்கையில் நாட்களும் மாதங்களும் ஓடிக் கொண்டிருந்தன. யுத்த காலத்தில் அவருக்கு நாலு ஆண்டுகள் செல்லுவது நாற்பது ஆண்டுகள் செல்வது போல் தோன்றியது.

கடைசியில் ஒரு வழியாக யுத்தம் முடிந்தது. கதிரேசனின் வாழ்க்கையின் மூன்றாவது அத்தியாயமும் ஆரம்பமாயிற்று.

யுத்தம் முடிந்ததும் கதிரேசன் பெருமூச்சு விட்டார். சில ஆண்டுகளில் தாம் இழந்த சொத்துக்களை மறுபடியும் பெற்றுவிடலாமென்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. ஆனால், அந்த நம்பிக்கை வீண் என்பது சில நாட்களில் தெரிந்து விட்டது.

அதன் பிறகுதான் கதிரேசனின் துரதிர்ஷ்டச் சக்கரம் வேகமாகச் சுழலத் தொடங்கியது.

கதிரேசனின் வியாபாரம் மீண்டும் உருவாவதற்குள் பர்மா சுதந்திரம் அடைந்தது. சுதந்திரம் அடைந்ததும் அடையாததுமாகப் பர்மிய சர்க்கார் புதிய புதிய சட்டங்களைக் கொண்டு வரலாயினர். அச்சட்டங்கள் இந்தியர்களை மிகவும் பாதித்தன. அதிகம் வளர்த்துவானேன்? பர்மா சர்க்காரின் நில ஆர்ஜிதச் சட்டத்தின் விளைவாகக் கதிரேசன் பெரும்பாலான ஸ்தாவர சொத்தையும், அதாவது பதினாயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களையும் சரியான ஈட்டுத் தொகை எதுவுமின்றி இழக்கும்படி நேர்ந்தது.

சென்ற மகாயுத்தத்துக்குப் பிறகு கதிரேசனுக்கும் எனக்கும் தொடர்பு இராமற் போய்

விட்டது. எனினும் பர்மாவிலிருந்து அப்போது வந்தவர்கள் மூலம், கோடீசுவரர் கதிரேசன் எல்லாச் சொத்துக்களையும் இழந்து விட்டார் என்று கேள்விப்பட்டேன்.

அதன்பின் இன்றுதான் எதிர்பாராதவிதமாக இங்கு இவரைப் பார்க்கிறேன்:

நான் இவ்விதம் சொல்லிவிட்டு நண்பரைப் பார்த்தேன். ''கதிரேசனைப் பற்றி எனக்குத் தெரிந்தவற்றைச் சொல்லி விட்டேன். பிறகு அவர் நிலை எப்படியாயிற்று? அவர் இங்கு வரக் காரணம் என்ன? என்ற விவரங்களையெல்லாம் தாங்கள்தான் சொல்ல வேண்டும்'' என்றேன்:

நண்பர் ஒரு கனைப்பு கனைத்தார்: 'கதிரேசன் வாழ்க்கையின் மற்ற அத்தியாயங்களை நான் கூறி விடுகிறேன்' என்ற பூர்வபீடிகையுடன் ஆரம்பித்தார்.

விதி அடிமேல் அடி அடித்ததன் காரணமாகக் கதிரேசன் துரும்பாக இளைத்து விட்டார். அவரது உடல் நிலையும் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. எனவே, தமக்கு உதவியாகக் கதிரேசன் இந்தியாவிலிருந்து தமது புதல்வன் சாத்தப்பனைத் தருவித்தார்.

சாத்தப்பனுக்கு அந்த வருஷம்தான் கல்லூரிப் படிப்பு முடிந்திருந்தது. எனவே தந்தைக்குத் தொண்டு செய்ய அவனுக்கு எவ்விதத் தடையும் இருக்கவில்லை.

இச் சந்தர்ப்பத்தில்தான் பர்மாவை அரசியல் பூகம்பங்கள் அல்லோலகல்லோலப்படுத்தலாயின. கரேன் கலகக்காரர்கள் பல நகரங்களைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பர்மா தலைநகருக்கும் ஆபத்து ஏற்படும் போலிருந்தது. பர்மா அரசாங்கம் கலகக்காரர்களை அடக்க முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது. பர்மா முழுவதும் கலகக்காரர்கள் வசமாகி அவர்களுடைய ஆட்சி ஏற்பட்டு விடுமோ என்று மக்கள் மனம் கலங்கினர்.

* * *

ஒரு நாள் இரவு பன்னிரண்டு மணியிருக்கும். கதிரேசன் மாளிகை ஒரு சிறிய போர்க்களமாகியது. கரேன் கலகக்காரர்களில் நூறு பேருக்குமேல் யந்திரத் துப்பாக்கிகளுடன் வந்து சந்தடியில்லாமல் வேலைக்காரர்களைமிரட்டிக் கதிரேசன் இருக்கும் அறையைக் காட்டி விடும்படி கூறினர். வேலைக்காரர்கள் நடுநடுங்கிப் போய் மாடியைச் சுட்டிக் காட்டினார்கள். ஆனால் அவர்களில் ஒருவன்மாத்திரம் இமை கொட்டும் நேரத்தில் மாடிப்படியில் ஏறி ஓடினான்.

''கொள்ளை கொள்ளை, கதவைத் தாளிட்டுக் கொள்ளுங்கள்'' என்று வீறிட்டுக் கத்தினான். கதிரேசன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து கதவைத் தாளிட்டார். ஆனால், அடுத்த விநாடி அந்த வேலைக்காரனின் உடல் துப்பாக்கி ரவைகளால் சல்லடைக் கண்கள் போல் துளைக்கப்பட்டு விட்டது. அவன்தான் அம்மாப்பேட்டை!

கலகக்காரர்கள் சந்தடி செய்யாமல் தங்கள் நோக்கத்தை நிறைவேற்ற முயற்சி செய்தார்கள்: அம்மாப் பேட்டை கூச்சலிட்டு விட்டதால் அவர்கள் அவ்விதம் செய்ய முடியவில்லை;

எனினும், சந்தடிக்கெல்லாம் அவர்கள் பயந்தவர்களா? ஒரு சர்க்காரையே ஆட்டிவைக்கும் வல்லமை வாய்ந்தவர்கள் அல்லவா?

அரைமணி நேரத்துக்குள் அவர்கள் தங்கள் வேலையை முடித்துக்கொண்டு போய் விட்டார்கள். உயிர் பிழைத்தால் போதும் என்று எண்ணிய வேலைக்காரர்கள் இரும்புப் பெட்டி இருக்கும் நிலவறையைக் காட்டவே, அதைக் கொள்ளைக்காரர்கள் உடைத்து ஏராளமான வைரக் கற்கள் அடங்கிய மூட்டையைத் தூக்கிக் கொண்டார்கள்.

கதிரேசன் அறையின் இரும்புக் கதவு தாளிடப்பட்டிருந்ததால், அவர்கள் அதை உடைக்க முற்பட்டு நேரத்தை வீணாக்க விரும்பவில்லை; ஏனெனில் அவரைக் காட்டிலும் பெரிய பொக்கிஷம் அவர்கள் கைக்குக் கிடைத்து விட்டது அல்லவா?

அரைமணி நேரம் கழித்து வேலைக்காரர்கள் வந்து கூப்பிட்ட பின்தான், கதிரேசனுக்கு உயிர் வந்தது. கொள்ளைக்காரர்கள் போய்



விட்டார்கள் என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்ட பின்தான் அவர் கதவைத்திறந்தார்.

கதவைத் திறந்ததும், அவர் கேட்ட முதல் கேள்வி 'சாத்தப்பன் எங்கே?' என்பதுதான். எல்லா வேலைக்காரர்களும் 'சின்ன எஜமான் எங்கே?' 'சின்ன எஜமான் எங்கே?' என்று கேட்டுக் கொண்டே அங்கும் இங்கும் ஓடினார்கள். பரபரப்பிலும் சந்தடியிலும் சாத்தப்பனை யாரும் கவனிக்கவில்லை. கடைசியாக அவன் அறைக்குச் சென்றபோது அந்த அறை அலங்கோலமாகக் கிடந்தது. சில நிமிஷ நேரத்தில் உண்மை தெரிந்து விட்டது. சாத்தப்பனைக் கொள்ளைக்காரர்கள் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள்.

கதிரேசன், 'சாத்தப்பா', 'சாத்தப்பா' என்று கதறினார். அன்றிரவே அவருக்குக் கடுமையான ஜுரம் ஏற்பட்டு விட்டது. ஜுரத்தில் தம் அருமைப் புதல்வன் பெயரையே முணுமுணுத்துக் கொண்டிருந்தார்.

பிரபல டாக்டர்கள் வந்து சிகிச்சைசெய்ததில் கதிரேசனின் உயிர் காப்பாற்றப்பட்டது. ஆனால், அவரது மன வியாதி குணம் அடைய வில்லை. புத்தி பேதலித்து விட்டது. கதிரேசன் சித்த சுவாதீனம் இழந்தார்.

* * *

'இப்போதுதான் கதிரேசன் வாழ்க்கையின் இறுதி அத்தியாயம் ஆரம்பமாகிறது' என்று சொல்லிக் கொண்டே நண்பர் மேலே தொடர்ந்தார் :

சாத்தப்பனைக் கொள்ளைக்காரர்கள் இழுத்துச் சென்று, நோய்வாய்ப்பட்டிருந்த தங்கள் தலைவன் முன்னிலையில் கொண்டுபோய் நிறுத்தினர். கோடீசுவரரான கதிரேசன் மீது வஞ்சம் தீர்க்க வேண்டும் என்று வெகுகாலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த தலைவனுக்கு அவரது புதல்வனைக் கண்டதும் மகிழ்ச்சி தாங்க முடியவில்லை.

"இவனை இழுத்துக் கொண்டுபோய்த் தனி அறையில் அடைத்து வையுங்கள். இரண்டு நாட்களில் முடிவு சொல்லுகிறேன்" என்றான் கள்ளர் தலைவன்.

உடனே கொள்ளைக்காரர்கள் சாத்தப்பனை முரட்டுத்தனமாக இழுத்துக் கொண்டு போனார்கள்.

இச்சந்தர்ப்பத்தில்தான் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. கொள்ளைத் தலைவனின் அருகிலிருந்த அவனது மகள் அந்த இளைஞனின் நிலையைக் கண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

தலைவன் திடுக்கிட்டான். அவனது கொலைகாரக் கல்நெஞ்சம் கரையத் தொடங்கியது. ஏனெனில், இதுவரையில் அவன் தன் மகள் அழுது பார்த்ததேயில்லை. அவள் அழுகை என்றால் என்ன என்பதே தெரியாமல் வளர்ந்தவள். அவ்வளவு செல்வமாக அவளை வளர்த்து வந்தான். எனவே, அவள் முன்பின் தெரியாத ஓர் இளைஞனின் நிலையைக் கண்டு விம்மி விம்மி அழத் தொடங்கியதும், தலைவனின் கண்கள் திடீரென்று திறந்தன.

"கண்ணே, அழாதே. என்ன செய்ய வேண்டும் சொல்லு" என்றான், அவள் தலையை அன்புடன் வருடிக் கொண்டே.

இந்த உலகில் அந்த ஒரு ஆத்மா விஷயத்தில் தான் அவன் மனத்தில் அன்புக்கு இடம் உண்டு.

"அந்த இளைஞனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடச் சொல்லுங்கள்" என்றாள், குப்பையில் தோன்றிய அந்த மாணிக்கம் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே.

இதைக் கேட்டதும் கொள்ளைத் தலைவனின் தலை சுழன்றது. அவன் கண் முன் ஒரு புதிய உலகம் தோன்றியது. தனக்கு வயதாகி விட்டது; இந்த உலக வாழ்வு இன்னும் அதிக காலம் இல்லை என்பதை அவன் உணர்ந்திருந்தான்; தன் மகளின் எதிர்காலத்தைப் பற்றிய ஒரு கவலையைத் தவிர அவனுக்கு வேறு எவ்விதக் கவலையும் இல்லை.

இப்போது அதற்கு ஒரு வழி பிறந்து விட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது. தன் மகளின் விதியைத் தன் சகாக்களின் கையில் ஒப்புவிக்க அவன் விரும்பவில்லை.

அதிகம் சொல்லுவானேன்? தலைவன் தன் சகாக்களிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். அவர்களும் தலைவனின் கடைசி விருப்பத்துக்குத் தடையாக இருக்கவில்லை. சாத்தப்பனும் தன் உயிரைக் காப்பாற்றிய பெண்ணை நிராகரிக்கவில்லை. அந்தப் பெண் தலைவனின் சொந்தப் பெண் அல்ல என்பதும், அவனது வளர்ப்புப் பெண் என்பதும் தெரிந்தபோது சாத்தப்பனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி கொஞ்ச நஞ்சமல்ல.

அந்தப் பெண் யாரோ பர்மியப் பெண்ணாயிருக்கும் என்று எண்ணுகிறீர்களோ? அது தான் இல்லை. அவள்தான் கதிரேசனின் வேலைக்காரர்களில் ஒருவனான அம்மாப் பேட்டையின் பெண்.

கொள்ளைக்காரர்கள் தூக்கி வந்தது ஒரு வேலைக்காரனின் பெண் என்பது பிறகுதான் தலைவனுக்குத் தெரிந்தது. எனவே, அவன் அதைத் தன் வளர்ப்புப் பெண்ணாகக் கொண்டான். கொடிய குணமுள்ள தலைவனுக்கு அன்பு செலுத்த ஒரே ஒரு குழந்தை கிடைத்தது. மனச்சாட்சியால் சித்திரவதைக்கு உள்ளாகிவந்த அவனுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

சாத்தப்பன், அழகிய பருவப் பெண்ணாக விளங்கிய உமையுடனும் பல லட்சக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள நவரத்தினக் கற்களுடனும் கொள்ளைக்காரர்களிடமிருந்து திரும்பி வந்ததைக் கண்டு ஊரே அதிசயத்தில் ஆழ்ந்தது.

ஆனால், பாவம் உமையைக் கண்டுகளிக்க அம்மாப் பேட்டை உயிருடன் இல்லை. கதிரேசனுக்கும் புத்தி பேதலித்து விட்டதால், சாத்தப்பன் உயிருடன் திரும்பி வந்ததைக் கண்டு ஆனந்தப்படுவதற்கு முடியாமல் போயிற்று.

சாத்தப்பன் பர்மாவில் மீதியிருந்த சொத்துக்களை விற்று விட்டு, சென்னைக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்த போது, ஒரு நாள் நடுநிசிக்குக் கதிரேசன் கப்பல் மேல்தளத்தின் ஓரத்தில் நின்று கொண்டிருந்தார். விழித்துக் கொண்ட சாத்தப்பன் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடிப்போய்ப் பார்த்தான். இன்னும் சிறிது தாமதித்திருந்தால், கதிரேசனைக் கடல் கொண்டு போயிருக்கும்.

வாரத்துக்கு ஒரு தடவை சாத்தப்பனும் உமையும் இங்கு வருவது உண்டு. கதிரேசன் குணமடையப் பதினாயிரக் கணக்கில் செலவு செய்யச் சாத்தப்பன் தயாராக இருக்கிறான்.

ஆனால், அவன் அவ்வளவு செலவு செய்ய வேண்டிய அவசியமில்லை. கதிரேசனின் நிலைமை நாளுக்கு நாள் குணமடைந்து வருகிறது. இன்னும் சில மாதங்களில் அவர் பூரணமாகக் குணமடைவார் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது.

இவ்விதம் என் நண்பர் கூறி முடித்ததைக் கேட்டபோது என் காதுகளையே நான் நம்ப முடியவில்லை. கதிரேசன் தெரிந்தோ, தெரியாமலோ தம்மை அதிர்ஷ்டசாலி என்று கூறியதில் தவறு எதுவும் இல்லை. அடியோடு பட்டுப்போன கதிரேசனின் வாழ்க்கை எதிர்பாராதவிதத்தில் மறுபடியும் துளிர்க்கத் தொடங்கியது பேராச்சரியம் அல்லவா?

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

